# விதி என்ன செய்யும்?



ஸ்ரீமதி. கிருஷ்ணா ஹத்தீஸிங்

மொழிபெயர்த்தவர் :

ஆ. காசிவிஸ்வநாதன்




நவயுகப் பிரசுராலயம், காரைக்குடி.

## பதிப்புரை

புதிய விஷயங்களைத் தெரிவித்தும், தெரிந்துள்ள விஷயங்களுக்குப் புது மெருகு ஏற்றியும் எழுதும் ஆற்றல், ஆசிரியரொருவருக்குச் சிறப்பியல்பாகக் கொள்ளத்தக்கதாகும். இவ் ஆற்றல் இந்நூலாசிரியை யிடத்துப் பூரணமாக விளங்குகிறது. இவரின் எழுத்தாற்றல் பற்றி, பேரறிஞர்களான டாக்டர். லின்-யூ-டாங், ஜவாஹர்லால்ஜி போன்றோர் பெரிதும் பாராட்டியிருக்கின்றனர்.

அறிவாலும், ஆற்றலாலும், செயலாலும் சிறந்த பெரியார்களின் சரிதங்களே மனிதவர்க்கத்தின் லட்சிய வாழ்க்கைக்கு வழித்துணைகளாகும். இத்தகைய சிறப்பியல்புடைய இந்நூலைத் தமிழ்மக்களும் படிக்குமாறு செய்யும் வாய்ப்புக் கிடைத்ததற்கு மகிழ்கிறோம்.

மூல நூலில் 'வருத்தமின்றியே' என்ற பொருள் தருமாறு தலைப்பு அமைந்திருக்கிறது. ஒலியும், சுவையும் கருதி, ஜவாஹர்லால்ஜியின் கருத்துப்படி, தமிழில் இந்நூலுக்கு, 'விதி என்ன செய்யும்?' என்று தலைப்புக் கொடுத்துள்ளோம்.

நண்பர். காசிவிஸ்வநாதன், இந்நூலை நன்கு மொழிபெயர்த்திருக்கின்றார். அவருக்கும், இந்நூலின் ஒவ்வோர் அத்தியாயத் தலைப்பிலும், நூலின் இறுதியிலும் உள்ள பெரியார்களின் வாக்குகளை மொழிபெயர்த்துதவிய திருநெல்வேலி, ஹிந்துக் கல்லூரி ஆங்கிலப் பேராசிரியர் திரு. அ. சீனிவாசராகவன் அவர்களுக்கும், இந்நூலின் மொழிபெயர்ப்பை மூலத்தோடு ஒப்பிட்டுப்பார்த்துதவிய அன்பருக்கும் எங்கள் நன்றி உரியதாகும்.

காரைக்குடி,
14-1-46.

நவயுகப் பிரசுராலயம்.

# முன்னுரை

முன்னுரை எழுதுவதற்கு அநேகமாக நான் இசைவதில்லை. கிருஷ்ணா ஹத்தி ஸிங்கை, அவள் பிறந்ததி லிருந்தே நான் அறிவேனாதலின், அவளது ஞாபகக் குறிப்புகள் அடங்கிய இந்நூலுக்கு எனது ஆசியைக் கோரியதும் நான் உடனே இணங்கிவிட்டேன்.

கடந்த ஆகஸ்ட் ஞாயிறன்று தேசத் தொண்டர்கள் பலர் சிறைப்பட்டார்கள்; கிருஷ்ணாவினுடைய குடும்பமும் சிறைப்பட்டது. தனிமையை அனுபவிக்க நேர்ந்த கிருஷ்ணா, தனது ஏக்கத்திற்கு ஓர் ஆறுதல் பெறலாம் என்ற எண்ணத்தோடு இந்த நூலை எழுதத் துணிந்தாள்.

கிருஷ்ணா இன்றும் இளமைப் பருவத்தினளே. அவள், தன் இளமைப் பருவ வாழ்க்கையைப் பற்றி ஒளிவு மறைவு இன்றி இந்நூலில் எடுத்துரைக்கின்றாள். வனப்பும், வாழ்க்கை வசதியும் நிறைந்த (ஆனந்தபவன்) மாளிகையில், கட்டின்றி, கவலையின்றி கிருஷ்ணா, தன் குழந்தைப் பருவத்தைக் கழித்தாள். இடையில், ஒரு பஞ்சை—ஆனால், மிக மிக ஆற்றல் வாய்ந்த மனிதர்—மகாத்மா, இவர்களுடைய குடும்பத்தில் ஒரு பெரும் மாறுதல் ஏற்படும்படி செய்தார். எந்நாளும் திருவிழாக் கோலம் பூண்டிருந்த இம்மாளிகை, தியாக நிலையமாகவும், கடும் போர்க்களமாகவும் மாறிற்று. மகாத்மாவினால் ஏற்பட்ட, அதிசயிக்கத்தக்கதும், நம்ப முடியாததுமான இந்தப் புது வாழ்க்கையில், கிருஷ்ணா, ஒட்டியும் ஒட்டாமலும் தனது கன்னிப் பருவத்தைச் சிறிது கஷ்டத்தோடு கழித்தாள். நோய்வாய்ப்பட்ட தனது மைத்துனியோடு சில காலம் சுவிட்ஸர்லாந்தில் இருந்ததைப் பற்றியும், தன் சகோதரர், தந்தை ஆகியோருடன் பிரான்ஸ், இங்கிலாந்து, ஜெர்மனி, ரஷ்யா முதலிய நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்ததைப் பற்றியும், அக்காலங்களில் தான் சந்தித்த பெரியார்களைப் பற்றியும் கிருஷ்ணா இந்நூலில் குறிப்பிடுகின்றாள். பெண்கள் சிறையில், சத்தியாக்கிரகக் கைதியாய் இருந்து, தான் பெற்ற அனுபவங்களையும், சமூகக் கட்டுப்பாட்டை மீறிய தன் காதலையும், அதன் விளைவாக ஏற்பட்ட விவாகத்தையும், பழக்க மில்லாத நகரங்களிலே, முன்பின் பழக்க மில்லாதவர்களுடன், தான் நடத்திவந்த வாழ்க்கையையும் பற்றி இதில் குறிப்பிட்டிருக்கின்றாள். தேச சேவைக்குத் தன்னை முற்றிலும் அர்ப்பணம் செய்துகொள்ள முடியாமல் தடைப்படுத்திய தன் ஆண்

குழந்தைகளான ஹர்ஷா, அஜித் ஆகிய இருவரையும் நமக்கு அறிமுகப்படுத்துகின்றாள். அன்பு மிக்க பெற்றோரும், பிறரும் உயிர் நீத்த காலங்களில் இவள் பெருக்கிய கண்ணீர், அங்கு மிங்கும் இவ் ஏடுகள் சிலவற்றை நனைக்கின்றது.

கிருஷ்ணாவின் சொந்தக் கதையான இது, நேரு குடும்பக் கதையோடு சேர்த்தே இழைக்கப்பட்டிருக்கிறது. எனவே, இந் நூலைப் பொதுமக்கள் பெரிதும் மதித்து வரவேற்பார்கள்.

கால் நூற்றாண்டுக் காலமாக இந்தியாவின் விடுதலைப் போராட்டக் கதையின் ஜீவாதாரமான அறிகுறியாகவும், அதன் பெரும் பகுதியாகவும் இருப்பதுதானே நேரு குடும்பத்தின் கதை?

தெளிவாகவும், குறிப்பாகவும் எழுதப்பட்டுள்ள இவ் வாழ்க்கை நூலில், சிறப்புவாய்ந்த மோதிலால் நேருவை, தாம் அளவு கடந்து நேசிக்கும்—தம்மைத் தொழுது போற்றும்—குடும்பத்தின் சர்வாதிகாரியாகவும், தயாள சித்தமுடைய சரசமான குடும்பத் தலைவராகவும், எப்பொழுதும் ஒரே விதமாக மிக்க அன்போடும், மகிழ்ச்சியோடும் குடும்பத்தில் அவர் கொண்டுள்ள உறவில் நாம் காண்கிறோம். மோதிலால் நேருவின் சிறந்த பல குணங்களில், அவரது குடும்ப பாசத்தின் பெருமை ஒப்பற்றதென்று மகாத்மாவும் பாராட்டியிருக்கிறார்.

சர்வதேச சமத்துவ, சுதந்திரத்தில் ஆர்வம் மிக்கவரும், எதைக் கண்டும் கலங்காத போர்வீரருமாகிய ஜவாஹர்லால், தமது வன்மைமிக்க வாளை உறையிலிட்டும், போர்க் கோலத்தைக் களைந்துவிட்டும், இங்கு, ஒப்புயர்வற்ற புதல்வராகவும், உடன்பிறந்தாராகவும், கணவராகவும், தந்தையாகவும், நண்பராகவும், சின்னஞ்சிறு குழந்தைகளுக்கு ஏற்ற விளையாட்டுத் தோழராகவும் திகழ்கின்றார்.

ஜவாஹரின் காதல் மனைவியும், வீராங்கனையுமான கமலா, மிக இளம் வயதிலேயே இறந்ததால் ஏற்பட்ட துக்கமும், அதனாலெழுந்த உருக்கமும், தேசத்தில் முன்னமேயே பாட்டுக்களிலும், கதைகளிலும் இடம் பெற்றுவிட்டன. இந்த நூலில் கமலாவைப் பற்றிய மிருதுவான, அன்பு நிரம்பிய எழுத் தோவியத்தையும் கிருஷ்ணா வரைந்திருக்கின்றாள்.

விஜயலட்சுமி என்று இப்பொழுது அழைக்கப்பெறும் சுவரூப், இந்தக் கதையில், மின்னுகின்ற ஓர் இழையைப்

போல் செல்வதையும், இந்திரா, குங்கும வர்ண மணக் கோலப் புடவையுடன் மதுரமான தோற்றத்தில் நம் கண் முன் சற்றுத் தோன்றி மறைவதையும் நாம் இதில் காண் கிறோம்.

ஆனால், என்னைப் பொறுத்தமட்டில், சிறிய, உத்தம மான—அன்பாலும், நம்பிக்கையாலும் அதிசயிக்கத் தக்க வாறு தைரியத்தையும், பொறுமையையும் பெற்ற—மோதி லாலின் மனைவியாரும், ஜவாஹர்லாலின் தாயாருமான, வயது நிரம்பிப் பல துன்பங்களை அடைந்த அம்மையைப் பற்றிய நினைவே மற்ற எல்லோரினும் மதிப்பில் சிறந்ததாய் விளங்குகின்றது. இளமையிலும், நடுத்தர வயதிலும், ஒரு தந்தப் பேழையிலுள்ள ஆபரணம் என்னும்படியாகக் காத் துப் போற்றப்பெற்று வந்த இவ்வம்மை, முதிர்ந்து தளர்ந்த வயதிலே, செங்குத்தான-அபாயம் மிக்க-விடுதலைப் பாதை யில் ஒரே மூச்சாய் இறங்கிய வீரர்களுக்கு ஒரு மணி விளக்கேபோன்று வெளிச்சம் தந்து ஊக்க மூட்டுபவளாகத் தாமாகவே தம்மை ஆக்கிக்கொண்டார்.

இவ்வம்மையாருடைய தமக்கையின் சரித்திரமும் போற்றத்தக்கது. இளமையில் கைம்பெண்ணாகி, தனது வாழ்க்கையை நேரு குடும்பத்தின் நலனுக்கே ஒப்படைத்து, ஓய்வு ஒழிவற்றுச் சேவை செய்து, தங்கையின் இறுதிக் காலத்தில் தன் கடமைகளைச் செய்து, தங்கை இறந்த இருபத்துநான்கு மணி நேரத்திற்குள், வாழ்க்கையில் இணை பிரியா திருந்ததைப்போல் இறப்பிலும் தம் தங்கையைப் பிரியாதவராய் இறந்தார் இவ்வம்மையார்.

எழுச்சியைத் தரும் இக் குடும்பத்தாரின் சரித்திரக் காட்சியில் மனித வாழ்க்கையினின்று விலக்க முடியாத விதி யின் பிரகாசமிக்க ஒளிகளையும், குறைந்த ஒளிகளையும், மங்கிய, ஆழ்ந்து பரவிய நிழல்களையும் காணலாம்.

அச்சால் கோக்கப்பட்ட சொற்கள் இங்கு முடிவடை கின்றன; ஆனால், நேரு குடும்பத்தின், உயிர் குன்றாத வாழ்க்கைச் சரிதம் இன்னும் வளர்ந்துகொண்டிருக்கின் றது. கீர்த்திமிக்க தந்தையும் மகனும் நிலைநாட்டிய பாரம் பரியமான தேசபக்தி, இவர்களுடைய வழியிற் பிறப்பவர் களால் பெரிதும் பாராட்டிக் கௌரவிக்கப்படும்.

—சரோஜினி நாயுடு.

# அணிந்துரை

—௱—

சிறந்த சித்திரங்களுக்குச் சாதாரணச் சட்டங்களே போதுமானவை; பொருத்தமாக அமைந்த சட்டம், தன் பாலன்றி, சித்திரத்தின் பேரிலேயே பார்ப்பவரின் பார்வை விழுமாறு செய்யும். கிருஷ்ணு ஹத்தீஸிங், தமது சரித்திரத்தில் ஆங்காங்கு சில விரிவுரைகளைச் சேர்த்திருக்கின்றார்; இவை, அச்சரித்திரத்தின் நுட்பங்களையே எடுத்துக் காட்டுகின்றன. சரித்திரம் தானாகவே உருவகப்படுகிறது. இது ஒரு பெரிய மாளிகையைப் பற்றிய நாடகம். இம்மாளிகையில் வாழ்பவர்களான தேச சரித்திரத்தில் இடம் பெற்றவர்கள், அரங்கத்து நடிகர்கள். ஈதல்லாமல், இச்சரித்திரத்தில் இந்திய நாடு வாழ்கின்றது; வாழ்ந்து, இதற்கோர் உருவமும் கொடுக்கின்றது. கோடிக்கணக்கான மக்களுடைய உள்ளத்தின் சின்னம்—இன்ப இல்லம்—'ஆனந்த பவனம்', இந்நாட்டில் எழுந்து பரவிய பல இயக்கங்களுக்கும் ஒளி வீசும் நடு நிலையமாக இருந்திருக்கிறது; மேலும், அது தோற்றுவித்த ஆக்க சக்தி, விழிப்படைந்த மக்களை, அவர்களின் கஷ்ட நஷ்டங்களி லிருந்து எளிதில் மேம்படச் செய்திருக்கிறது. நந்தவனமும், அங்கு காணப்படும் காலை நேரத்தின் வனப்பும் சித்திரங்கள்போல் காணப்படுகின்றன; பொதுமக்களின் ஒருமித்த மனத்தின் ஒளி, அம் மாளிகையின் பரந்த அன்பு எல்லை முழுதும் அமோகமாக வீசுகின்றது; நாட்டு மக்களுடைய வாழ்க்கை விதிப்போக்கின் துன்பமிக்கனவும், மிக முக்கியமானவையுமான நிகழ்ச்சிகள் அங்கு உருவாக்கப்படுகின்றன; மாளிகை எங்கணும் ஆச்சரியமான சுறுசுறுப்பு காணப்படுகிறது.

மாளிகை முழுதிலும் அமைதி—பொதுமக்களுக்கு முற்றிலும் புலனாகாத வகையில் நெருங்கிய உறவினர் இறந்துபடும் வேளை—இப்படி ஒரு காட்சி.

தன் அன்பின் பெருக்கத்தை வெளியிட முயலுகையில், இம்மாளிகையிற் பிறந்த மங்கை (கிருஷ்ணு), அதிலுள்ள பல முற்றங்களையும், நடைகளையும் நமக்குக் காண்பிக்கின்றாள்; அங்கு சில அறைகளில், உறுதியோடும் உண்மையோடும் பல திட்டங்கள் உருவாக்கப்படுகின்றன; இவ்வறைகளையும் நாம் காணுகின்றோம். அறிவு வளர்ச்சி பற்றிய விஷயங்களுக்கு எந்தவிதத்திலும் குறைந்ததல்லாதனவான அக்குடும்பத்துச் செய்திகள் நேரிய கலைத்திறனோடு நமக்கு விளக்கப்படுகின்றன. ஆனந்தபவனத்தின் வாயிற்

படியைத் தாண்டி வெளியே வந்துவிட்ட பின்னருங்கூட, இந்நூல் வாயிலாக நம் அன்புக்குப் பாத்திரமான இம் மாளிகை நம் அருகாமையிலேயே இருக்கிறது.

கிருஷ்ணு, இதில் தன் தந்தையைப் பற்றியும், சகோதரரைப் பற்றியும் அரைகுறையாக வன்றி மிக விளக்கமாக எழுதியிருக்கின்ருள். இவர்களை உலகம் நன்கு அறியும்; எனினும், வெளியி லுள்ளவர்கள் நெருங்கிப் பழகி அறிந்து கொள்ள முடியாத விஷயங்களையும் தெளிவாக்கி, இவர்களுடைய உண்மையான தோற்றங்களையும், இயல்புகளையும் நமக்கு எடுத்துக் காண்பிக்கும் வாய்ப்பு இந்நூலாசிரியைக்கே உரித்தாகின்றது. இரத்தக் கலப்புடைய உறவையும், அனுபவத்தையும் துணையாகக் கொண்டு இந்நூலை கிருஷ்ணு எழுதியிருக்கிருள். இவற்றினும் சிறந்த—அன்றி, உயர்ந்த—கலைத்திறன் எதுவும் ஓர் ஆசிரியருக்குத் துணைக் கருவியா யமைய முடியாது. அரிய கடிதங்களையும், நினைவிலிருந்த உரையாடல்களையும், விரைந்து எழுதிய நிகழ்ச்சிகளையுங் கொண்டு, கிருஷ்ணு, தன் தந்தை, சகோதரர் ஆகியவர்களது வரலாறுகளை—அதாவது ஆரம்பமுதல் இன்றுவரைக்குள்ள வரலாறுகளை—நமக்குக் கூறுகின்ருள். முன் எப்பொழுதையும்விட இப்பொழுது அவர்களைப் பற்றி மிக மிகக் குறைவாகவே கூற அனுமதிக்கப்படுகிறது. இந்த அளவில் நின்றே, கிருஷ்ணு, அவர்களைப் பற்றி எழுதியிருக்கின்ருள். ஜவாஹர்லாலைப் பற்றி நன்ருக அறிந்துகொள்ள முடியாமல், நாம் தடைப்படுத்தப்பட் டிருக்கிருேம்; ஒரு வேளை, பொறுக்க முடியாத இவ் இருட்டடிப்பே, இந்நூலில் ஜவாஹர்லாலைப் பற்றி எழுதப்பட்டுள்ள ஒவ்வொரு சொல்லையும் வாய்விட்டுச் சொல்ல முடியாத ஒளியோடு விளங்கச் செய்கிறதுபோலும்! ஒப்பற்ற கலைத்திறம், கம்பீரம், பொறுத்தாளும் தன்மை முதலியனவற்றில் ஒப்புவமை யற்ற ஜவாஹரின் சமீபத்திய கடிதங்களில் உள்ள திரட்டுக்களை, துக்கமும் இன்பமும் ஒருங்கே எழுகின்ற முறையில், நாம் இங்கு படிக்கின்ருேம்.

மறக்க முடியாத பல சித்திரங்களை நாம் இந்நூலில் காண்கின்ருேம். இந்நூலாசிரியை யுடைய அன்புமிக்க தாய், பெரிய தாய்—இவர்களின் சித்திரங்கள் தனிச் சிறப்புப் பெறுகின்றன. நம்முடைய நினைவிலே நிலைத்து நிற்கும் அப்பேரில்லத்திலே அவர்கள் என்றென்றும் வாழ்கிருர்கள். கிருஷ்ணு, குறிப்பிடத்தக்க தனது அனுபவங்களைக்கொண்டு

குடும்பத்தவ ரல்லாத பலரைப் பற்றி எழுதியுள்ள மிகச் சிறந்த சித்திரங்களும், கதை அமைப்பில் பொருந்தியிருக்கின்றன.

ஒரு புதுமை என்ன வென்றால், இது ஓர் அரசியல் நூலன்று; எனினும், ஒருவகையில் இது ஓர் அரசியல் நூலைத் தவிர வேறல்ல. இதுதான் உண்மை; ஏனெனில், அரசியல் நம்முடைய வாழ்நாளோடு ஒன்றாகிக் கலந்து விட்டபின், தனிப்பட்ட அரசியல் என்பது இல்லாது மறைந்துவிடுகிறது. இதனை நாம் வெவ்வேறாய்ப் பிரித்து உணர முடியாது. மேலும், தத்துவங்கள் அல்லது நிகழ்ச்சிகளின் முக்கியத்துவத்தைக் கொண்டும், அரசியல் அம்சத்தைக் கற்பிதம் செய்ய முடியாது. இந்நூலில், குறிப்பிடத் தக்க பல நிகழ்ச்சிகள் இருக்கின்றன. இந்நிகழ்ச்சிகளில் ஒவ்வொன்றும், தேச சீர்திருத்தம் என்னும் அரங்கிலே இந்தியாவின் விதியை விளக்கி நடித்திருப்பதாய்க் காணப்படுகிறது. இவை புறம்பாக இருந்து வந்தவை யன்று; இந்நாட்டையே கலக்கிய பல சம்பவங்கள்தான் இந்தக் கதை அமைப்பிலே தவிர்க்க முடியாதவாறு இடம் பெற்றிருக்கின்றன. வீர வாழ்க்கையை இலட்சக்கணக்கான மக்கள் மேற்கொள்ளும்போதும், வீரச் செயல்கள் தினசரி நிகழ்ச்சிகளாகும்போதும் வெறும் உணர்ச்சிமயமான அரசியல் ஆரவாரங்களும், மிகப் பயங்கரமான பயமுறுத்தல்களும் நாணி மறைகின்றன. தமது தியாக வாழ்க்கையில், தனி முறையிலும், நாட்டுக்காகவும் பெரும் பொறுப்புக்களையும் சோதனைகளையும் நித்திய தனிப் பெரும் உரிமையாக மேற்கொண்ட குடும்பங்களுக்கு இவ்வுண்மை சிறப்பாக உரியது. சோதனையின் விளைவுகளைக் குறித்துக் கூறும் போது, பெரிய தேசிய காரியங்களில் முழுதும் ஒன்றிய மனப்பான்மையில் மட்டுமே உண்டாகும் பற்றற்ற நிலையில், 'மாசற்ற நோக்கை'யே கொண்டிருக்கிறாள் கிருஷ்ணா. அவ்வளவில், அதைக் குறித்து அவள் இயற்கையாகப் பேச முடிகிறது. தனி மனிதர்களுக்கும் பொதுமக்களுக்கும் இழைக்கப்பட்ட குற்றங்களை அவள் எதிர்க்கும்போது, அவளது கோபத் தீ கொழுந்துவிட்டு எரிகிறது; வார்த்தைகள் ஆழ்ந்த, இதயபூர்வமான நம்பிக்கையோடு வெளியாகின்றன. ஆனால், கொள்ளை கொள்ளப்பட்ட மனத்தை உடையவர்களான வாசகர்கள், தற்சரிதையின் போக்குக்கு முற்றும் ஒத்த உண்மைகளி லன்றித் தனித்த பிறவற்றில் தம் கருத்தைச் செலுத்தாதபடி, நிகழ்ச்சிகளின் உள்

நோக்கில் ஆழ்ந்து, விஷயங்களை அவள் எடுத்துக் கூறுவது பரிபூரணமாக இருக்கிறது.

தனக்குப் புறம்பான சில சம்பவங்களையும், அவற்றைத் தான் உணரும் தன்மையையும் ஒன்றுபடுத்தி எழுதும் திறமை இவ்வாசிரியைக்கு உண்டு என்பதற்கு, லட்சுமண புரி மத்திய சிறையைப் பற்றிய இவளது வர்ணனையே உதாரணமாகும். தாய்நாட்டை நேசித்த குற்றத்திற்காகவோ, தூய அன்போடும் தந்நலத் தியாகத்தோடும் மக்கட்குச் செய்த பணிக்காகவோ அல்லாமல், உண்மையாகவே கொடும் செயல்களைப் புரிந்த குற்றத்திற்காகச் சிறைப்படுத்தப்பட்ட, பரிதபிக்கத்தக்க பல சகோதரிகளோடு இந்நூலாசிரியை பல மாதங்கள் அங்கு வாழ்ந்திருக்கிருள். உணர்ச்சி பொங்கி வழிய, அக்கதை மிக உயர்ந்த முறையில் கூறப்படுகிறது. இவ்வாசிரியை கண்டவைகளையும், உணர்ந்தவைகளையும், நாகரிகம் வாய்ந்த நமது சமூகத்தில் பக்குவப்படாத பகுதியினரது தற்காலச் சிக்கலான பிரச்சினைகளை அவள் தன் அறிவால் பிரித்துக் காட்டும் தன்மைகளையும் பற்றி, பிறர் திரும்பச் சொல்ல முடியாதபடி அத்துணைச் சிறப்போடு இந்நூலில் எழுதியிருக்கின்ருள். ஆகையால், அவைகளை இப் புத்தகத்தில் படித்துத்தான் தெரிந்துகொள்ள வேண்டும். அரசியல் அல்லது சமூக இயல்—நீங்கள் எப்பெயரால் குறிப்பிடினும் சரி—அது எப்படி இருக்க வேண்டுமோ அப்படி எழுதப்பட்டிருக்கிறது இந்தப் புத்தகத்தில். பாச்சூலியின் கதை, நாம் நமது கடமையினின்றும் தப்பித்துக்கொள்வதற்காகத் தத்துவங்களையும், இலட்சியங்களையும் வகுக்கும் பொய்மையை எளிதில் வென்றுவிடுகிறது. உணர்ச்சி யற்ற, பொறுப்பற்ற சமூகச் சட்ட திட்டங்களால் நசுக்கி ஒதுக்கித் தள்ளப்பட்ட ஓர் இருள் சூழ்ந்த ஆன்மா நம்மை அழைக்கிறது. அரைகுறையான மனிதத்தன்மை வாய்ந்த ஒரு கூட்டத்தாரும், பழிக்குப் பழி வாங்கும் முறையையல்லாது, அன்புடன் சீர்திருத்தும் முறையையே கையாள வேண்டு மென நாம் எண்ணுகிருேம். உயரமான மதிற் சுவர்கள் இக் காட்சியை மறைக்கின்றன. அம்மங்கிய உருவங்கள் பல வருஷங்கள் இருந்து வாழவேண்டிய சிறைச்சாலையின் இரும்புக் கதவுகளை, ஆசிரியை கடைசி முறையாகப் பார்க்கிருள். அவளது கால்கள் நடக்க மறுத்தன. அவள் நடந்து செல்லவேண்டிய பாதை, அந்நிமிஷத்தில் அவளுக்குப் புலனுகவே இல்லை. இக்காட்சி உலக அனுபவமாக நம்முன் உருக்கொண்டு தோன்றுகிறது. சிறை

வாழ்க்கையில் ஆசிரியை செய்யக் கருதும் சீர்திருத்தங் களும், தண்டனை காலம் முடிந்து வெளிவந்த பிறகு கவனிக்க வேண்டிய முறைகள் எனக் கூறுவனவும் முழுதும் வெற்றியடையா எனினும், நமது பொறுப்பை நன்கு விளக் கிக்காட்டுகின்றன.

ஒரு கலைஞனின் உணர்வோடு எழுதப்பட்ட, உயிர் படைத்த வாசகங்களா லாகிய இந்நூல், தன் திறமையைக் காட்டுவதற் கன்றி உணர்ச்சியை வெளிப்படுத்தற்காகவே எழுதப்பட்டதாகும். இதற்கு வாசகர்கள் நன்றி கூறு வார்கள். முன் பின் பகுதிகளிடைப் பொருத்தத்தை நோக் காமலும், முன்னதாகவே தயாரித்துக்கொள்ளாமலும் — அதாவது, ஜீவனுள்ள நடையில் - எழுதப்பட்டிருக்கிறது இந் நூல் என்பதை, இதன் நடை நன்கு காட்டுகிறது. இன்ன காரணங்களால் இவை நிகழ்ந்தன என்று இவள் கூருமலே, காரணங்கள் தாமாகத் தோன்றுகின்றன. மேலும், முயன்று விஷயங்களைப் பொறுக்கித் திரட்டியும் இவள் இதை எழுத வில்லை. ஓர் உள்ளப் போக்கின் சரித்திரம் இந்நூலில் செம்பாகமாய்த் தவழுகிறது. பக்கத்திற்குப் பக்கம் காட்சிகள் வேறுபடுகின்றன; எனினும், கடந்த கால சம்ப வங்களைப் பற்றிய நினைவுகளைக் கூறும் முறை நமக்குப் பூரண அளவில் இன்பமூட்டப் போதியதாக இருக்கிறது. ஐரோப்பாவில் தான் செய்த சுற்றுப்பிரயாணத்தைப் பற்றியோ, அலுவல்களைப் பற்றியோ, இளமையில் தான் செய்த துஷ்டத்தனங்களைப் பற்றியோ, கலையழகுடன் கூடிய தனது பொழுதுபோக்குகளைப் பற்றியோ எழுதும் போது இவள் நம்மை எவ்வளவு களிப்படையச் செய்கின் ருள்! தன் குழந்தைகளைப் பற்றியும், தன் வீட்டைப் பற்றி யும், தன் கணவனுடைய சுயநலமற்ற தியாகத்தைப் பற்றி யும் எழுதும்போது நாமும் கூட இருந்து அவ்விரகசியங்களை அறிந்துகொண்டது போன்ற உணர்ச்சி ஏற்படுமாறு எழுதி யிருக்கிருள். இவற்றிற்காகவும், பிறவற்றிற்காகவும் இந்தச் சுயசரிதையைப் படிப்பவர்கள் நன்றிபாராட்டுவார்கள்.

ஆடம்பரமற்ற சட்டத்தில் பொருத்தப்பட்ட ஓர் அழகிற் சிறந்த ஓவியம் போன்றது இந்நூல் என்றே இதனை நாம் கருதவேண்டும். புதியதும் வேறு வகையானதுமான பல சித்திரங்களையும் ஏன் இக்கை தீட்டக்கூடாது என்று கேட்பதற்கு நியாயமில்லை. ஆனால், உண்மையில் இக்கதை நம்மை அவ்வாறு எதிர்பார்க்கும்படி செய்கிறது. கலை நோக்குடன் பார்த்தால் இந்நூல் முற்றுப்பெற்றதே. ஆனல், இதில் காணப்படும் பலருடைய வரலாறுகள் தனி

நூல்களாக வெளியிடப்பட வேண்டியவை. இவையும், அகில இந்தியாவுக்கும், புதிய உலக சமுதாயத்திற்கும் உரியவையே. இந்நூலின் பிற்பகுதி எழுதப்பெற்று முடிவடையுங் காலத்தில், நாம் எதிர்பார்ப்பதுபோல், புனிதமான புகழுடையோரை மறைப்பதற்காக, வேண்டுமென்றே சிருஷ்டிக்கப்பட்ட இருட்படலம் அகற்றப்படலாம். களங்கமற்ற ஆகாயம், உண்மைகளைப் பற்றிய முழு விவரத்தையும் வெளிப்படுத்தும். அப்பொழுது ஆயுதந் தாங்கிய மூர்க்கர்களால் அவ்வுண்மைகளை மறைக்க முடியாது. பெரிய, மனித இலட்சியங்களுக்காக உழைத்து, தீமையின் சக்தியைப் போக்குவதற்காக அரும் பெரும் தியாகங்களைச் செய்து, எதிர்கால நாகரிகத்திற்கு வழி காட்டிய—ஏற்கெனவே நமது உள்ளத்தில் குடிகொண்டிருக்கும்—பெரியார் பலரை நாம் நமது வீடுகளுக்கே வரவேற்போம். ஆனால், நமது வேதனையிலும் ஆன்ம எழுச்சியிலும் இன்று இந்நூலைப் படித்து ஆக்கம் பெறுவோமாக. இந்த யுகத்தைச் சீர்ப்படுத்தத் தோன்றிய—இப்பொழுது நமக்காகக் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கிற—ஒப்புயர் வற்ற பெரியாரது வாழ்க்கையும், அவரது குன்றாத ஒழுக்கத்தால் ஆவேசம் பெற்ற பிற பெரியார்களது சரித்திரங்களும், தடுமாறிக்கொண்டிருக்கும் மனித வர்க்கத்திற்குத் தரும் ஆக்கந்தான் அது. செயலி லிருந்து நம்பிக்கையைப் பிரிக்க முடியாது என்பதற்கு இச்சுயசரிதமே ஒரு சான்றாகும். இந்த நம்பிக்கையை ரவீந்திரர், "அன்பின் அளவிலாத் துணிவு" என்று கூறுகிறார்.

—அமிய சக்கரவர்த்தி.

# இந்நூல்

என் கணவர் மூன்று ஆண்டுகளுக்கு முன்னர் இந் நூலை எழுதி முடிக்கும்படி என்னைத் தூண்டினார். நானும் இத்தகைய ஒரு சரித்திரத்தை எழுதவேண்டும் என்று பல முறைகள் நினைத்ததுண்டு. ஆனால், அக்காலத்தில் இதற்கு முயற்சிசெய்ய வில்லை. 1941ல் *ராஜா சிறைப்பட்டார்; நான் தனியளானேன். பிறகு, இதனை எழுதும் முயற்சியில் தலைப்பட்டேன். இரண்டு அத்தியாயங்கள் எழுதினேன்; என் மூத்த மகன் விஷக் காய்ச்சலால் பிடிக்கப்பட்டான்; என்றால் தொடர்ந்து எழுத முடியாமற்போயிற்று. ராஜா விடுதலை யடைந்தார். நாங்கள் இருவரும் குழந்தையைப் பற்றிய கவலையில் பல மாதங்கள் ஆழ்ந்துவிட்டோம். குழந்தை நோயிலிருந்து தேறிய பின்னரும், எனது நூலைத் தொடர்ந்தெழுதி முடிக்கப் போதிய அமைதி யில்லை.

ஓராண்டு கடந்தது. கால வரம்பின்றி ராஜாவுக்கு மீண்டும் சிறை வாழ்க்கை அளிக்கப்பட்டது. மறு முறை யும் நான் தனியளானேன். சில மாதங்கள் என் மனத்தில் துன்பமும், அமைதியின்மையும் குடிகொண்டன. எந்த வேலையிலும் மனத்தை ஈடுபடுத்த முடியவில்லை. ஆனால், கொஞ்சங் கொஞ்சமாகப் புதிய நிலைமைகளோடு ஒட்டிவாழ மனம் பழகிவிடுகிறது. காலக் கழிவு ஒரு சுமையாக என்னை வருத்திவந்தமையால், தொடர்ந்து இந்நூலை எழுத முடிவு செய்தேன். வெள்ளம்போன்று திரண்டு எழுந்த பண்டைய நினைவுகளையும், எண்ணங்களையும் நான் எழுதியதன் பயனாய், எனது வாழ்க்கையின் தனிமைக்கு ஓரளவு ஆறுதல் உண்டாயிற்று. இந்நூலை எழுதுவதில் நான் மிக மகிழ்ச்சி யோடு ஏற்றுக்கொண்டிருக்கக் கூடிய என் அண்ணாவின் அழுத்தமான ஆராய்ச்சி யுரைகளும், என் கணவரின் உதவி யும் எனக்கு அறவே கிடைக்காதுபோயிற்று.

நான் என் செய்வேன்? எழுதியவற்றைத் திருத்தம் செய்யும் வகையிலும், நல்ல கருத்துக்களை எடுத்துக் காண் பிக்கும் வகையிலும் எங்கள் நண்பர் ஒருவர் எனக்கு உதவி செய்திராவிட்டால், இந்நூல் இவ்வளவு விரைவில் முடி வடைந்திராது. சொல்ல வொண்ணாத் துயரத்தில் ஆழ்ந்து எதையுமே செய்யத் தோன்றாமல் இருந்த காலத்தில், இவருடைய உதவி, அறிவுரை, குன்றாத ஈடுபாடு இவை பெரிதும் எனக்குத் துணையாய் நின்றன.

---

*இந்நூலாசிரியையின் கணவர்.

'அமியதா' என்று என்னால் அழைக்கப்பெறுபவரும், நான், எனது குரு என்று எண்ணுபவருமான டாக்டர். அமிய சக்கரவர்த்திக்கு மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். இவரும் பல ஆண்டுகளாக என் பண்டைய நினைவுகளைப் பற்றி ஒரு நூல் எழுதுமாறு என்னைக் கேட்டுக்கொண்டுவந்தார். ஆனால், அதை என்னால் செய்யமுடியாதென எனக்குத் தோன்றிற்று. எழுதும் திறமை எனக்கு உண்டு என்பதில் இவர் வைத்திருந்த அசையாத நம்பிக்கை ஒருவாறு எனக்குப் பலமளித்தது. இவர் சொற்படி நான் நடந்துகொள்ள வில்லையெனினும், எனக்குக் கடிதம் எழுதும்போதெல்லாம், அமியதா இந்நூலை வரையுமாறு என்னை வற்புறுத்தி வந்தார். எரவாடா சிறையிலிருந்து ராஜாவும் என்னை ஊக்குவித்தார். எனவே, சிறிது தயக்கத்தோடு இந்த அலுவலை மேற்கொள்ளத் துணிந்தேன்.

இந்நூலுக்கு ஓர் அணிந்துரை எழுதி, அமியதா என்னைக் கௌரவித்திருக்கிறார். இதற்கும், மற்றும் இவர் எனக்கு ஊட்டிய ஊக்கத்திற்கும், அறிவுரைக்கும் எனது நன்றி உரியதாகிறது.

தன் உடல் நிலை செம்மையாய் இல்லாத காலத்திற்கூட, முன்னுரை எழுதியளித்த சரோஜினி நாயுடுவிற்கு என் நன்றியுள்ள வந்தனத்தைத் தெரிவித்துக்கொள்கிறேன். இவ்வம்மையாரை நான் பன்னெடு நாட்களாய் அறிவேன். என் குடும்பத்தினர்பால் இவருக்குள்ள ஆழ்ந்த அன்பையும், நட்பையும் பற்றி உலகறியும்.

சில காலத்திற்கு முன் ஹிந்துப் பத்திரிகையில் வெளிவந்த 'இரு சகோதரிகள்' என்னும் கட்டுரையையும், விசுவ பாரதிப் பத்திரிகையில் வெளிவந்த 'நினைவுகள்' என்னும் கட்டுரையையும், ஸ்டேட்ஸ்மன் பத்திரிகையில் வெளிவந்த 'பாச்சூலி' என்னும் கட்டுரையையும் இப்புத்தகத்தில் சேர்த்துக்கொள்ள அனுமதியளித்தமைக்கு அப்பத்திரிகைகளின் சொந்தக்காரர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

## குறிப்பு:

சில வாரங்களிலேயே இந்நூலின் *முதற் பதிப்பு விலையாய்விட்டது. இரண்டாம் பதிப்பை வெளியிடுவதில் நேர்ந்த கால தாமதத்திற்கு, நானும் பதிப்பாளர்களும் வருந்துகிறோம். என்னளவில், இக்காலதாமதம் உதவியா

*ஆங்கிலப் பதிப்பு.

யிருந்தது. உதவி யளிக்கக் கூடிய விமர்சனங்களையும், ஊக்க மளிக்கக் கூடிய மதிப்புரைகளையும் வழங்கிய ஆசிரியர்களுக்கும், வாசகர்களுக்கும் எனது வந்தனம் உரித்தாகும். இவ்விரண்டாம் பதிப்பில் அக்குறிப்புகளை யான் பயன்படுத்திக்கொண் டிருக்கிறேன். ஆனால், இந்நூலின் முதற் பதிப்புப் பிரதி ஒன்றை அனுப்பியதன் பயனாய், எனது அண்ணா, எனக்கு எடுத்துக்காண்பித்த திருத்தங்களும், யோசனைகளும் மற்றவற்றினும் மிகுந்த உதவியையும் ஊக்கத்தையும் எனக்கு அளித்தன. நான் மறந்த சிலவற்றை இவர் நினைவூட்டினார். நாட்களைக் குறிப்பிட்டதில் ஏற்பட்ட தவறுகளையும் திருத்தினார். வாசகர்களுக்குப் பயன்படுத்த வேண்டுமென்று நான் விரும்பும் இந்நூலைப் பற்றிய பல விஷயங்களை அவர் சொல்வதாலும், அவர் சொல்வதுபோல் என்னால் அவற்றைச் சொல்ல இயலாமையாலும், அவர் அபிப்பிராயங்களை வேறு இடத்தில் அப்படியே வெளியிட்டிருக்கிறேன்.

# பீடிகை

“ இல்லை. இன்னும் இரவிருள் கவிய வில்லை.
அதோ இன்னும் ஒரிருவர் காவல் காத்து நிற்கின்றனர்.
என்றாலும் இருள் சூழ்கிறது, பாழு மிருள் !
யார் கண்டது, விடியு முன்-
உதயத்தை இவர்கள் காணுமுன் -
காவல் காத்து நிற்கும் இவர்களும்
கொலையுண்டு மடிவார்களோ, என்னவோ ! ”

- பியர் வான் பாஸன்

1942 ஆகஸ்ட் 9, சரியாய் காலை 5 மணிக்கு ஜவாஹரையும், ராஜாவையும் கைது செய்யும் உத்தரவு களுடன் பம்பாய் போலிசார் திடுமென எங்கள் முன் காட்சியளித்தார்கள். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி யின் கூட்டங்களில் கலந்து, பன்னாட்கள் ஓயாது உழைத்து எங்கள் உடம்பும், மனமும் களைத்திருந்தன. அண்மை யில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் குறித்து இரவு நெடு நேரம் பேசிக்கொண்டும், விவாதித்துக்கொண்டும் இருந் தோம். நள்ளிரவில் எங்கள் விருந்தாளிகள் விடைபெற் றுச் சென்றார்கள். பின்னரும் ஒரு மணி நேரம் நானும், ஜவாஹரும், ராஜாவும் பேசிக்கொண்டிருந்தோம். பிறகு நாங்கள் படுக்கைக்குச் சென்றோம்.

எனவே, அதிகாலையில் நாங்கள் எழுப்பப்படுவது என்பதே அடாத செயல்; அதனிலும், போலிசாரை அப்பொழுது வாயிற்படியில் காண்பது வருத்தத்துக் குரியது. நான் அயர்ந்த நித்திரையிலிருந்தே னெனினும் மணியடித்ததும், உடனே எழுந்தேன். போலிசார் வந்திருக்கிறார்கள் என்பதையும் தெரிந்துகொண்டேன். போலிசாரைத் தவிரப் பிறர் நேரமல்லா நேரத்தில் வர மாட்டார்கள். ஜவாஹரைத்தான் போலிசார் கவர்ந்து செல்ல வந்திருக்கிறார்கள் என்று கருதி, நான் ஜவாஹரின் அறையை நோக்கி விரைந்து சென்றேன். ஜவாஹரால் தம் கண்களைத் திறக்க முடியவில்லை; அவ்வளவு களைப்பு. அவர் உடனே தம் நினைவிற்கும் வர முடியவில்லை. சில நிமிடங்களில் வீட்டில் இருந்த அனைவரும் விழித்துக்

கொண்டார்கள். தவிர்க்க முடியாத தொன்று நிகழ்ந்து விட்ட தென்பதை நாங்கள் அறிந்ததும், ஜவாஹரின் சிறைப் பிரயாணத்துக்கு உதவி செய்ய, அவருடைய துணிமணிகளை மூட்டை கட்டத் தொடங்கினேம். ஜவாஹருக்காகச் சில புத்தகங்களையும் ராஜா எடுத்து வைத்தார். உடனே என் மருமகள் இந்திரா, "ராஜா அண்ணு! நீங்கள் ஏன் தயாராகவில்லை?" என்ருள். நான் உடனே இந்திராவைத் திரும்பிப் பார்த்து, "எதற்காக?" என்றேன். "அவரையும் கைது செய்யும் படி உத்தரவு இருக்கிறது" என்ருள் இந்திரா. நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களைத் தவிரப் பிறரும் முதல் வலை வீச்சிலேயே சிறைப்படுத்தப்படுவார்கள் என்று நாங்கள் எண்ணவில்லை; தவறிவிட்டோம்.

எனவே, ராஜாவும் தம் பொருள்களை எடுத்துக் கொண்டார். இருவரும் புறப்படத் தயாராஞர்கள். எங்களிடம் விடைபெற்றுக்கொண்டதும் தனித் தனி மோட்டார் வண்டிகளில் அவர்களைப் போலீஸ் அதிகாரி கள் அழைத்துச்சென்றனர். குறிப்பிடப்படாத ஓர் இடத் துக்கு ஜவாஹரையும், புனுவிலுள்ள எரவாடா மத்திய சிறைச்சாலைக்கு ராஜாவையும் கொண்டுபோயினர். தூரத்தில் நின்றவண்ணமாய் மீண்டும் எங்கள் பிரிவு உபசாரங்களைச் சைகையால் தெரிவித்துக் கொண்டோம். வருங்காலத்தில் இன்னும் என்னென்ன நிகழுமோ என்ற வியப்போடு திரும்பினேம்.

விருந்தினர் பலர் அப்பொழுது எங்கள் வீட்டில் தங்கியிருந்தார்கள்; விடு நிரம்பி யிருந்தது. வீட்டை விட்டுப் போனது இரண்டு பேர்களே; ஆனல், உடனே எத்துணை மாறுதல்! ஏதோ ஒரு குறை தோன்றிற்று. ஜீவசக்தி ஒன்றினுல் ஒளி பெற்றிருந்த விடு, அது மறைந்த தால் களை யிழந்து வெறு நிலம்போல் காணப்பட்டது. சில நாட்கள் வரை பலர் வந்து போய்க்கொண் டிருந் தார்கள். இவர்களுடைய எண்ணிக்கை அதிகப்பட்டுக் கொண்டே வந்தது. சிறைப்படுத்திய நிகழ்ச்சியின் விவரங்களை அறிந்துகொள்ளும்பொருட்டு நண்பர்கள், உறவினர்கள், பல திறப்பட்ட யுத்த நிருபர்கள் எல்லோ ரும் குழுமியவண்ணமாய் இருந்தார்கள்; எனினும்,

நாங்கள் ஏதோ ஒன்றை இழந்தவர்களாகத்தான் இருந்தோம். எங்களைவிட் டகன்றவர்களின் சிந்தனையே எங்கள் உள்ளங்களில் ஓயாது குடிகொண்டிருந்தது. பல முறை இந்நிகழ்ச்சிகள் நடைபெற் றிருக்கின்றன; ஆனால், இது எங்களுக்குச் சகஜமாகிவிடவில்லை. ஒவ்வொரு முறையும் திகைப்பையும், தனிமையின் ஏக்கத்தையுமே அது எங்களுக்கு அளிக்கிறது.

ஆண்டு ஒன்று கடந்துவிட்டது. என் உயிருக்கு ஒப்பானவர்கள், கொடிய சிறைச்சாலையின் மதிற் சுவர்களுக்கும், இரும்புக் கம்பிகளுக்கும் அப்பால் சிறைப்பட்டிருக்கின்றார்கள். அவர்களைக் கண்களால் பார்க்கும் பாக்கியமும் எங்களுக்கு மறுக்கப்பட் டுள்ளது. அவர்களுடைய பிரிவு என் வாழ்க்கையில் குறையை உண்டாக்கியிருக்கிற தெனினும், நான் மனம் உடையவுமில்லை; தள்ளாடவு மில்லை. எந்த மேலான நோக்கத்திற்காக அவர்கள் சிறை சென்றார்களோ, அந்த நோக்கம் உண்மையானதும், நேர்மையானது மாகும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். ஆகவே, அவர்கள் துன்பப்படுவது தடுக்க முடியாதது என்பதையும் நான் நன்கு அறிவேன். ஒரு மனிதரின் வாழ்க்கையில் ஓராண்டுக் காலம் மிக நீண்டதொரு கால மன்று; ஒரு தேசத்தின் வாழ்க்கையிலோ அது மிக அற்பமான காலம். ஆனால், சில சமயங்களில் ஓராண்டும் நீண்டுவிடுகிறது; ஒவ்வொரு மாதமும் மிக மிக நீண்டதாகத் தோற்ற மளிக்கிறது. பல பெரிய இயக்கங்களைக் கண்டுவிட்டேன்; இன்னும் எத்தனை காத்திருக்கின்றனவோ யாரறிவார்? கடந்த பல ஆண்டுகளில் நான் மட்டுமல்ல, நமது தோழர்களில் எண்ணிறந்தோர் பலதிறப்பட்ட மனோ நிலைகளில் காலம் கடத்தி யிருக்கிறார்கள். கட்டுக் கடங்காத உற்சாகத்தைத் தந்த காலங்களை நாங்கள் அனுபவித் திருக்கிறோம்; அதே போல மனக் கவலையைத் தந்த காலங்களையும் அனுபவித் திருக்கிறோம். சில காலங்களில், தப்பும் வழி காணாது இருளால் சூழப்பட்டும், மற்றுஞ் சில காலங்களில், அவ் விருளை ஒளிக் கிரணங்கள் ஊடுருவிப் பாய, அதனால், மேலும் மேலும் போராடுவதற் குரிய மனோதிடமும், புது நம்பிக்கையும் பெற்றும் இருக்கிறோம்.

சில மாதங்களாய், இத்தகைய குழப்பத்திலும், தனிமையிலும் என் மனத்தில் பல நினைவுகள் ஒருங்கே உதித்தன. மனத்திற்கு ஒரு வேலையைக் கொடுக்கக் கருதி, இந்நினைவுகளைப் பற்றி எழுத ஆரம்பித்தேன். இக் குறிப்புக்களே நாளடைவில் இந்நூலாக உருக்கொண்டன. இந்நூலை எழுதுங்கால், என் குழந்தைப் பருவ முதல் இந்நாள் வரையில் நான் அனுபவித்த பலவற்றின் நினைவு வர, திரும்பவும் நான் அவ்வாழ்க்கையை அனுபவிப்பதுபோல் உணர்ந்தேன். உவகை யூட்டும் நினைவுகளும், துயரத்தை விளைக்கும் நினைவுகளும் மீண்டும் எழவே, சென்றுபோன பல பழங் கதைகளை நினைந்து சிரித்திருக்கிறேன்; அழுதும் இருக்கிறேன். அவை எனக்குச் சிறிது களிப்பையும், மிகுந்த அமைதியையும், அடிக்கடி கொஞ்சம் வருத்தத்தையும் அளித்தன.

என் குழந்தைப் பருவம், மாசற்றும் அமைதியாயும் இருந்தது. எங்களது குடும்பம் ஒற்றுமைமிக்க ஒரு சிறிய குடும்பம். அச்சிறிய குடும்பமாகிய உலகம் துக்கத்தாலும், துன்பத்தாலும் தாக்கப்படாததால், சந்தோஷமுடையதா யிருந்தது. நாளடைவில் பல மாறுதல்கள் எங்கள் வாழ்க்கையில் உண்டாயின. எனினும், நாங்கள் ஒற்றுமை குலையாமல் வாழ்ந்துவந்தமையால் இம்மாறுதல்களால் எங்களை அசைக்கமுடியவில்லை. பல சந்தர்ப்பங்களின் சக்தி பின்னர் எங்களைப் பிரித்துவிட்டது. ஆனால், எங்கள் வாழ்க்கையின் தொடர்ச்சி அறுபடவில்லை. புதிய வழி துறைகளுக்கு ஏற்ப, எங்கள் வாழ்க்கையைச் சீர்படுத்திக்கொண்டு அதிக மனோதிடத்தோடும், உடல் வலிமையோடும் எதிர்காலத்தைச் சமாளிக்க உறுதி கொள்ளலானோம்.

கடந்த பதினைந்து ஆண்டுகளாக எங்கள் குடும்பத்தில் ஏற்பட்ட மாறுதல்களைப் பற்றி நான் சில மாதங்களுக்கு முன், 'இந்தியாவில் எங்கேயோ' இருக்கும் ஜவாஹருக்கு ஒரு கடிதம் எழுதினேன். சென்ற கால, நிகழ்கால, யூகிக்கப்படும் எதிர்கால விளைவுகளைப் பற்றித் தெள்ளத் தெளிய விளக்கி, வாழ்க்கையில் நாங்கள் அடைந்துள்ள மாறுதல்களையும் நன்கு எடுத்துக் காட்டி அவர் விடையளித்திருக்கிறார். பிற்காலத்தில்

நாங்கள் எதிர்த்துப் போராட வேண்டியவை பல இருப்பினும், நாங்கள் எதற்கும் கவலைப்படவில்லை. ஜவாஹர் எழுதுகிறார் :

"1928-ல் ஒற்றுமைமிக்க நம் குடும்பம் இருந்த நிலை பற்றி நீ எழுதுகின்றாய். நம் அன்பிற் குரிய பலர் இப்பொழுது இறந்துவிட்டார்கள். மேலும், பலர், ஒருவரை ஒருவர் காணமுடியாதபடி பிரிந்தும், பல இடங்களில் சிதறியும் இருக்கிறார்கள். இப்படிப்பினை ஒவ்வொரு தலைமுறையிலும் அவரவர் சொந்த அனுபவத்தால் கற்றறிய வேண்டியதாயிருக்கிறது. முதலில், பலவாய்ப் பிரிதலின் பயனாய், பின்னர், ஒன்றாய்க் கூடுதல் உண்டாகிறது. ஆனால், ஒன்றுபடும் ஒவ்வொரு சமயமும் அதன் தன்மை, முன்னையிலும் உயர்ந்ததாக இருத்தல்கூடும். ஏனெனில், பின்னர் ஏற்படும் ஒருமையில், முன்னர் அனுபவித்த வெற்றி தோல்விகளைப் பற்றிய நினைவுகள் உள் மனத்தில் பதிந்து கிடக்கும். பழஞ் சுமை நம்மைத் தொடர்கின்றது; ஆயினும், அது ஒரு சுமையாய் இருப்பதோடுமட்டு மல்லாது, நம்மை ஊக்குவிக்கும் சக்தியாயும் இருக்கிறது. ஏனெனில், அது நம்மைக் கீழே அழுத்துவதோடு, அதே சமயத்தில் மேலே செல்லவும் தள்ளுகின்றது. சில நேரங்களில் சக்தியும், இளமை யுணர்ச்சியும் நம்மிடம் நிறைந் திருப்பதை உணருகிறோம்; மற்றும் சில நேரங்களில், எண்ணில் பல் ஆண்டுகள் நம்மை ஆழ்த்துவதன் பயனாய் நாம் கிழத்தன்மையை அடைந்தவர்களைப்போல் களைப்புற்று, நீண்ட-முடிவற்ற நம் வாழ்க்கைப் பிரயாணத்தில் தள்ளாடுகின்றோம். இவ்விரு நிலைகளும் நம்மோடு ஒட்டியனவே. இவ்விரு திறப்பட்ட நிலைகளும் ஓயாமல் கலந்தும், போராடியும் வருவதால், புதியதொன்று எப்பொழுதும் விளைந்துகொண் டிருக்கிறது. போராட்டங்களையும், அமைதியையும் நூற்றுக் கணக்கான தலைமுறைகளாக உடைய பழைய நாகரிகத்தின் மக்கள் நாம்; எனவே, இத்தகைய பழம் பெருமை ஒன்றும் இல்லாத பிற்காலத்து மக்களைக்காட்டிலும், நாம் இதை அதிக அளவில் உணருகிறோம். மனத்துக்கும் ஆன்மாவுக்கும் உறுதியைத் தரத்தக்க சக்தி நம்மிடத்தில் அதிகம் உண்டு. அமைதிமிக்க — ஆரவாரமற்ற நமது வாழ்க்கைக் குறிக்

கோள், மாறுதல்களைக் கண்டு கலங்குவதில்லை. இதுதான் நமது பழைய பண்பாட்டின் ஓர் அறிகுறியாகும். சீன தேசத்திலும் இப்பண்பாடு நிறைந்துள்ளது. இப்பண்பாடே இந்தியாவுக்கும் இருக்கின்றதாகையால், இந்தியா நன்மையைத்தான் அடையும்.

"நான் குழந்தையா யிருந்தபோது, நம்முடைய குடும்பம் இருபதுக்கும் மேற்பட்டவர்களைக் கொண்டதாய் இருந்ததென்பது எனக்கு நினைவு இருக்கின்றது. பிரிவினையாகாத குடும்பங்களில் இருப்பதைப்போன்று, அவர்கள் எல்லோரும் ஒன்ருய் வாழ்ந்துவந்தார்கள். இந்தக் குடும்பம் பல பகுதிகளாகச் சிதைவுற்றதைக் கண்டேன்; பின், சிதைவுற்ற ஒவ்வொரு பகுதியும் மீண்டும் ஒன்றுசேர்வதற் குரிய வித்தாகத் திகழ்ந்ததையும் கண்டேன். அன்பும், பொதுவான நலன்களுமான தளைகள் வெவ்வேருகப் பிரிந்தவர்களை ஒன்றுசேர்த்தன; மேலும், எப்பொழுதும், ஒருமித்த கூட்டுறவும் இருந்துவந்தது. இதே செயல்தான் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டிருக்கிறதாயினும், சாதாரணமாய் இதனை நீ கவனித்திருக்கமாட்டாய்; சம்பவங்கள் துரிதமாய் நடைபெறும் பொழுது உனக்கு அதிர்ச்சி ஏற்படுகிறது. சீன நாட்டில் சென்ற ஐந்தாண்டுகளாக நிகழ்ந்தவற்றையும், லட்சக்கணக்கான குடும்பங்களை ஆக்ரமித்துக்கொண்ட ஊழிப்பெருக்கையும் எண்ணிப்பார். சீன நாடு இன்னும் உயிரோடுதா னிருக்கின்றது; முன்னிலும் அதிக வலிமையோடு திகழ்கின்றது; யுத்தங்களுக்கும், அபாயங்களுக்குமிடையிலும், தனிப்பட்ட மக்கள் பலர் பிறந்து, வளர்ந்து, தங்கள் நாகரிகப் பண்பாட்டை வளரச் செய்துகொண்டுதான் இருக்கின்ருர்கள். இந்தியாவி லுள்ள நமக்கும் இத்தகைய ஒரு பொது அனுபவத்தால் நன்மை உண்டாகலாம் என்று நான் சில வேளைகளில் நினைப்ப துண்டு. எவ்வாருே, நாமும் சில அனுபவங்களை உடையவர்களாகத்தா னிருக்கிருேம். இதன் பயனுய் மெல்ல மெல்ல—ஆனல், உறுதியாக—ஒரு புதிய சமூகத்தை உருவாக்கி வருகின்ருேம்.

# வருந்தவில்லை

---ω---

"நம்பிக்கை யெனும் தேனீ; அது வாழ்
மலரிடை உலவிய தென்றலாம் கவிதை.
இவையே எனக்குப் பொருளாய் இருந்தன.
இயற்கை, கவிதை, நம்பிக்கை இவற்றோடு
உறவு கொண்டாடிக் களித்து நின்றேன்.
வாழ்க்கை முழுதும் விழாவாய் மலர்ந்தது.
அது ஒரு காலம்.
இல்லையாய் இருந்த அந்தக் காலம்."

—காலரிட்ஜ்.

இப்பொழுது அலஹாபாத் என்று அழைக்கப்பெறும் புனித நகரமான பிரயாகையில் நான் 1907, நவம்பர் மாதத்தில், குளிர்மிக்க ஒரு காலைப் போழ்தில் பிறந்தேன். என்னைப் பிரசவிக்கும் முன்னர் எனது தாய் அதிக வேதனை யடைந்ததாலும், குழந்தை பிறப்பதை எல்லோரும் ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண் டிருந்ததாலும், எங்களுடைய வீடு, அன்று இரவு நெடுநேரம் வரை பரபரப்போடும் நிறைந்த வெளிச்சத்தோடும் துலங்கிற்று. மிகவும் கஷ்டப்பட்டு என் தாய் என்னைப் பெற்றெடுத்தாள். பருத்துக் கொழுத்து உடல் நலத்தோடு பிறந்த சிசுவாகிய நான், என் பிறப்பால் என் தாயின் மெல்லிய உடலுக்குப் பேராபத்தை விளைவிக்க விருந்தேன் என்பதை அப்பொழுது உணரமாட்டேன். நான் பிறந்த பின், பல வாரங்கள் வரை என் தாயார் சாவுக்கும் வாழ்வுக்கும் ஊடே ஊசலாடிக்கொண் டிருந்தாள்; நானோ செவிலித்தாய்களாலும் பிறராலும் அன்புடன் வளர்க்கப் பெற்று, இயல்பான குழந்தையைப்போல் செழிப்பாக வளர்ந்துவந்தேன்.

சிறிது சிறிதாக எனது தாய் உடல் நலனைப் பெறலானாள். ஆனால், நீண்ட நாட்கள் வரை ஓர் அரைகுறையான நோயாளியாகவே இருந்துவந்தாள். என்னை வளர்க்க முடியாத நிலையில் அவள் இருந்தமையால், செவிலிகளும், என் பெரிய தாயாருமே என்னை வளர்த்து வந்தார்கள். எனக்கு மூன்று வயதானதும், 'சுவரூபை'க்

கண்காணித்துவந்த ஆங்கில ஆசிரியை என்னையும் கவனித்துவந்தாள். என் அண்ணன் ஜவாஹர், என்னிலும் பதினெட்டு வயது மூத்தவர். அக்காள், ஏழு வயது மூத்தவள். எனவே, என்னோடு விளையாடுவதற்கும், தோழமை கொள்ளுவதற்கும் ஒருவருமின்றி, ஒரே குழந்தையைப் போல் வளர்ந்துவந்தேன். அண்ணனுக்கும் எனக்குமோ, அக்காளுக்கும் எனக்குமோ எவ்விதப் பொதுவான தொடர்பும் இல்லாமற் போயிற்று. நான் பிறந்தபோது ஜவாஹர் இங்கிலாந்தில் இருந்தமையால், நான் ஐந்து வயது அடையுமுன் அவரைப் பற்றி ஏதும் அறியமாட்டேன் ; பிறகே-அதாவது, எனது ஐந்தாவது வயதிலேயே-முதலில் அவரைச் சந்தித்து அவருடன் பழகினேன்.

என் தந்தை, நான் பிறக்கு முன்னரே, ஒரு பெரிய நியாயவாதி எனப் புகழ் பெற்றுவிட்டார் ; பணக்காரராகவும் இருந்தார். ஜவாஹரின் பத்தாம் வயதில் ஆனந்த பவனமாகிய எங்கள் இல்லத்தை அவர் விலைக்கு வாங்கினார்.

ஆனந்தபவனம் ஒரு புனிதமான இடத்தில் அமைக்கப் பெற்றிருப்பதாகக் கருதப்படுகிறது. ஸ்ரீ ராமன் பதினான்கு ஆண்டுகள் வனவாசத்தைக் கழித்த பின்னர், பரதனை இந்த இடத்தில்தான் முதன்முதலாகச் சந்தித்தாராம். இதற்குப் பக்கத்தில் பரத்துவாசர் ஆசிரமம் ஒன்று இருக்கிறது. பண்டைக் காலத்தில் இங்கு ஒரு சர்வகலாசாலை இருந்ததாம். இன்றைக்கும் இவ்வாசிரமத்திற்குப் பலர் வந்து, தரிசனம் செய்துவிட்டுப்போகிறார்கள். பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை நடைபெறும் பிரயாகைக் கும்ப மேளத்திற்கு வரும் எண்ணிறந்த மக்களின் உள்ளங்களை எங்கள் வீடு கவர்வதுண்டு. சங்கமத்தில் நீராட நூறாயிரக் கணக்கில் கூட்டம் கூடுவது வழக்கம். அப்பொழுதெல்லாம் எங்கள் வீட்டிற்கு வரும் மக்களின் கூட்டம் கட்டுக் கடங்காததாய் இருக்கும். வீட்டின் வெளி மதிற்சுவரின் உட்புறத்தில் எங்கும் இக்கூட்டம் தன் இஷ்டம்போல் சிறிது தங்கிச் செல்லும். ஆண்டுதோறும் மகாமேளத்திற்கும் சிறுசிறு கூட்டங்கள் வருவதுண்டு. இவற்றில் பெரும் பகுதி எங்கள் வீட்டிற்கு வராமல் திரும்பாது. எங்கள் வீடு புனிதமான இடத்தில் இருக்கிறது என்று

கருதி வருபவர் சிலர்; தந்தை, அண்ணு ஆகியோரின் பெயர்கள் அதிகமாகப் பரவி யிருப்பதால், அவர்களைப் பார்க்க வருவோரு முண்டு.

ஆனந்தபவனம் விசாலமான பெரியதொரு வீடு. சுற்றிலும் பெரிய தாழ்வாரங்கள்; மாபெரும் தோட்டம்; ஒரு புறத்தில் புல் தரை; பின் புறத்தில் பழமரச் சோலை; முன்புறம் வசந்த மண்டபம், 'டென்னிஸ்' பந்தாடும் இடம்-இவற்றோடமைந்த புல் தரை. வசந்த மண்டபத்தினுள்ளே, பெரும் கற்களை ஒன்றின்மேல் ஒன்ருக அடுக்கிச் செய்த 'செய்குன்றம்' ஒன்றின்மேல் சிவபெருமானுடைய சிலை வைக்கப்பட்டிருந்தது. அச்சிலையின் தலையிலிருந்து சிறிய நீரருவி ஒன்று புறப்பட்டு, அதன் அடியிலுள்ள குட்டையில் விழுந்துகொண்டிருந்தது. சுற்றிலுமுள்ள செடிகளில் மனோரம்மியமான புஷ்பங்கள் பூத்துக்கொண்டிருந்தன. வசந்த காலத்தில் இந்த இடம் மகிழ்ச்சியும், குளிர்ச்சியும் தரத்தக்கதாக இருக்குமாதலால், எனக்கு அதனிடத்து அதிகப் பற்றுதல் உண்டு. பிற்காலத்தில் எங்கள் புது வீடு கட்டப்பட்டபொழுது, அதற்கு இடையூருக வசந்த மண்டபம் இருந்ததால், அதனை அழித்துவிட்டார்கள். அப்பாவிடம் குதிரைகளும், நாய்களும், வண்டிகளும், மோட்டார்களும் ஏராளமாக இருந்தன. வேட்டையாடுவதிலும், குதிரைச் சவாரி செய்வதிலும் அப்பாவுக்கு மிகுந்த ஆசையுண்டு. குதிரை லாயங்களைச் சுற்றிப் பார்த்துவருவதிலும், குதிரைகளைப் பார்த்துக்கொண்டிருப்பதிலும் எனக்கு ஆசையாக இருக்கும். எனக்கென்று ஒரு 'மட்டக் குதிரை'யும் இருந்தது. அது பனி நிறமுடைய அழகான வெண் புரவி. அப்பாவிடம் பெருந் தொகை கொடுத்துப் பலர் இம் மட்டத்தை விலக்கு வாங்க முயன்ருர்கள். இக்குதிரை என்னிடம் நீண்டகாலம் இருக்கவில்லை; ஒரு நாள் அதைப் பாம்பு தீண்ட, லாயத்தில் செத்துக் கிடந்தது; இக்குதிரைமீது நான் மிகவும் அன்பு பாராட்டிவந்தேனுதலால், அதன் சாவு எனக்குப் பெரும் நஷ்டமா யிருந்தது. பல வாரங்கள் வரை இந் நஷ்டத்தை நினைந்து நினைந்து உருகினேன்.

நான் குழந்தையாய் இருந்த காலத்தில் எப்பொழுதும் சில உறவினர் எங்கள் வீட்டில் தங்கியிருப்பதுண்டு. சில

சமயங்களில் அவர்களுடைய குழந்தைகளும், கூட இருப்ப துண்டு. இவர்களோடு விளையாடுவது எனக்குச் சந்தோஷ மாயிருந்தது. நோய்வாய்ப்பட்ட என் தாய், தன் படுக்கை யில் இருந்துகொண்டே, வீட்டில் உள்ள யாவரையும் கண்காணித்துவந்த செயலைக் கண்டும், என் தந்தை, பல வகையான தம் அலுவல்களுக் கிடையில், ஒவ்வொருவ ரோடும் சிறிது நேரம் அளவளாவிப் பேசி, அவர்கள் சௌகரியமாகவும், உள்ளக் களிப்போடும் வாழ்வதற் குரிய எல்லா ஏற்பாடுகளையும் செய்துவந்ததைக் கண்டும் நான் வியப்படைவ துண்டு. மேற்பார்வைக்குப் பொறுப் பற்றவனைப்போல் தோன்றி, தன் மந்தையைச் செவ்வனே பாதுகாத்துவரும் ஓர் ஆட்டிடயனை ஒத்திருந்தார் என் தந்தை.

நான் பிறக்கும் முன், என் தாய்க்கு ஓர் ஆண்குழந்தை பிறந்து இறந்துவிட்டது. இதனால் விளைந்த துக்கம், என் தாயின் மனத்தைவிட்டு அகலவே யில்லை. நான் பிறந்ததும் அம்மாள் பெரிதும் ஏமாற்ற மடைந்தாள். ஆனால், அப்பா வுக்கு இவ்வேற்றுமை தோன்றவில்லை. கூடியாடத் தோழர்க ளின்றிப் பெரும்பாலும் தன்னந்தனியளாகவே என் குழந்தைப் பருவத்தைக் கழித்துவந்தேன். என் வாழ்க்கை, கடுமையான சட்டதிட்டங்களால் வரையறுக் கப்பட்டிருந்தது. தூங்கிக் கண் விழித்தது முதல், இரவு படுக்கப்போகும் வரையில், என்னுடைய ஒவ்வொரு நிமிஷ நேரமும் ஒரு திட்டத்திற்கு உட்பட்டே யிருந்தது. இது எனக்குப் பிடிக்க வில்லை. நானறிந்த மற்றக் குழந்தை களுக்கு, அவர்களின் பெற்றோர் எத்துணையோ சுயேச் சையை அளித்திருக்கிறார்களே என்று எண்ணினேன். மேலும், கடுமையான சட்டங்களை விதிக்கும் ஆங்கில ஆசிரியை அக்குழந்தைகளுக்கு இல்லையே என்றும் கருதினேன். என் ஆசிரியை என்மேல் செலுத்திய அதிகாரம் எனக்குப் பிடிக்கவில்லை. அடிக்கடி அவளுக்குக் கீழ்ப்படியாது நடந்துகொண்டேன். பிடிவாத குணத் தோடு முரட்டு சுபாவமும் எனக்கு இருந்தது. எனக்கு விரைவில் கோபம் மூண்டுவிடும் ; ஆனால், நீடிப்பதில்லை ; குழந்தைத் தன்மை யுடையதாகவே இருந்தது. கோபம் நீடிக்கமாட்டா தென்பதோடு, மனத்தில் வைத்துக்

கொண்டு பகைமை பாராட்டுவது மில்லை. ஆனால், இதன் காரணமாக அநாவசியமான இடுக்கண்களே அடிக்கடி நேர்ந்தன.

தண்டிக்கப்படுவதும், அறையில் தனியாய்ப் பூட்டி வைக்கப்படுவதும், இராச் சாப்பாடு இல்லாமல் பட்டினி போடப்படுவதும் எனக்கு சகஜமாய்விட்டன. என் அக்காள் இத்தகைய தண்டனைகளை அடைவதில்லை. எப் பொழுதும் கீழ்ப்படி தலோடும் பணிவோடும் அவள் நடந்து கொள்வாள். மீறுவதைக்காட்டி லும் பணிவதால் அநேக மாகத் துன்பமற் றிருக்கலா மென்று கருதியே, அவள் அங்ஙனம் நடந்துகொண்டாள். கோபியாயும், வெறுப் புள்ளவளாயு மிருந்தும், நான் என் ஆசிரியையை அன்பு டன் நேசித்தேன்; அவளும் என்பால் அதிக அன்புட னிருந்ததை அறிந்தேன்.

குழந்தையா யிருந்தபொழுது, என் பெற்றோர்களை நான் அதிகமாய்க் காண்பதில்லை. அப்பாவுக்கு, வேலை கடு மையாய் இருந்தது. காலையில் சிறிது நேரமும், மாலையில் சிறிது நேரமுந்தான் நான் அவரைப் பார்ப்பேன். ஆனால், அம்மாளை அடிக்கடி நான் காண்பதுண்டு; எனினும், அவளுடன் நெருங்கிப் பழகுவ தில்லை. அம்மாள் இடும் சிறு கட்டளையையும் உடனே நிறைவேற்றுவிக்க எத் துணையோ வேலையாட்கள் காத்துக்கொண் டிருந்தாலும், உடல் நலனுடன் இருக்கும்பொழுது, அவள வாளா யிராது, வீட்டு வேலைகளைச் செய்துகொண்டுதான் இருப் பாள். அவளிடத்தில் எனக்கு அதிக அன்பு உண்டு. அவ ளது அன்பை, நான் பெரிதும் மதித்துப் போற்றிவந்தேன். ஆனால், அவள், நான் விரும்பும் அளவு என்மீது அன்பு கொள்ளவில்லை என்று எண்ணி, என் குழந்தை யுள்ளம் பன்முறை ஏங்கிற்று.

தன் கண்ணின் மணி ஜவாஹர்தான் என்று என் தாய் எண்ணினாள். இவ் அன்பை அவள் மறைப்பதில்லை. அப்பா வும் அம்மாளைவிட அதிகமாக ஜவாஹரிடத்து அன்பும், பெருமையும்கொண்டிருந்தார். ஆனால், நீதியும், நேர்மையும் மிக்க அவர், இதை வெளிப்படையாகக் காட்டிக்கொள்வ தில்லை. தம்மை யன்றி, மற்றவரிடமே அவர் அதிக அன்புடையவராய் இருக்கிறார் என்று, எங்களில் யாரும்

நினைக்க அவர் இடம் கொடுப்பதில்லை. இதில் அப்பா வெற்றியே பெற்றார். ஆயினும் ஜவாஹரைப் பற்றிய புகழுரைகளை அடிக்கடி கேட்ட நான், ஜவாஹர்மீது பொறாமை கொண்டேன்; ஆனால், அதற்காக நான் வருந்தவில்லை; ஏனெனில் ஜவாஹர் அப்பொழுது வீட்டில் இல்லை; வெளி நாட்டில் இருந்தார்.

என் அக்காள் சுவரூப் மிக்க அழகுவாய்ந்தவள். அவளை எல்லோரும் கொண்டாடிச் செல்லங்கொடுத்துக் கெடுத்துவந்தார்கள். எனினும், எக்காரணத்தாலோ அவள்மீது எனக்குப் பொறாமை ஏற்படவில்லை. இத்துணை வனப்புவாய்ந்த பெண்ணை எல்லோரும் கொண்டாடுவது இயற்கைதான் என்றெண்ணி நானும் அவள்பால் மிக்க அன்புடையவளாய் இருந்தேன்.

என் குழந்தைப் பருவத்தை, கடிகாரம்போல் காலவரையறையோடு கழித்துவந்தேன். ஒவ்வொரு நாட் காலையிலும் நான் குதிரைச்சவாரி செய்வேன் ; இதில் எனக்குப் பிரியம் அதிகம். இன்றும் நான் இப்பழக்கத்தைக் கைவிடவில்லை. குதிரை ஏற்றத்தில் அப்பா தேர்ச்சியுடையவர். பல உயர்ந்த குதிரைகள் அவரிடம் இருந்தன. ஜவாஹருக்கும், சுவரூபுக்கும், எனக்கும் நடைப் பழக்கம் வந்ததும், குதிரை ஏற்றப் பழக்கமும் வந்துவிட்டது. எங்கள் எல்லோருக்கும் குதிரை ஏற்றத்தில் பிரியம் அதிகம். ஆனால், இப்பொழுது நாங்கள் குதிரைச் சவாரி செய்வது வெகு அபூர்வம். குதிரை ஏற்றம் முடிந்ததும், எங்கள் பெரிய நந்தவனத்தின் ஒரு மூலையில், என் ஆசிரியை எனக்குப் பாடம் கற்றுக்கொடுப்பாள். சிற்றுண்டி அருந்தும் வரை, காலைப்பொழுது இவ்வாறு கழிக்கப்படும். சிற்றுண்டிக்குப் பிறகு, சிறிது ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும் ; இது தான் எனக்குப் பிடிக்காது. பிறகு, பியானோ வாத்தியப் பாடம் நடைபெறும். மீண்டும் படிப்பு. என் அப்பா மிக மிகப் பாராட்டும் இரண்டு பர்மா மட்டக் குதிரைகள் பூட்டிய வண்டியில் தினந்தோறும் மாலையில் உலாவச் செல்வோம். மற்றப்படி மாலைப் பொழுது உற்சாகமற்றதாகவே இருக்கும். இப்பொழு திருப்பதைப்போல் அந்த நாட்களில் சினிமாப் பார்க்கும் நாகரிகமில்லை. சினிமாப் பார்ப்பதற்கு மிகமிக அபூர்வமாகத்தான் எனக்கு அனுமதி

கிடைக்கும். எப்போதேனும், சர்க்கஸ் விளையாட்டுக் களையோ, கண்காட்சிகளையோ பார்ப்பதே போதுமான தெனக் கருதப்பட்டது. என்னுடைய பன்னிரண்டாவது வயதில் நான் அறிந்திருந்ததைக் காட்டிலும் அதிகமாக, இப்பொழுது ஏழும், எட்டும் வயதுடைய எனது இரு ஆண் குழந்தைகளும் இந்திய அமெரிக்கச் சினிமாப் படங்களைப் பற்றி அறிந்திருக்கிறார்கள். என் உடனிருந்து விளையாடச் சில சமயங்களில் எனக்குச் சில நண்பர்கள் கிடைப்பதுண்டு; ஆனால், அடிக்கடி இப்படிக் கிடைப்பதில்லை. எனவே, நான் பொதுவாக இவ்வுலக வாழ்க்கையைப் பற்றி வியந்துகொண்டும், என் எண்ணங்களைப் பிறரிடம் தெரிவியாமலும் எங்கள் வீட்டின் அகன்ற வெளிகளில் சுற்றித் திரிவேன். ஏனெனில், 'பெரியவர்கள், குழந்தைகளைக் காண்பதில் இன்பமடைவார்களே யன்றி, குழந்தைகள் கேட்கும் கேள்விகளுக்குச் செவிசாய்க்கமாட்டார்கள்' என்றும், 'ஒவ்வொன்றைப் பற்றியும் ஆராயத் தொடங்கி, ஏராளமாகக் கேள்விகளைக் கேட்டுக்கொண்டே யிருப்பது கெட்ட பழக்கத்திற்கு அறிகுறி' என்றும் மிகவும் இளமைப் பருவத்தில் நான் கற்றுக்கொண் டிருந்தேன். எனவே, என் எண்ணங்களை வெளியிட எனக்கு வழியே யில்லாது போயிற்று. கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆசையோடு நூற்றுக் கணக்கான சந்தேகங்கள் என் மூளையில் உதித்தும், அவற்றை அறிந்துகொள்ளும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்கவில்லை.

ஐந்தாவது வயதில் சுவரூப் பெற்றோருடன் இங்கிலாந்துக்குச் சென்றாள். அங்குதான் மிஸ். ஹூப்பர் என்னும் ஆசிரியையை என் தந்தை தேர்ந்தெடுத்தார். இவ்வாசிரியை நல்ல குடும்பத்தில் பிறந்தவள்; தகுதி வாய்ந்த நற்குண முடையவள்; கடுமையான கட்டுப்பாடுகளையும், தவறாத கிழ்ப்படிதலையும் நம்பும், பழங் கொள்கையை யுடையவள் இவள். சுவரூபை அடக்கியாளுவது இவளுக்கு எளிதா யிருந்தது; என் தகப்பனரது பிடிவாத குணமட்டு மல்லாது, பரம்பரையாக எங்கள் முன்னோர்களிடம் அமைந்திருந்த பிடிவாத குணமும் என்னிடத்துப் பூரணமாக அமைந் திருந்தமையால், என்னை நடத்துதல்

அவளுக்குப் பெரும் பிரச்னையாக இருந்தது. எத்தகைய கொடிய தண்டனையும் என்னை அடக்கிவிடாது; ஆனால், ஒரு சிறிய கடுஞ்சொல் என்னை வெட்கமுறச் செய்து கீழ்ப் படிவிக்கும். துரதிருஷ்டவசமாய், கடுஞ் சொற்கள் குறை வாயும், தண்டனைகள் அதிகமாயும் இருந்தன. இவ்வா றாகக் கூட்டாளிகள் எவருமற்றுத் தனிமை வாழ்க்கையை மேற்கொண்ட குழந்தைப் பருவத்திலிருந்து, கூச்சமும் குணக்கேடுமுடைய சிறுமியாய் நான் வளர்ந்தேன். என்னை எல்லோரும் கொண்டாடவேண்டுமென்பது என் ஆவல். அறிவுப் பசி அதிகமாக இருந்தது; ஆனால், வழக்கமான முறையிலன்றி வேறு வழியால், நான் அதைத் தீர்த்துக் கொள்ள முடியவில்லை. ஏறக்குறைய, என் பெற்றோர்கள் எனக்கு அயலார்களைப்போலவே இருந்தார்கள். என் அண்ணாவை எனக்குத் தெரியவே தெரியாது. ஒரு சமயம் போற்றியும், பிறிதொரு சமயம் வெறுத்தும் பழகிய என் ஆசிரியையைத் தவிர, தினமும் நான் நெருங்கிப் பழகியது என் அக்காள் ஒருவளோடுமட்டுந்தான்.

என் அண்ணா, 1912-ல் இங்கிலாந்திலிருந்து இந்தியா வுக்குத் திரும்பினார்; அதுதான், என் வாழ்க்கையில் முத லாவது முக்கிய சம்பவம். அவர் முற்றும் எனக்குப் புதிய வர். அவர், வீட்டுக்கு வருவதை எதிர்நோக்கிக்கொண் டிருப்பதில் எனக்கு மகிழ்ச்சி யில்லை யெனினும், அவர் எப்படி இருப்பார் என்று பார்க்க மிகவும் ஆவலோடு இருந்தேன். தங்கள் புதல்வரும், சொத்துக் குரியவரு மாகிய அவர் வருவதற்குப் பல வாரங்களுக்கு முன்பே என் பெற்றோர்கள் அவரை வரவேற்பதற்கான ஏற்பாடு களைச் செய்யத் தொடங்கிவிட்டார்கள். அம்மாள் மகிழ்ச்சியில் திளைத்திருந்தாள்; மன எழுச்சியோ பொங்கிப் பெருகிக்கொண் டிருந்தது; தன் அருமை மகனுக் குரிய ஏற்பாடுகள் யாவும் சரிவரச் செய்யப்பட் டிருக்கின்ற னவா என்பதைக் கவனிப்பதற்காக, நாள் முழுதும் அங்கு மிங்கும் திரிந்துகொண் டிருந்தாள். அந்நாட்களில் அவள் எவ்வளவு மகிழ்ச்சியோடு இருந்தாள் என்பதும், அதற்கு முன் காணாத ஒரு ஜோதி அப்பொழுது அவள் முகத்தில் விளங்கியதும் இப்பொழுதும் எனக்கு ஞாபக மிருக்கிறது. மகன் என்பதற்காக, என் தாய் அவ்வளவு

அதிகமாகப் பிரேமை காட்டியது, சில சமயங்களில் எனக்கு அளவிலா மனவேதனையை உண்டுபண்ணியது. அந்தச் சமயம் அவள் மனம் இருந்த நிலை இன்று எனக்கு நன்ருக விளங்குகிறது. என் அக்காளுங்கூட மிகுந்த ஆவலோடு அண்ணுவின் வரவை எதிர்பார்த்து இங்கும் அங்கும் ஓடியாடிக்கொண்டிருந்தாள். இதுவும் எனக்கு அதிகமாகக் கோபத்தை உண்டுபண்ணியது. ஜவாஹரை முற்றிலும் வெறுக்க வேண்டுமென்று நான் முடிவுசெய்து கொண்டேன்.

கடைசியாக ஜவாஹர் வருகின்ற அந்த நாளும் வந்தது. வீடெங்கும் குடிகொண்டிருந்த அந்தக் கிளர்ச்சி என்னையும் சிறிது அசைத்தது; ஆனல், அவர் எப்படியிருப்பாரென்பதை அறிவதிலிருந்த ஆர்வமேதான் அதற்குக் காரணம். கோடைக்காலம்; நாங்கள் முசூரி என்னும் மலை வாசஸ்தலத்தில் வசித்துவந்தோம். எதிர்பார்த்த வேளையில் குதிரையின் காலடியோசை கேட்டது. ஒவ்வொருவரும் ஜவாஹரைப் பார்ப்பதற்கு வெளியே ஓடினர்கள். தாயாரின் சாயலோடு, மிக அழகிய இளைஞர் ஒருவர் எங்களை நோக்கிக் குதிரைமீது வருவதைக் கண்டதும், என் மனம் சிறிது ஒடுங்கியது. குதிரையினின்றும் குதித்து, முதலில் அம்மாளை அவர் தழுவிக்கொண்டார். பின்னர், முறையே எல்லோரையும் வணங்கினர். திடீரென நம்மிடம் வந்திருக்கும் இப்புதிய சகோதரரை நேசிப்பதா இல்லையா என்று முடிவுகட்ட முயற்சித்துக்கொண்டு நான் சற்று தூரத்தில் நின்றுகொண்டிருந்தேன். பல்வேறு எண்ணங்களால் என் உள்ளம் நிரம்பியிருந்த பொழுது ஜவாஹர், தம் இரு கரங்களாலும் என்னைத் தூக்கி எடுத்து, "இவள்தானே என் சிறிய தங்கை? இப்பொழுது ஒரு சிறு பெண்ணுக ஆகிவிட்டாள்" என்று கூறுவதைக் கேட்டேன். எனக்கு முத்தம் கொடுத்தார்; பின்னர், தூக்கியதைப்போலவே திடுமெனக் கீழே யிறக்கிவிட்டார். அடுத்த நிமிஷமே என்னைப் பற்றிய எல்லாம் அவர் நினைவிலிருந்து மறைந்தன.

நாங்கள் பழக ஆரம்பித்த பின், முதற் சில மாதங்கள் மகிழ்ச்சியுடையனவாய் இல்லை. ஜவாஹர் பயங்கரமாகத் தொந்தரவு செய்யும் சுபாவமுடையவராய் இருந்தார்.

ஏனெனில், அவருக்கு வேலை யில்லாதபொழுது, என்னுடன் குறும்புத்தனமாக விளையாடுவதில் நேரத்தைக் கழிப்பார். பிடிக்காததும் பயங்கரமானதுமான வேலைகளையெல்லாம் அவர் என்னைச் செய்யச் சொல்லுவார். நான் எதிர்பார்க்காத ஏராளமான பரிசுகளை என்னிடம் கொடுத்து, அவரைப் பற்றி நீண்ட நேரம் வருந்தாதபடி அவ்வளவு இனிமையாக நடந்துகொள்வார் எனினும், நான் அவரிடமிருந்து விலகியே இருப்பேன். அவரிடத்தில் எனக்கு அன்பு வளரவு மில்லை.

அமைதியானதும், சில சமயங்களில், மாறுபாடில்லாத சலிப்பானதுமான எனது வாழ்க்கையில், முதலாவது உலக யுத்தம் எவ்வித மாறுதலையும் செய்யவில்லை. தாய் அடிக்கடி கிளப்புகளுக்குச் சென்று, அங்கிருந்த ஏராளமான இந்திய, அயல் நாட்டுப் பெண்களோடு அமர்ந்து போர்வீரர்களுக்காகப் பின்னல் வேலை செய்துகொண்டிருந்த ஒரே மாறுதலைத்தான் நான் எங்கள் வீட்டில் கண்டேன். சில யுத்தச் செய்திகளால், தந்தையும் ஜவாஹரும் கலக்கமுறுவதையும் நான் பார்த்திருக்கிறேன்.

1916-ல் ஜவாஹருக்குத் திருமணம் நிகழ்ந்தது. அதிக ஆடம்பரத்துடனும் சிறப்போடும் மணவினை செய்யக் கருதி மாதக்கணக்கில் ஏற்பாடுகள் நடைபெற்றன. நகை செய்வோரும், வியாபாரிகளும், தையற்காரர்களும் பெருங் கூட்டமாக நாடோறும் வந்துபோய்க்கொண்டிருந்தார்கள். அநேக குமாஸ்தாக்கள் பல திட்டங்களை வகுத்து அவற்றிற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருந்தார்கள்.

டில்லியில் பெண்வீட்டில் கலியாணம் நடைபெறவிருந்தது. திருமணநாளுக்கு ஒரு வாரத்திற்கு முன் ஒரு நல்ல நாளில் மாப்பிள்ளை வீட்டார் அலஹாபாத்திலிருந்து புறப்பட்டார்கள். நூறு விருந்தாளிகளை அப்பா தன்னுடன் அழைத்துச் சென்றார். அழகாய் அலங்கரிக்கப் பெற்ற ஒரு 'ஸ்பெஷல்' ரயிலில் நாங்கள் சென்றோம். ஏனைய நூற்றுக் கணக்கான விருந்தினர்களும் டில்லியில் எங்களோடு கலந்துகொண்டார்கள். விருந்தினருக்கென அமர்த்தப் பட்ட பல வீடுகளும் போதாமையால் அவர்களுக்குத் தனித் தனியாகக் கூடாரம் அமைத்துக்கொடுக்கும்படி தந்தை

ஏற்பாடு செய்தார். ஒரு வாரத்தில் கூடாரங்களாலாய ஒரு சிறு நகரம் உண்டாயிற்று. இதனை 'நேரு திருமணத் தங்குமிடம்' என்று வழங்கலாயினர்.

அக்காலத்தில் டில்லியில் குளிர் கடுமையாய் இருந்தது; நான் இதை விரும்பி ஆனந்தமாகப் பொழுதுபோக்கினேன். இந்தியாவின் எல்லாப் பாகங்களிலிருந்தும், நான் அதற்கு முன் சந்தித்திராத உறவினர் பலர் வந்திருந்தார்கள். அவர்களோடு கூடி விளையாடுவதில் நான் மிக மகிழ்ச்சி கொண்டேன். ஒவ்வொரு நாளும் எங்காவது ஒரு விருந்து நடைபெறும். பத்து நாட்களுக்குப் பிறகு, திருமணத்திற்காக வந்திருந்தவர்கள் அலஹாபாத்துக்குத் திரும்பினார்கள். அங்கும் பல வைபவங்கள் நடைபெற்றன.

ஜவாஹர் ஓர் அழகிய மணமகனாகக் காட்சி அளித்தார்; கமலா, நான் இதுகாறும் கண்டிராத ஓர் அழகு மிக்க மணமகளாய்க் காணப்பட்டாள். 1917 நவம்பர் மாதத்தில் அவர்களுடைய ஒரே மகளான இந்திரா பிறந்தாள்.

1917-வரையில் என் வாழ்க்கையில் குறிப்பிடக்கூடிய தொன்றும் நிகழவில்லை. அந்த ஆண்டில் என் ஆசிரியை, தமது ஆங்கிலேய நண்பர் ஒருவரைக் காதலித்துக் கடிதில் மணந்துகொள்ள விரும்பினாள். அவளுடைய உறவினர் எல்லோரும் இங்கிலாந்தில் இருந்தமையால், என் அப்பாவே கிறிஸ்துவக் கோயிலில் வைத்து, அவளை மணம் புரிந்துகொடுக்க ஒப்புக்கொண்டார். மணவினையைப் பார்க்கவும், பெண்ணின் தோழியாக இருக்கவும் நான் ஆர்வங்கொண்டிருந்தேன்; ஆனால், என் ஆசிரியையைவிட்டுப் பிரிய மனமில்லாதவளாயும் இருந்தேன். அவளிடத்திருந்த வெறுப்புக்களெல்லாம் பறந்தோடிவிட்டன. பல ஆண்டுகள் அன்போடும் ஆதரவோடும் அவள் என்னைப் பரிபாலித்துவந்த செயல்களே என் நினைவில் இருந்தன. நீண்ட பல ஆண்டுகள்—அதாவது, பன்னிரண்டு ஆண்டுகள் — அவள் எங்களுடன் இருந்தாள். நாங்கள் அவளை எங்கள் குடும்பத்தில் ஒருவளாகவே கருதிவந்தோம். எங்கள் எல்லோருக்கும் அவளிடத்து மிக்க அன்புண்டு; அவளும் எங்களிடம் அன்பு பூண்டிருந்தாள்.

திருமண நாள் உதயமாயிற்று. எனக்குக் கவலை பிறந்தது. எல்லாம் ஒழுங்காக நடைபெற்றன. தந்தை அவளுக்குச் செய்தவற்றை எண்ணி, அவள் மிகவும் சந்தோஷப்பட்டாள். திருமணம் ஆனதும், அவள் தன் காதலனுடன் உல்லாசப் பிரயாணத்துக்குச் சென்றாள். பல நாட்கள் வரை நான் மனம் உடைந்தவளாய் இருந்தேன். என் இளமையில், இதுவே நான் முதன் முதலாக அடைந்த துக்கம். ஆனால், குழந்தைகளின் துக்கம் விரைவில் மறையக்கூடிய தாகையால், அவளைப் பிரிந்திருக்கப் பழகிவிட்டேன். சீக்கிரமாகவே, எனக்குக் கிடைத்த சுயேச்சையை அனுபவிக்கத் தொடங்கினேன். என் இஷ்டம் போல் எதையும் நான் செய்யமுடியும். அதன் படி எனக்குத் தெரிந்தவாறு எதையும் செய்ய நான் அனுமதிக்கப்பட்டேன்.

பள்ளிக்குச் சென்று மற்றக் குழந்தைகளோடு பாடம் கற்கவேண்டுமென்பது என் அவா. ஆனால், அப்பா இதை விரும்பவில்லை. ஓர் ஆசிரியையை அமர்த்தி, தனிமையில் சிறப்போடு கல்வி கற்பதே சரி என்று அவர் கருதினார். அந்தக் காலத்தில் பியானோ அல்லது வேறோர் இசைக் கருவி வாசிக்கக் கற்றுக்கொள்வதும், நன்றாகப் பேசத் தெரிவதும், ஜனங்களோடு நன்றாகப் பழகுவதுந்தான் ஒரு பெண்ணுக்கு வேண்டிய தகுதிகள். என் அக்காள் பள்ளிக்கூடத்திற்கே போகவில்லை; வீட்டிலேயே படித்தாள். பள்ளிக்கூடத்திற்குச் செல்லவேண்டுமென்று அவள் விரும்பினதாக எனக்குத் தெரியவில்லை. ஆனால், எனக்கு மட்டும் அந்த ஆசை இருந்தது. ஆசிரியைக்கு மணமானதும், என்னைப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்புமாறு அப்பாவை நயந்துகேட்டேன். முதலில் அப்பா என் வேண்டுகோளுக்கு இணங்காதவராய், வேறோர் ஆசிரியையை நியமிக்க எண்ணினார். பல ஆசிரியைகள் வந்தார்கள். ஆனால், என் அதிர்ஷ்டம் அவர்கள் தங்கவில்லை. இறுதியில் அப்பா, தம் இஷ்டத்திற்கு விரோதமாக என்னைப் பள்ளிக்கு அனுப்பினார். நான் படிப்பதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பள்ளிக்கூடம் சரியானதென்று கருதப்பட்டது. உயர்ந்த குடும்பத்தில் பிறந்த சிறுவர் சிறுமியர்க்கேற்ற தகுதிவாய்ந்த நல்ல இடம். நான் சேருவதற்கு முன்னர், அதில் ஆங்கிலேயக்

குழந்தைகளே இருந்தார்கள். பின்னர், பல இந்தியக் குழந்தைகள் சேர்ந்தனர்.

எனக்கு அது ஒரு புதிய வாழ்க்கையின் தொடக்கமாகவே இருந்தது. அந்தப் புதிய வாழ்க்கையின் ஒவ்வொரு நிமிஷமும் எனக்கு ஆனந்த மளித்தது. விளையாட்டிலும் படிப்பிலும் என் நேரம் முழுவதையும் நான் செலவழித்தேன். அப்பொழுது தனிமை உணர்ச்சி ஏற்படுவதற்கு அவகாச மில்லாமலேபோயிற்று. கனவோ என்னும்படி வாழ்க்கை அவ்வளவு இன்பமாய் இருந்தது. என் இளமையில் மிகவும் இன்புற்ற நாட்களில் பல, நான் பள்ளிக்கூடத்தில் கழித்த நாட்களேயாகும். மிகவும் குறைந்த சில வருடங்களிலேயே இவ்வாழ்க்கை திடுமென முடிவுற்றது.

ஆகவே, அன்பிற் குரிய என் வீட்டாருடன் அமைதியோடும், நல்ல பாதுகாப்போடும் நான் வளர்ந்துவந்தேன்.

"இந்நாள் அந்நாளாய் மாறலாகாதா ?"

—காலரிட்ஜ்.

தாயாரால் எதையும் கவனிக்க முடியா திருந்தபடியால், எங்கள் ஆசிரியை எங்களைவிட்டுப் பிரிந்ததும், சுவரூப் என்னைக் கவனித்துவந்தாள். சுவரூப் கடுமையாய் அதிகாரம் செய்யமாட்டாள். எனவே, நான் பெரும்பாலும் என் இஷ்டப்படியே நடந்துவந்தேன். அது சுவரூபுக்கும் சௌகரியமா யிருந்தது; எனக்கும் பொருத்தமாய் இருந்தது. கவிதையில் எனக்கு விருப்பம் அதிகம்; சுவரூபுக்கும் அவ்வாறே. நந்தவனத்தில் அமர்ந்து அவள் உரத்துப் படிக்கவும், பரவசத்தோடு நான் கேட்டு ஆனந்திக்கவுமாய் உற்சாகமான பல மாலைப்பொழுதுகளைக் கழித்துள்ளோம். நாங்கள் இருவரும் அபூர்வமான —அதியற்புதமான— பாசத்தால் பிணிக்கப்பட்டிருந்தோம். எனது இளமைப் பருவத்தின் அந்நாட்களில், சுவரூப் எனக்கு வழிகாட்டியாகவும், தத்துவ போதகராகவும், நடப்பினளாகவும் இருந்திருக்கிறாள்.

1921-ல் என் அக்காளுக்குத் திருமணம் ஆயிற்று. காஷ்மீரி முறைப்படி மிகச் சிறப்பாக அவளது திருமணம் நடைபெற்றது. நூற்றுக்கணக்கான விருந்தாளிகள், நண்பர்கள், உறவினர்களோடு, காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் எல்லோரும் எங்கள் இல்லத்தில் தங்கியிருந்தார்கள். அக்கமிட்டியின் கூட்டமொன்றும் அலஹாபாத்தில் நடந்தது. 'எதெதைச் செய்யலாம், எதெதைச் செய்யக்கூடாது' என்று தொந்தரவு கொடுக்கும் யாரும் இல்லாததால், அந்நாட்கள் எனக்கு மிகவும் இன்பமாயிருந்தன. அக்காளைவிட்டுப் பிரியவேண்டுமே யென்ற எண்ணம் மனத்தை வாட்டிற்று. ஆனால், மணவிழாச் சமயத்தில், நானும் மிக்க சந்தோஷத்துடன் இருந்தேன்.

உள்ளூர் காங்கிரஸ் தொண்டர்கள், தலைவர்களின் வருகையைப் பயன்படுத்திக்கொள்ள விரும்பி, ஒரு ஜில்லா மகாநாடு கூட்டினார்கள். சுற்றுப்புறக் கிராமங்களிலிருந்து ஏராளமான குடியானவர்கள் மகாநாட்டுக்குத் திரண்டு வந்தார்கள்; சாதாரணமாகத் தூங்கிவழிந்து கொண்டிருக்கும் இயல்புடைய அலஹாபாத் நகரம்,

அன்று பரபரப்போடும், உற்சாகமான கிளர்ச்சியோடும் விளங்கலாயிற்று. தேசத்தின் அரசியல் எழுச்சியால் மன வேதனைப்பட் டிருந்த அலஹாபாத் நகரவாசிகளான ஆங்கிலேயர்க ளிடையே, இது ஒரு விபரீத எண்ணத்தை உண்டாக்கிற்று; ஒரு பலாத்காரப் புரட்சி நடைபெறக் கூடுமோ என அவர்கள் எதிர்பார்த்தார்கள். அவர்களது அச்சத்தையும், விபரீத நடத்தையையும் எங்களால் அப் பொழுது அறிந்துகொள்ளவே முடியவில்லை. என் அக்காளின் திருமணத்திற் கெனக் குறிக்கப்பெற் றிருந்த மே, 10-ந் தெய்திக்கும், 1857-ம் ஆண்டுச் சிப்பாய்க் கலக நாளுக்கும் ஓர் ஒற்றுமை ஏற்பட் டிருந்ததைப் பின்னர் தான் தெரிந்துகொண்டோம்.

இறைச்சி உண்பதை விட்டுவிட அப்பொழுதுதான் நான் முடிவுசெய்தேன்! எனக்கு அதில் மிகுந்த விருப்ப மிருந்தது; ஒரு நாள் நான் சிற்றுண்டி அருந்திக்கொண் டிருக்கையில் மகாதேவ தேசாய் (காந்திஜியின் காரியதரிசி) பார்த்துவிட்டார். இறைச்சியால் சமையல் செய்த பல வகைக் கறிகள் என் முன் இருந்ததைக் கண்டு மனம் உடைந்தவராய், அப்பொழுதே, சைவ உணவைக் கொள்ளுமாறு வற்புறுத்தி நீண்டதொரு பிரசங்கம் செய்துவிட்டார். நான் இதற்கு எளிதில் இணங்க வில்லை; ஆனால், அவரோ என்னை விட்டபாடில்லை; என்னைக் கண்ட பொழுதெல்லாம் நாள் தவருமல் இதைப் பற்றியே வற் புறுத்திவந்தார். திருமண விருந்துகள் நடைபெற்றுக் கொண்டிருந்த காலத்தில், நான் இப்பழக்கத்தை விட்டு விட்டேன். இது கண்டு தாயைத் தவிர மற்றெல்லோரும் வருந்தினர்கள். என் தாய் இது கேட்டு மனம் மிகப் பூரித்தாள். இறைச்சி உணவை அவள் அருவருத்து வந்தாள். தன் இச்சையாக அதை அவள் தொடவே மாட்டாள். நோயா யிருந்த காலத்தில், இறைச்சியைச் சாருகவோ அன்றி வேறு பக்குவத்திலோ உட்கொள்ளு மாறு அவள் மிகவும் வற்புறுத்தப்பட்டாள். ஊண் உணவு கொள்வதில் எனக்கு அடிக்கடி விருப்ப மிருந்தும், மூன்ருண்டுகள் வரை இறைச்சி எதையும் நான் கையால் கூடத் தொட வில்லை. ஒரு கிறிஸ்துமஸின்போது நெருங் கிய உறவினர் சிலருடன் ஒரு வார காலம் தங்கி யிருந்து

வரும் என்னைத்துடன் சென்றேன். அவர்கள் எல்லோரும் ஊன் உண்பதைப் பார்த்துக்கொண்டேயிருந்த நான், அதில் ஈடுபட்டு என் உறுதியை இழந்தேன்.

சுவரூப் வீட்டைவிட்டு அகன்றதும், நான் தனியளானேன்; மனமும் சஞ்சல மடைந்தது. சுவரூபோடு ஒத்த வயதுடையவளான என் அண்ணுவின் மனைவி கமலா, ஒருவாறு சுவரூபின் ஸ்தானத்தை ஏற்றுக்கொண்டாள். இந்தக் காலத்தில்தான், நான் அப்பாவை அடிக்கடி பார்த்து, அவரைப் பற்றி அதிகமாய்த் தெரிந்துகொள்ள முடிந்தது. சுவரூபின் பிரிவால் நான் அடைந்துள்ள நிலையைக் கண்டு அவரும், தம்மால் இயன்றளவு என்னேடு அளவளாவிவந்தார். அதற்கு முன் எப்பொழுதுமே நான் அறிந்திராத அளவு அவரைப் பற்றி அறியவும், அவரிடத்தில் அன்பு பாராட்டவும் தொடங்கிய சந்தர்ப்பத்தில், முதன் முறையாக அவர் சிறைப்படுத்தப்பட்டார். நாங்கள் நெருங்கிப் பழகிய சொற்ப காலமும் முடிவுற்றது.

1919-ம் ஆண்டின் ஆரம்பத்தில்தான் நான் முதன் முதலாகக் காந்திஜியைச் சந்தித்தேன். என் தந்தையின் வேண்டுகோளுக் கிணங்கி, அவருடன் விவாதிக்கும் பொருட்டு, காந்திஜி அலாஹாபாத்துக்கு வந்திருந்தார். 'பாபு' என்று அழைக்கப்பெறும் காந்திஜியைப் பற்றி, நான் மிகவும் கேள்விப்பட்டிருந்தேன். ஆனுல், எனக்கு அவர் ஒரு கற்பனை மனிதராகவே தோற்றமளித்தார். நான் ஒரு சிறுமி; அவருடைய லட்சியங்களை என்னுல் எளிதில் அறிந்துகொள்ள முடியவில்லை. அவரது கருத்துக்கள் எனக்கு வெறும் கனவுத் தோற்றங்கள்போன்று இருந்தன. முதன்முறையாக நான் அவரைச் சந்தித்தபோது, கவனத்தை ஈர்க்கக்கூடிய ஒரு மனிதராகவே அவர் எனக்குத் தோன்றவில்லை. உயரமும், வலிமையும், ஒளி மிகுந்த கண்களும், ஏறுபோன்ற நடையும் உடைய ஒருவரைச் சந்திக்கக் கூடுமென நான் எதிர்பார்த்தேன். ஆனுல், மெலிந்த, பட்டினியால் உருக்குலைந்த, சிறிது வளைந்த, அரை உடை உடுத்திய, ஊன்றுகோலை உதவியாய்க் கொண்ட, தாழ்மையான தோற்றம் பொருந்திய, சாதுவான ஓர் உருவம் என் கண் முன் தோன்றிற்று. நான் மிகுதியும் ஏமாற்ற மடைந்தேன். இந்தச் சிறிய மனிதர்

தானு நமது நாட்டிற்காக அரும் பெரும் செயல்களைச் செய்து, அதை அந்நிய ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கப் போகிறவர் என்று அதிசயித்தேன்!

'ஜாலியன் வாலா' தோட்டத்தில் நிகழ்ந்த, கொடிய, துக்கமிகுந்த நிகழ்ச்சிகளைப் பற்றி நான் அதிகமாய்க் கேட்டும், படித்துமிருக்கிறேன்; சிறியவளாயிருந்தபோதிலும், பழிக்குப் பழி வாங்கவேண்டும் என்று நான் விரும்பினேன். பழிக்குப் பழி வாங்குவதென்பது, நமக்குப் பிறர் இழைத்த கொடுமைகளுக்குப் பதிலாக, மீண்டும் அவர்களுக்கு அப்படியே பலாத்காரத்தாலும், ரத்தம் சிந்தியும் கொடுமை இழைப்பது என்றுதான், நான் என்னைப்பற்றிய வரை கருதியிருந்தேன். ஆனல், பாபுவின் அஹிம்ஸா தர்மத்தைப் பற்றிக் கேள்விப்பட்டதும், அது ஒரு பொருந்தாக் கொள்கை என்றும், அதை யாரும்-அதிலும், தேசமக்கள் அனைவரும்- கையாள முடியாதென்றும் நினைத்தேன். மேலும், இயல்பாகவே, எனக்கு விபரீதமான சுபாவம் உண்டு; நான் அறிந்திருந்த ஒவ்வொருவரும், பாபுவின் மிகச் சிறிய கட்டளையையும் நிறைவேற்றி வைப்பதற்காகவே தாம் வாழ்ந்துகொண்டிருப்பதாக எண்ணியதுடன், அவருக்கு வணக்கம் செலுத்திக்கொண்டிருப்பதாகவும் எனக்குத் தோன்றிற்று; இவற்றைக் கண்டும், நான் மிக அலட்சியமாக நடந்துகொண்டேன். இதைக் கண்டு என் தாய் மிக வருந்தினுள். மனத்தில் நான் 'பாபு'வைப் பாராட்டி அன்புகொண்டேன். ஆனல், பிறரைப்போல், அவரை முனிவராகவோ, தெய்வ சக்தியுடையவராகவோ போற்ற நான் மறுத்தேன்.

அவரைப் பார்க்குந்தொறும் பார்க்குந்தொறும் நான் அவர்பால் இழுக்கப்பட்டேன். சில வேளைகளில் அவர் இவ்வுலகத்தவர் அல்லர்போல் எனக்குத் தோன்றுவார். ஆயினும், அவர் இவ்வுலகத்தைச் சார்ந்தவராகவும், இவ்வுலக விஷயங்களை நன்கு மதிப்பவராகவும் இருந்தார். லட்சக்கணக்கான மக்களை, தற்காலிகமாகவன்றி, ஆயுட்காலம் முழுதும் தமது சாந்தமான பார்வையாலும், வெற்றி கொள்ளத்தக்க புன்னகையாலும் ஆட்கொண்டதைப்போல் என்னையும் அவர் ஆட்கொண்டார். இருதயபூர்வமாக ஒரு முறை நாம் பாபுவுடன் பழகி

விட்டால், பிறகு, அவர் தொடர்பி லின்றும் விடுபட முடியாது.

1920-ல் காந்திஜீ சத்யாக்கிரக இயக்கத்தை ஆரம்பித்தார். அன்று முதலே, என் வாழ்க்கைமட்டு மன்று-எங்கள் குடும்பத்தினர் எல்லோருடைய வாழ்க்கையும், இன்னும் நூற்றுக்கணக்கான மற்றவர்களுடைய வாழ்க்கையும் முற்றிலும் மாறுதல் அடைந்துவிட்டன. பிரிட்டிஷாரின் பள்ளிகளைப் பகிஷ்கரிப்பது என்பது அவ்வியக்கத்தின் பிரிவுகளில் ஒன்றாகும். என் சிறிய உலகத்திலும், எனது படிப்பிலும் நான் முற்றும் மூழ்கி யிருந்தமையால், என் வீட்டில் ஏற்பட்ட மாறுதல்களையோ, அன்றி, எங்களை நோக்கி வந்த புயலையோ நான் கவனிக்க வில்லை. எனவே, ஒரு நாள் என் தந்தை என்னை அழைத்து நிலைமையை நன்கு விளக்கிவிட்டு, இனி, பள்ளிக்குச் செல்லக் கூடாது என்று சொன்னதைக் கேட்டு நான் திடுக்கிட்டேன். பள்ளிக்கூடத்தில் எனக்கு அதிகப் பற்றிருந்தது; மேலும், அங்கு எனக்குப் பல நண்பர்களும் இருந்தார்கள். அப்பா சொன்னதுதான் சரி யென்று தெரிந்துங்கூட, பள்ளியை விடுவ தென்பது கஷ்டமாகத் தோன்றிற்று. வேறு பள்ளிக்கூடங்களில் படிக்க அப்பொழுது சந்தர்ப்ப மில்லை. எனவே, வீட்டில் வந்து பாடம் சொல்லித்தர ஆசிரியர்களை அப்பா அமர்த்தினர். சில வாரங்கள் வரை இன்னது செய்வ தென்று தோன்றுதவளாயும், வேலை எதுவும் இல்லாததால் துக்கம் மேலிட்டவளாயும் இருந்தேன். ஆனல், அக்காலத்தில் ஒன்றன்பின் ஒன்ருய்ச் சம்பவங்கள் விரைந்து நிகழ்ந்தன. கடிதில், நம் நாட்டின் கதியையே மாற்றவந்த அந்நிகழ்ச்சிச் சூழலில் நானும் சிக்கிக்கொண்டேன்.

ஒரு காலத்தில் மிகவும் கட்டுத் திட்டங்களுக்கு உட்பட்டு, மாறுபாடின்றியும், சுவை யற்று மிருந்த எனது வாழ்க்கையை, அடிக்கடி மாறுவனவாயும், உள்ளக் கிளர்ச்சியைத் தூண்டுவனவாயும், அடுத்து என்ன நிகழுமோ என்று அறிய முடியாவாறும் உள்ள ஓர் அன்றாட வாழ்க்கையாக மாற்றச் சில புதிய நிகழ்ச்சிகள் நாடோறும் நடைபெறலாயின. காந்திஜியோடு சேர்ந்து பணியாற்ற ஜவாஹர் விரும்பினர். நன்மை தீமைகளை நன் கறிந்த

பின்னரே, இதில் ஈடுபடவேண்டும் என்று கருதி அப்பா சிந்தனையில் ஆழ்ந்தார். ஆனால், ஜவாஹர் ஒரே முடிவுடன் சத்யாக்கிரக இயக்கத்துக்குத் தம்மை அர்ப்பணம் செய்து விட்டார். ஒரு பெரிய மனப் போராட்டத்துக்குப் பின்னரே, ஜவாஹரும் இதில் ஈடுபட்டார். காந்திஜியின் தலைமையில் நடைபெறும் சத்யாக்கிரக இயக்கந்தான் விடுதலையைப் பெறுவதற்குரிய ஒரே வழி என்பதை அவர் உணர்ந்தார். ஆனால், 'பாபு' வைப் பின்பற்றும்படி தந்தையைத் திருப்புவது என்பது கடினமான வேலையா யிருந்தது. காந்திஜியின் கருத்துக்களை அப்பா எளிதில் ஏற்றுக்கொள்ளவில்லை. சத்யாக்கிரக இயக்கத்தைப் பற்றி மிக நன்ருகச் சிந்தித்த பின்னருங்கூட, அவர் அதனை அவ்வளவாக விரும்பவில்லை. சிறைக்குச் செல்லு வதில் பொருள் ஏதும் இருப்பதாக அவர் கருதவில்லை; ஜவாஹர் சிறைவாசத்தை ஏற்பதையும் அவர் விரும்ப வில்லை அந்தச் சமயம் சிறைச்சாலை யாத்திரை ஆரம்ப மாகவில்லை. அப்பா ஜவாஹரை அளவுகடந்து நேசித் தார். தம் மகன், கஷ்டங்களை அனுபவிக்கவும், சிறைக்குப் போகவம் எண்ணியது அவருக்கு வருத்தத்தை அளித்தது.

பல நாட்களாய் அப்பா மனத்திலும், ஜவாஹர் மனத்திலும் போராட்டம் நடந்துகொண் டிருந்தது. நீண்ட விவாதங்களும், சில சமயங்களில் கடுமையான சொற்பிரயோகங்களும் நடந்தன. ஒருவர், மற்ருெருவரை எவ்வாறு தம் வழிக்குக் கொண்டுவருவது என்பதை இராப் பகலாய்ச் சிந்தித்துச் சிந்தித்து, இருவரும் பல நாட்கள் வாதனை யடைந்துவந்தனர். பாபுவைப் பின்பற்ற ஜவாஹர் உறுதிகொண்டதைக் கண்டு, தந்தை வருந்தி ஞர். சிறைக்குச் சென்ருல், ஜவாஹர் வெறுந் தரையில் படுத்து உறங்க வேண்டுமே. என்று எண்ணி, அத்தகைய படுக்கை எவ்வாறு இருக்கும் என்று அறிவதற்காக, அப்பாவும் தரையில் படுத்துக் கிடந்ததாக, பிற்காலத்தில் நாங்கள் கேள்விப்பட்டோம். தந்தையும் மகனும் அரசியல் கொள்கைகளால் பிளவுபட்டு, முடிவில்லாத விவாதங் களைச் செய்துகொண் டிருப்பது, அந்நாட்களில் எங்கள் எல்லோருக்கும்—சிறப்பாகத் தாயாருக்கும், கமலாவுக் கும்—வருத்தத்தைத் தந்தது. அவர்களால் அதைப்

பார்த்துச் சகிக்க முடியவில்லை. எந்த நேரமும் நிலைமை கடுமையாகவே இருந்தது. யாராவது பேசினுல் அப்பாவுக்குக் கோபம் மூண்டுவிடும் என்றும், ஜவாஹருக்கு ஆத்திரம் பொங்கிவிடும் என்றும் அஞ்சி, யாரும் ஒரு வார்த்தைகூடப் பேசத் துணியவில்லை.

பாஞ்சாலத்திலும், ஜாலியன்வாலா தோட்டத்திலும் நடைபெற்ற செயல்கள், அப்பாவின் மனத்தைப் பெரும் பாலும் ஜவாஹரின் நோக்கத்திற்கே திருப்பின. அதன் பிறகே, அவரது மகன் சத்யாக்கிரக இயக்கத்தில் கொண்ட பரிபூரண நம்பிக்கையும், தவறற்ற வழியும், மேலும், ஒரே மகனிடத்தில் அவர் கொண்டிருந்த பேரன்பும் தந்தையின் மனத்தை மாற்றின. ஜவாஹரோடு தாமும் காந்திஜியைப் பின்பற்றத் துணிந்தார். இவ்வியக்கத்தில் கலந்துகொள்வதற்கு முன்பே, சட்ட நிபுணராய் இருந்து, பெரும்பொருள் ஈட்டிவந்த தம் அலுவல்களை அவர் துறந்தார். அதுவரை சுகபோகங்களோடு வாழ்ந்துவந்த எங்கள் வாழ்க்கையை, சிறிது கஷ்டமும், எளிமையும் உடைய வாழ்க்கையாக இந்நிலை மாற்றிற்று.

அப்பா, கோடிக்கணக்கில் சம்பாதித்துவந்தார்; ஒரு காலத்தில் நமக்கு வேண்டியிருக்குமே என்று கருதிப் பணத்தைச் சேமித்துவைக்காமல் செலவிட்டும் வந்தார். அவர், தொழிலைவிட்ட உடனே, குடும்ப நிர்வாகத்தில் நாங்கள் சில மாறுதல்களைச் செய்யவேண்டியதாக ஏற்பட்டது. ஏனெனில், முற்றும் வருமானமேயில்லாத நிலையில், முந்திய வாழ்க்கையைப் போன்ற, ஒரு வாழ்க்கையை நடத்துவது இயலாதிருந்தது. முதலில் தம்முடைய குதிரைகளையும், வண்டிகளையும் அப்பா விற்றுவிட்டார். இதைச் செய்வது அவருக்கு விருப்பமானதன்று; ஏனெனில், தமது குதிரைகளிடத்து அவர் பிரியமாக இருந்ததுடன், அவற்றைப் பற்றி பெருமைபாராட்டிக் கொண்டுமிருந்தார்; ஆனல், அவற்றை விற்றுத்தானுக வேண்டியிருந்தது. எங்களிடமிருந்த ஏராளமான—ஒரு சேனை போன்ற — வேலையாட்களில் சிலரை நீக்கவும், எல்லாத் துறைகளிலும் செலவைக் குறைக்கவும் துவக்கினேம். விசேஷ விருந்துகளெல்லாம் நிறுத்தப்பட்டன.

இரண்டு மூன்று சமையற்காரர்களில் ஒருவரை மட்டும் வைத்துக்கொண்டோம். பரிமாறுகிறவர்கள் (பட்லர்ஸ்) அனைவரும், அவர்களுக்குச் சாமான்களை எடுத்துவந்து கொடுக்கத் துணையாயிருந்த ஏராளமான ஏவலாளர்களுட்பட நீக்கப்பட்டனர். டிரெஸ்டனிலிருந்தும், வெனிஸிலிருந்தும் வந்த அழகுமிக்க பீங்கான்களையும், கண்ணாடிகளையும், விலையுயர்ந்த வனப்புமிக்க ஏனைய பல சாமான்களையும் விற்றுவிட்டோம். குறைவான வேலைக்காரர்களோடும், பொருள்களோடும் வாழ்க்கைநடத்தப் பழகவேண்டியதாயிற்று. நான் மிகச் சிறியவளாய் இருந்தமையால் இவைகளைப் பற்றி வருந்தவில்லை. ஆனால், மற்றவர்களுக்கு— சிறப்பாக, என் தாய்தந்தையருக்கு— இவை வருத்தத்தையே விளைத்திருக்கும்.

எங்கள் வாழ்க்கையில் இத்தகைய மாறுதல்கள் ஏற்படுவதற்கு முன்னர், ஓர் அதிசயமான சம்பவம் நிகழ்ந்தது. எங்கள் வீட்டின் பின்புறத்தில் எங்களுக்குச் சொந்தமான பல சிறிய வீடுகள் இருந்தன. அவற்றில் நிலக்கரி, விறகு முதலிய சாமான்களைப் போட்டுவைப்பார்கள். விறகு இருந்த சிறு வீட்டில், ஒரு பெரிய நல்லபாம்பு இருந்தது. எனக்கு ஞாபகம் தெரிந்தது முதல், இது அங்கேயே இருந்துவந்தது. இது ஒருவரையும் கடித்ததில்லை. எங்கள் வேலைக்காரர்கள் நள்ளிரவில்கூட சிறிதும் தயங்காமல் அங்கு செல்வார்கள். அடிக்கடி இப்பெரிய பாம்பு எங்கள் வீட்டுத் தோட்டத்திலும், சிறிய வீடுகளைச் சுற்றியும் ஊர்ந்து செல்வதை எல்லோரும் பார்த்திருக்கிறார்கள். இதைக் கண்டு ஒருவரும் பயப்படுவதோ கவலைப்படுவதோ இல்லை. குடும்பத்தின் நலனைப் பாதுகாத்துக்கொண்டு அந்தப் பாம்பு அங்கு இருக்கும் வரை, எங்கள் குடும்பத்திற்கு எத்தகைய துன்பமும் ஏற்படமாட்டாதென்றும், செல்வமும், செழிப்புமே ஏற்படுமென்றும் பொதுவாக ஒரு மூடநம்பிக்கை இருந்துவந்தது.

அப்பா, தம் தொழிலை நிறுத்தும் முன், அதாவது 1920-ல் இந்தப் பாம்பைப் பற்றிய உண்மைகளை அறியாத ஒரு புதிய வேலைக்காரன், ஒரு நாள் மாலை அதைப் பார்த்துப் பயந்து சிலரது துணையுடன் அடித்துக்கொன்றுவிட்டான். எங்கள் பழைய வேலைக்காரர்களும்,

அம்மாளும் இச்செயலைக்கேட்டு நடுநடுங்கினுர்கள். ஆனல், காரியம் என்னவோ நடைபெற்றுவிட்டது. இதன் பிறகு, உடனே குடும்பத்தில் பல மாறுதல்கள் உண்டாயின. செல்வச் செழிப்புடன் விளங்கிய எங்கள் மாளிகை, மிக எளிய இல்லமாக மாறிற்று. தந்தையும் ஜவாஹரும் சிறை சென்ருர்கள், எங்கள் வேலைக்காரர்கள், இவையெல்லாம் பாம்பின் சாவால் எங்களுக்கு ஏற்பட்ட (அவர்கள் கருத்துப்படி) துரதிர்ஷ்டங்கள் என்று எண்ணினுர்கள்.

ஒத்துழையாமை என்பது என் தந்தையைப் பொறுத்த மட்டில், தமது அறுபதாவது வயதில் தம்முடைய எல்லாப் பழக்க வழக்கங்களையும் வேறு விதமாக மாற்றியமைத்துக் கொள்வதாக இருந்தது. மேலும், தொழில் துறையிலோ, அரசியல் துறையிலோ உள்ள நண்பர்களுடன்மட்டு மல்லாது, நீண்ட காலத் தொடர்புடைய நண்பர்களிட மிருந்தும் பிரிவை உண்டாக்கியது. பிறகு, நெடுநாட் பழக்க முடைய அந்த நண்பர்கள் அப்பாவையோ, பாபு வையோ நேருக்கு நேர் சந்திப்பதுகூடக் கிடையாது. பல சுக சாதனங்களையும் துறக்க வேண்டிய தாயிற்று. எப்பொழுதும் அவர் சௌகரியமாக வாழ்ந்துவந்தவர். தாம் செல்லும் வழி சரியானதென்று மட்டும் அறிந்து கொண்டுவிட்டால், முழு மனத்தோடு தம் பங்கைச் செய் வார். முந்திய நிலையைப் பற்றி எண்ணவேமாட்டார்.

நாளுக்கு நாள் தந்தையும் ஜவாஹரும் மேன்மேலும் அரசியலில் ஆழ்ந்து செல்லலாயினர். முன், தங்கு தடை யின்றிச் சஞ்சல மற்றதா யிருந்த எங்கள் குடும்ப வாழ்க்கை குழப்பத்திற் குள்ளானது. நாடெங்கணு மிருந்து பல காங்கிரஸ் தொண்டர்கள் வந்து, எங்கள் வீட்டில் சில நாட்கள் தங்கி, அரசியல் விஷயங்களைக் குறித்துப் பேசலானுர்கள். வீட்டில் நாள்தோறும் கூட்டங்கள் நடைபெறலாயின. முடிவின்றிச் சங்கிலித் தொடர் போன்று மக்கள் எங்கள் வீட்டிற்கு வந்து போய்க்கொண் டிருந்தார்கள். அதற்கு முன்னர் எங்கள் வீட்டிற்குப் பலர் வருவ துண்டு; ஆனல், அவர்கள் எல் லோரும் வேறு வகையினர். ஆடம்பரங்களில் ஒருவருக் கொருவர் போட்டிபோட்டுக்கொண்டு, அழகிய குதிரை கள் பூட்டிய வண்டிகளிலும், மோட்டார்களிலும்

வருவார்கள். இயக்கம் ஆரம்ப மானதும் எங்களது பணக்கார நண்பர்களில் சிலர், எங்கள் வீட்டிற்கு வருவதை நிறுத்திக்கொண்டார்கள். ஒரு காலத்தில் செல்வத்தையும், பெருமிதத்தையும் கண்டவர்கள், அந்தச் சமயம் எளிய, அடக்க முடைய, கதருடை தரித்த ஆண்களையும் பெண்களையுமே காணலானார்கள். அப்படிக் காட்சியளித்த ஒவ்வொரு ஆணும் பெண்ணும் தந்தம் உள்ளத்தில் அசைக்க முடியா உறுதியையும், பின்வாங்காத் தீரத்தையும் உடையவர்களாய், தேச சுதந்திரத்திற்காகச் சேவை செய்து, அவசியமாயின் அதற்காகத் தங்கள் உயிரையே தியாகம் செய்யக்கூடியவர்களாய் இருந்தார்கள்.

1921-ல் நிலைமை உச்ச நிலையை அடைந்தது. பிரிட்டிஷ் அரசாங்கம் மக்களைத் திரள்திரளாய்ச் சிறைப்படுத்த முனைந்தது. இதற்குத் தயாராய் நம் மக்கள் ஆயிரக்கணக்கில் திரண்டார்கள். அதுவரை, சிறைக்கூடமென்பது இன்னதென யாருக்கும் தெரியாதிருந்தது. ஆனால், மிக விரைவிலேயே அவர்களில் பலருக்கு அது ஓர் இரண்டாவது வீடாக ஆயிற்று. அந்தச் சமயத்தில் வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு வந்திருந்தார்; அலஹாபாத்துக்கும் அவர் வருவதற்கு ஏற்பாடா யிருந்தது. குறிப்பிட்ட நேரத்தில் கதவுகளை மூடிவிடுவதிலும், வீட்டுக்கு வருபவர்களை அனுமதிப்பதிலும், அரசாங்கம், தன் விருப்பம்போல் நடந்துகொள்வதற் கேதுவாக, எங்களுக்குச் சொந்தமான இடங்களை அனுமதிக்க வேண்டுமெனக் கேட்டு, இளவரசர் வருவதற்குச் சில நாட்களுக்கு முன், என் தந்தைக்கு, அலஹாபாத்திலிருந்த ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டிட மிருந்து தகவல் வந்தது. தம் சொத்தை உபயோகிக்கும் விஷயத்தில் மாஜிஸ்ட்ரேட்டுக்கு அதிகார மில்லை என்றும், சட்டப்படியும், நியாயப்படியும் சரியானது என்று எண்ணுகிறபடி அதைத் தாமே உபயோகப்படுத்தப்போவதாகவும் அப்பா பதில் எழுதினர். இளவரசருக்கு அலஹாபாத்தில் எவ்விதத் தீங்கும் நேராதவாறு, ஒத்துழையாமை இயக்கத்தைச் சார்ந்தவரென்ற முறையில் தாம் பார்த்துக்கொள்வதாகவும் மாஜிஸ்ட்ரேட்டுக்கு அவர் உறுதியளித்தார். இத்தகைய உறுதிமொழிக்குப் பரிசாகத் தந்தைக்குச் சிறைவாசம்

அளிக்கப்பட்டது. முன்னரே ஏற்பாடுசெய் திருந்தபடி, பொதுவாக எல்லா ஏற்பாடுகளும் நிறைவேற்றப்பட விருக்கின்றன என்றும், பிரபலத் தொண்டர்கள் உட்பட எல்லாத் தலைவர்களும் சிறைப்படுத்தப்பட விருக்கின்றனர் என்றும், ஒரு நாள் மாலையில் நாங்கள் கேள்விப்பட்டோம். அன்று மாலையே-அதாவது, 1921 டிஸம்பர் 6வ மாலையே-தந்தையையும், ஜவாஹரையும் சிறைப்படுத்த உத்தரவு களுடன் போலிஸார் முதன்முதலாக ஆனந்தபவனத்திற்கு வந்தனர். அன்றுமுதல் எங்கள் குடும்பத்தில் யாரையாவது கைதுசெய்வதற்காகவோ, அன்றித் தடைப்படுத்தப் பட்ட நூல்கள், கடிதங்கள் இருக்கலாமென்ற கற்பனையில் சோதனை போடவோ போலிசார் அடிக்கடி வருவதுண்டு. கார்களைப் பறிமுதல் செய்வதன்மூலமாகவோ, தேவைக்கு அதிகமாக எங்களிட மிருந்த சாமான்கள் எங்களைவிட்டு நீங்குவதற்குத் துணை செய்வதன் மூலமாகவோ அபராதத் தொகைகளை வசூல்செய்யவும் அவர்கள் அடிக்கடி வருவ துண்டு.

போலிசாரது விஜயம், அன்று மாலை எங்கள் வீட்டில் மிகுந்த பரபரப்பை விளைத்தது. எங்கள் வீட்டில் நீண்ட நாட்களாக வேலைபார்த்துவந்த சில வேலைக்காரர்கள் மிகவும் சினந்து, போலிசாரை அடித்து மதிற்சுவர்களுக் கப்பால் தூக்கி எறிந்துவிட எண்ணினர்கள். மடத்தனமாக நடந்துகொள்ளக்கூடாது என்று என் தாய் அவர்களை எச்சரித்தாள். திடீரெனக் கைதுசெய்ய வந்திருப்பதை யறிந்து. அப்பாவையும் ஜவாஹரையும் தவிர நாங்கள் எல்லோருமே மனத்துயர் அடைந்தோம். எங்கள் அன்பிற் குரியவர்கள் சிறைக் கம்பிகளுக்கு உள்ளே வைக்கப்படுவார்கள் என்ற எண்ணம், எங்கள் மனத்தைத் துளைத்தது. என்னென்ன இடுக்கண்கள் அவர்களுக்கு ஏற்படுமோ என்பதைப் பற்றி நாங்கள் ஏதும் அறியாதவர்களாய் இருந்தோம். கடந்த சில மாதங்களாக, எங்கள் வீட்டில் ஓயாது நடைபெற்ற மாறுதல்களினுல், அளவு கடந்த திகிலைப் பெற்றிருந்த என் தாய்க்கு, இது மற்றெல்லாவற்றிலும் மிகக் கடுமையாகவேயிருந்தது. ஆனுல், அவள் ஒரு சிறந்த வீர மனைவி; அதனினும் சிறப்பாக ஒரு வீரத் தாயுமாவாள். தன் மனம் படும் பாட்டை, பிறர்

அறியும்படி அவள் காட்டிக்கொள்ளவில்லை. அப்பாவும் அண்ணுவும் போலிசாரைப் பின்தொடர ஆயத்தமாகி, எங்களிடம் விடைபெற்றுக்கொண்டார்கள். போலீஸ் காரில் நுழைந்ததும், போலிசார் அவர்களை ஜில்லாச் சிறைக்குக் கொண்டுபோய்விட்டார்கள். கணவர்கள் தங்களைவிட்டுப் பிரியும்போது, அம்மாவும் கமலாவும் தைரியத்துடன் புன்னகை புரிந்தார்கள்; எனினும், அவர்கள் மனத்தில் பிரிவாற்ருமையும் துக்கமும் குடிகொண்டிருந்தன. மோட்டார் எங்கள் பார்வையைக் கடந்து சென்றதும், நாங்கள் வீட்டிற்குள் நுழைந்தோம். சற்று முன்பு உயிர் நிறைந்திருந்த வீடு, திடீரென யாவற்றையும் பறிகொடுத்த நிலையில் சந்தோஷமற்றதாயும், களையற்றதாயும் காணப்பட்டது.

1921 டிசம்பர் 7ல், தந்தையும் ஜவாஹரும் மற்றவர்களும் ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டால் விசாரிக்கப்பட்டார்கள். வழக்கின் விவரத்தை விளக்கத் துவங்கிய அரசாங்க வக்கில் ஓர் இந்தியர்; அப்பாவின் நீண்ட கால நண்பர்; நெருங்கிய தோழர்; தந்தைமீது குற்றஞ்சாட்டிப் பேசவோ மறுக்கவோ, அன்றித் தன் வேலையை ராஜீநாமாச்செய்யவோ அவருக்குத் தைரியம் இல்லை. வழக்கு நடைபெற்றுக்கொண்டிருந்தபோது அவர் நடந்துகொண்ட மாதிரி, மனோவலிமை இழந்த, வெட்கமுடைய மனிதரை, நான் பார்த்ததில்லை. வழக்கு முடியும் வரையில் அவர் ஒரு முறைகூட அப்பாவை நேரே பாராது, தன் பார்வையை வேறு பக்கமாகவே வைத்துக்கொண்டிருந்தார். வழக்கைக் குறித்துப் பேசும்பொழுது பிறர் செவிகளுக்கு எட்டாத அளவு தாழ்ந்த குரலில் பேசினர். அதற்கு முன், நாள் தவருமல் அவர், என் தந்தையைச் சந்திப்பது வழக்கம்; மேலும், தந்தையால் நன்கு உபசரிக்கப்பட்டு, நண்பர்க்குரிய எல்லா உரிமைகளையும் பெற்றுவந்தார். தந்தை கைதியானதும், இவை யாவும் அவரது நினைவினின்றும் மறைந்தன. அப்பாவுக்கும் அண்ணுவுக்கும் ஆறு மாத வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. தீர்ப்புக் கிடைத்ததும், தம் தோழர்களுக்கு அப்பா இவ்வறிக்கையை வெளியிட்டார்:

“உங்கள் மத்தியிலிருந்து நான் வேலை செய்துகொண்டிருந்த காலத்தில், என்னுலியன்றவரை உங்களுக்குத்

தொண்டாற்றினேன்; இப்பொழுது என் ஒரே மகனோடு சிறைசெல்வதால் என் தாய்நாட்டிற்குத் தொண்டாற்றும் சிறந்த பாக்கியம் பெற்றுள்ளேன். சுதந்திரம் பெற்ற மனிதர்களாய் நாம் மீண்டும் சந்திப்பதற்கு நீண்டநாட்கள் இல்லை என்று நான் முற்றும் நம்புகிறேன். உங்களைப் பிரியுங்கால் நான் ஒரு வார்த்தை சொல்ல விரும்புகிறேன். அஹிம்சா முறையில், ஒத்துழையாமை இயக்கத்தைச் சுயராஜ்யம் நமக்குக் கிடைக்கும் வரையில் தொடர்ந்து நடத்துங்கள். பத்து, நூறு, ஆயிரக்கணக்கில் நீங்கள் தொண்டர்களாகச் சேருங்கள். இந்தியாவில் இன்றைக்கு இருக்கும் நமது விடுதலைக் கோயிலுக்கு—அதாவது சிறைக்கு—நீங்கள் செய்யும் யாத்திரை தடைப்படாத ஆறுபோல் செல்லவேண்டும்; நாளுக்கு நாள் வலிமையும் பெருமையும், பொங்கி யோடும் ஆறுபோல் பெருகவேண்டும். விடை கொடுங்கள்.''

நிச்சயமற்ற, தியாகம் நிரம்பிய, மன வேதனையும் துக்கமும் உடைய புதிய வாழ்க்கை இவ்வாறு ஆரம்பமாயிற்று. நாங்கள் நடத்திய போராட்டத்தின் இலட்சியம் மிகமிகச் சிறந்ததாக இருந்ததால், அதற்காக நாங்கள் யாவற்றையும் இழக்கத் துணிந்தோம். தந்தையையும், அண்ணாவையும்விட்டு, எங்களைப் பிரித்ததை எங்களில் ஒவ்வொருவரும் வெறுத்தோம். ஆனால், தேச சேவை செய்யவேண்டிய நேரத்தில், தேசத்தின் பக்கமாக நின்று, அவர்கள், தங்களது கடமையைச் செய்ததற்காக, அவர்களைப் பற்றி நாங்கள் பெருமைகொண்டோம்.

அவர்களைச் சிறைப்படுத்திய பிறகு, போலிசார் எங்கள் வீட்டிற்கு அடிக்கடி வரத் தொடங்கினர்கள். இரண்டொரு நாளைக் கொரு முறை அவர்கள் வருவதும், வீடு முழுதும் மோப்பம்பிடிப்பதும் வழக்கமாய்விட்டது. ஒவ்வொரு முறையும் அபராதத் தொகைக்காக வென்று, ஏதாவ தொரு தளவாட சாமான் அல்லது ஜங்கம சொத்தை ஜப்திசெய்வார்கள்; அப்படி எடுத்துக் கொள்ளும் சாமான்களின் உயர்வு தாழ்வு பற்றி, அவர்கள் கவலைகொள்ளுவ தில்லை; ஐந்நூறு ரூபாய் அபராதத்திற்காகப் பல ஆயிரக்கணக்கான ரூபாய் மதிப்புடைய இரத்தினக் கம்பளத்தைப் பிற சாமான்களுடன் சேர்த்து

எடுத்துக்கொள்ளும்பொழுதும், அவர்கள் மனச்சாட்சி அவர்களைச் சுடுவதில்லை. முதன்முதலில் எனக்குக் கோபமும் ஆத்திரமும் பொங்கின; பின்னர் பழக்கமாகி விட்டது.

ஜவாஹரும் அப்பாவும் சிறையில் இருந்தார்கள். ஆமதாபாத் நகரில் காங்கிரஸ் மகாநாடு நடந்தது. காந்திஜி வெளியில் இருந்தார். மகாநாட்டிற்கு வருமாறு அம்மாளையும் கமலாவையும் அவர் அழைத்தார். அம்மாவும், கமலாவும், கமலாவின் சின்னஞ்சிறு குழந்தை இந்திராவும், நானும் போவதாக முடிவுசெய்தோம். எங்கள் தாயாதிகளில் சிலரும் எங்களோடு வந்தார்கள். இவர்களது கணவர்களும் சிறையிலேயே இருந்தார்கள். முதன்முறையாக மூன்றும் வகுப்பில் நாங்கள் பிரயாணம் செய்தோம். எங்களுக்கு இது ஒரு புதிய அனுபவம்; பின்னர் இதுவும் பழக்கமாகிவிட்டது. பிரயாணம் கஷ்டமா யிருந்தது; மேலும், நீண்டதாகவும் இருந்தது. ஆனால், உள்ளக் கிளர்ச்சியை விளைத்த இப்பிரயாணத்தை நான் மகிழ்ச்சியுடன் அனுபவித்தேன். இப்பிரயாணமே ஒரு படிப்பினையாகவும் இருந்தது. பொதுமக்கள் காந்திஜியிடத்தும், தேசத் தலைவர்களிடத்தும் கொண்டிருந்த ஆழ்ந்த—வேரூன்றிய பக்தியையும் நம்பிக்கையையும் முதன்முதலாக அப்பொழுதுதான் தெரிந்துகொண்டேன். வண்டி நின்ற இடம் ஒவ்வொன்றிலும், எச்சாமத்திலும், எந்நேரத்திலும் திரளான மக்கள் கூடி, நாங்கள் இருந்த வண்டியைச் சூழ்ந்துகொண்டு, மலர்களால் எங்களை நிரப்பியதுடன் உணவுப் பொருள்களையும் ஏராளமாக எங்களுக்கு வழங்கினார்கள். மக்களுக்கு சுயராஜ்யத்தைத் தேடிக்கொடுப்பதற்காகத் தலைவர்கள் செய்த தியாகங்களை, அவர்கள் எவ்வளவு பெருமையாக எண்ணுகிறார்கள் என்பதைப் பல வழிகளிலும் காண்பித்துக்கொள்ள முயன்றார்கள். பொதுமக்களின் நம்பிக்கையையும், அவர்கள் எங்கள்மீது சொரிந்த அன்பையும் கண்டு நான் வியப்புற்றேன். அயலார்களின் ஆதிக்கத்திலிருந்து, அவர்களை விடுவிக்க நாங்கள் பாடுபடுகின்றோம் என்று அவர்கள் நம்பினார்கள். தங்கள் விதியின் போக்கை நிர்ணயிக்கக் கூடிய உரிமையை ஐயந்திரிபறவும், தங்குதடை யின்றியும்

அந்தச் சிறிய மனிதரிடம் ஒப்புவிக்க அவர்கள் தயாராயிருந்தார்கள். அந்தச் சிறிய மனிதர்தான் காந்திஜி.

மறக்க முடியாத பிரயாணத்திற்குப் பின், அதிகமாகக் கேள்விப்பட்டிருந்ததும், ஆனால், நேரில் ஒரு முறையும் பார்த்திராததுமான சபர்மதி ஆசிரமத்தை நாங்கள் அடைந்தோம். காந்திஜி அளவிலா அன்புடன் எங்களை வரவேற்று, அப்பா, அண்ணு ஆகியோர்களின் உடல் நலன்களைப் பற்றிக் கேட்டுவிட்டு, ஒருவரை அழைத்து, எங்களுக்கென ஏற்பாடுசெய்யப்பட்டிருந்த அறைகளை, எங்களுக்குக் காண்பிக்குமாறு கூறினுர். மாணவர்கள் விடுதியைப்போன்ற ஒரு கட்டிடத்தில் நாங்கள் தங்கினேம். அது ஓர் அலங்காரமற்ற சாதாரணமான அறை; அவ்வளவு சௌகரியமானதுமல்ல. ஒரு பெரிய அறையில் நாங்கள் எல்லோரும் படுத்துக்கொள்ளவேண்டியிருந்தது; அம்மாவுக்கு மட்டும், தனி அறை ஒன்று அளிக்கப்பட்டது, அப்பொழுது டிஸம்பர் மாதம்; கடுங் குளிராகயிருந்தது. எனினும், காலை நான்கு மணிக்கே எழுந்து, இறைவழிபாட்டில் கலந்துகொள்ளவும், பின், எங்கள் உடைகளை நாங்களே துவைத்துக் குளிக்கவும், பிறகு, பாபுவுடன் சிறிதுநேரம் செலவழிக்கவும் வேண்டியிருந்தது. இதன் பின்னரே, மற்றப் பொழுதை எங்கள் விருப்பம்போல் செலவழிக்கக்கூடியதாயிருந்தது. அதிகாலையில் எழுவதென்பது சில நாட்கள் வரை, சிரமமாகவே இருந்தது. ஆயினும், இச்சிரமம் தக்க பயனை அளித்தது. சபர்மதி ஆற்றங் கரையில் நிகழ்ந்த இறைவழிபாடு மிக அழகாக இருந்தது. ஒரு நாட்கூட இந்த வழிபாட்டில் கலந்துகொள்வதினின்றும் தவற, என் மனம் இடங்கொடுக்கவில்லை.

அங்கும் இங்குமாக அமைந்த பல சிறிய குடிசைகளைக்கொண்டது இந்த ஆசிரமம். நடுவில் இருந்த முக்கிய குடிசைதான் பாபுவின் விடுதி. மற்ற குடிசைகளில் காமதேவ தேசாய், காந்திஜியின் சில உறவினர்கள், தொண்டர்கள் ஆகியோர் தங்கியிருந்தார்கள். பல குடும்பங்கள் ஒரே குடிசையில் இருந்தும்வந்தன. யாவரும் தரையிலேயே படுத்துறங்கினுர்கள்; இது எனக்குப் பிடிக்கவில்லை; எனினும், விரைவில் பழக்கமாகிவிட்டது. நாங்கள்

அருந்திய உணவு சாதாரணமானது; உண்மையில் மிக்க சாதாரணமானது. உணவில் மசாலைச் சாமான்களோ, நாவிற்குச் சுவை அளிக்கக்கூடிய இதர சாமான்களோ இல்லை; வேகவைத்த உணவு, அவ்வளவுதான்! முதலில் இதை அருந்தவே எங்களால் முடியவில்லை. என்னைப் பற்றிய வரையில், நான் தீராத பசியோடுதான் இருந்தேன். வீட்டிற்குச் சென்று பொருத்தமான உணவை உண்ணும் நாளை எதிர்பார்த்துக்கொண்டேயிருந்தேன்.

ஆசிரமத்தில் எங்கள் துணிகளை நாங்களே துவைக்க வேண்டியதாயிருந்தது. முரட்டுக் கதர்ச் சேலைகளைத் துவைப்பது என்பது விளையாட்டான காரியமன்று. மேலும், அந்தக் காலத்தில் நாங்கள் உடுத்திய புடவைகளெல்லாம் மிகவும் முரட்டுத் துணிகளாயிருந்தன. அம்மாவுக்கும், வயதுசென்ற என் உறவினள் ஒருவளுக்கும் மட்டும் ஒரு சிறு பையன் துணி துவைத்துக் கொடுத்துவந்தான். மற்றவர்களோ, தாங்களாகவே துவைத்துக்கொள்ள வேண்டியதுதான். ஆரம்பத்தில் சில நாட்கள் வரை எங்கள் முயற்சி வெற்றிபெறவில்லை. ஆனால், வீடு திரும்புவதற்குள், எங்களில் சிலர் துணி துவைப்பதில் நிபுணர்களாய்விட்டார்கள்; அப்படி நிபுணத்துவம் பெற்றவர்களில் நான் ஒருவளல்ல.

ஆமதாபாத் நகரில் இரண்டு வாரங்கள் தங்கியிருந்து வீடு திரும்பினோம். ஆமதாபாத்திற்குச் செல்லும்பொழுது வழியில் பெற்ற அனுபவங்களே திரும்பிய காலத்தும் ஏற்பட்டன. ஆசிரமத்தில் தங்கி, பாபுவை அதிகமாய் அறிந்துகொள்ளும் சந்தர்ப்பம் பெற்றது, உயர்ந்த அனுபவங்களைப் பெறத் துணையாயிருந்தது. இது, என் நினைவில் எப்பொழுதும் அகலாது முன் நிற்கும் ஒன்றாகும். மிகச் சிலர் பாபுவை அணுகித் தங்கள் சொந்தப் பிரச்சினைகளைத் தெளிவுபடுத்தும்படி கேட்கிறார்கள்; இப்படிக் கேட்பது அத்துணை சிறந்ததல்ல. பாபு, மற்றவர்களின் சொந்த விவகாரங்களுக்கெல்லாம் ஆலோசனை கூறிக் கொண்டிருக்கிறார் என்பது எனக்கு விளங்கவில்லை. பாபு சொன்னதுபோல், விஷயங்கள் நடைபெறாவிட்டால் அவர்கள், பாபுவைப் பழிக்கிறார்கள்.

அப்பாவுக்கும் ஜவாஹருக்கும் ஆறுமாத தண்டனையே முதன்முறையாகக் கிடைத்தது. நாங்கள் ஆமதாபாத்தி லிருந்து வீடு திரும்பிய சில நாட்களிலேயே, ஜவாஹர் விடுதலை பெற்றுவிட்டார். ஆனால், இவர் சிறையில் இருந்தது மூன்று மாதங்களே. இவ்விடுதலையை அவர் நீண்ட காலம் அனுபவிக்கவில்லை. மிகவும் குறுகியதான ஆறு வார காலத்தில் மீண்டும் அவர் சிறைப்படுத்தப்பட்டார். அது முதல், எங்கள் குடும்பத்திலுள்ள பலருக்குச் சிறைக்குப் போவதும் வருவதும் தவிர்க்க முடியாத பழக்கமாய்விட்டது.

நாட்கள் கழிந்தன; மாதங்கள் சென்றன; எங்கள் வாழ்க்கையும் இவ்வாறே சென்றுகொண்டிருந்தது. நான் வீட்டில் படித்துக்கொண்டிருந்தேன். அடிக்கடி சிறைக்குச் செல்லுவதைத் தவிர, நாங்கள் அதிகமாய்ப் பிரயாணம் செய்வதில்லை. 1923-ல் அரசியற் கைதிகள் அனைவரும் விடுவிக்கப்பட்டனர். அப்பாவையும் ஜவாஹரையும் மீண்டும் வீட்டில் காண்பதும், நீண்ட நாட்களாக மௌனம் குடிகொண்டிருந்த வீட்டில், தந்தையின் வசீகரச் சிரிப்பொலி கேட்பதும் மகிழ்ச்சியை விளைத்தன. மறுபடியும் ஆனந்தபவனத்தில் அமைதியும், இயல்புமான வாழ்க்கையின் தோற்றம் நிலவியது.

“தொட்டில் நிழலில், சிறுவிளக் கொளியில்
பொம்மைக ளோடு ஆடிடும் குழந்தை;
குழந்தையின் ஆசை விரிவின் விரிவாய்ப்
பரந்திடும் வையம். குழந்தையின் கண்ணில்
அகன்ற இவ்வையம் எத்துணை பெரிது!
நாட்கள் கழிந்தபின் ஈதெலாம் நினைந்து
நினைவுக் கண்ணால் பார்த்திடும் போது
வைய மிதுவே எத்துணை சிறிது!

— சார்லெஸ் பாடிலேர்.

நாபா சமஸ்தானத்தில் 1923-ம் ஆண்டின் இறுதியில் ஜவாஹரைச் சிறைப்படுத்தினார்கள். விடுதலை யடைந்து வீடு திரும்பியதும், அவருக்கு விஷக் காய்ச்சல் கண்டது; ஒரு மாதத்திற்கு மேலாக அவர் அபாயகரமான நிலைமை யில் இருந்தார். குணமானதும் நாங்கள் சிறிது ஆறுதல் அடைந்தோம்.

வழக்கமாகச் சிறைக்குச் செல்வதில் சிறிது ஓய்வு காணப்பட்டது; அதனால் நாங்கள் ஒருவரை யொருவர் இன்னும் அதிகமாக அறிந்துகொள்ள வாய்ப்பு ஏற்பட் டது. கயா காங்கிரஸ் முடிவடைந்த பின்னர்தான், அப்பா வும், சி. ஆர். தாஸும் சுயராஜ்யக் கட்சியை நிறுவினார் கள். இக்கட்சியின் முதற் கூட்டம் ஆனந்தபவனத்தில் நடைபெற்றது. சி. ஆர். தாஸ் இதன் தலைவரானார்; அப்பா, பொதுக் காரியதரிசி யானார்.

1925 ஜூன் மாதத்தில் சி. ஆர். தாஸ் காலமானார். சுயராஜ்யக் கட்சியின் தலைவராக அப்பா தேர்ந்தெடுக்கப் பெற்றார். சி. ஆர். தாஸ் அப்பாவின் நம்பிக்கைக் குரிய தோழராய் இருந்ததோ டன்றி, அரிய நண்பராகவும் இருந்தார். இவருடைய மரணம் அப்பாவுக்குப் பெரிய தோர் அதிர்ச்சியைக் கொடுத்தது. டில்லி சட்டசபையின் எதிர்க் கட்சித் தலைவராகவும், சுயராஜ்யக் கட்சியின் தலைவராகவும் இருந்தமையால், அப்பாவுக்கு வேலை அதிக மாக இருந்தது. சில சீர்திருத்தங்கள் பற்றி அரசாங்கத் தாரின் போக்கின் விளைவால், சுயராஜ்யக் கட்சியின் கட்டளைக் கிணங்க, 1926 மார்ச்சு மாதத்தில் டில்லி சட்ட

சபைக் கூட்டத்தைப் பகிஷ்கரித்துத் தம் கட்சியினருடன் தந்தை வெளியேறினர். அச்சமயத்தில் அவர் ஆற்றிய பேருரை மிக உயர்ந்தது. அக்காலத்தில் நான் அடிக்கடி அப்பாவோடு டில்லி சென்று, சுமார் ஏழெட்டு நாட்கள் தங்கி, சபை நிகழ்ச்சிகளையும் பார்த்துக்கொண் டிருப்பது வழக்கம். மாசற்ற வெள்ளைக் கதருடை அணிந்து, மேன் மக்களுக் குரிய தோற்றத்தோடும், கம்பீரத்தோடும் தோற்ற மளித்த என் தந்தையைக் கண்டு, நான் மிகமிகப் பெருமை கொள்வேன். சபை நடந்துகொண் டிருக்கும் பொழுது ஏற்படும் சிக்கலான பிரச்சினைகளிலும், தாம் பதிலிறுக்குமாறு ஏற்படும் கேள்விகளிலும் அவர் கைக் கொண்ட முறையைக் கண்டு நான் பெரிதும் பாராட்டு வேன். எந்த ஒரு விஷயத்தையும் பற்றித் தமது கட்சி ஒரு முடிவிற்கு வந்தபின்னர், அதற்கு மாறுகச் சிறிதும் விட்டுக்கொடுக்காத பிடிவாதமான குணம் அவருக்கு உண்டு. தம் கட்சியினர் தவறு செய்தாலும், தங்களுடைய பலவீனத்தை வெளிக்காட்டினாலும், அவர்களை என் தந்தை தயை தாட்சண்ய மின்றிக் கண்டிப்பார். அவர் சிறிது எதேச்சாதிகாரத்தன்மை யுடையவ ராயினும், அவரை அறிந்து உணர்ந்தவர்கள் அவர்பால் அன்பையே கொண்டு, பெரிதும் பாராட்டினார்கள். அவருடைய விரோதிகள் அவரைக் கண்டு அஞ்சி, அவர் பார்வையி லின்றும் ஒதுங்கிவிடுவார்கள்.

காரசாரமான வாதங்கள் நடைபெறும் போதெல் லாம், சட்டசபையில் இருக்க நான் பிரியப்படுவ துண்டு. அப்பா அளித்த விருந்துகளில், சில சமயங்களில், அம்மா வர முடியாமற்போனல் நானே விருந்தினரை உபசரிப்ப வளா யிருந்திருக்கிறேன். விருந்தினரை வரவேற் பதில் அவருக்கு நான் செய்த உதவிகள் பற்றி, எனக்கு அதிக மகிழ்ச்சி ஏற்படுவ துண்டு.

கஸ்தூரிபாய் லால்பாய் என்னும் பெயருடையவரும், பிரபலமான மில் முதலாளியுமான என் கணவரின் பெரி யப்பாவும் அப்பொழுது சட்டசபையின் அங்கத்தினராய் இருந்தார். என் கணவர் ராஜா, சிலசமயங்களில் அவருடன் தங்கியிருப்ப துண்டு. அங்கு ஒரு நாள் ராஜா, என்னைப் பார்த்ததாகவும், மணந்துகொள்ளத் தீர்மானித்ததாகவும்

உரிமைகொண்டாடுகிறார். துரதிர்ஷ்டவசமாக அவரைச் சந்தித்ததாக எனக்கு நினைவே இல்லை; இவ்வுண்மை இன்றும் ராஜாவை வருத்துகிறது. எனினும், மணவினை நிகழ்வதற்கு எட்டு ஆண்டுகளுக்கு முன்பே, என்னை மணம் செய்துகொள்ள ராஜா தீர்மானித்ததற்காக நான் வருந்தவில்லை.

1925-ம் ஆண்டு இறுதியில் கமலா ஒரு கொடிய நோய்க்கு உட்பட்டாள். பல ஆண்டுகள் வரை அவள் உடல் நலமற்றிருந்தாள். இது ஜவாஹருக்கும், என் பெற்றோர்களுக்கும் மிகக் கவலையைக் கொடுத்தது. சிகிச்சைக்காகக் கமலாவை சுவிட்ஸர்லாந்துக்கு அழைத்துச் செல்லும்படி வைத்தியர்கள் ஆலோசனை கூறினார்கள். 1926-மார்ச்சு மாதத்தில் தம் மனைவியோடும், மகள் இந்திராவோடும் ஜவாஹர் ஐரோப்பாவுக்குப் பிரயாணமானார். அவர்களோடு என் அக்காள் சுவரூபும், அவளுடைய கணவர் ரஞ்சித்தும் சென்றார்கள். பல நாட்களுக்கு முன்னர் போடப்பட்ட திட்டத்தின்படியே ஓய்வு கொள்ள அவர்கள் இப்பிரயாணத்தை மேற்கொண்டார்கள்.

அதே வருஷம் ஜூன் மாதம் அப்பாவும் ஐரோப்பாவுக்குப் புறப்படுவதாக இருந்தார். நானும் அவரோடு போவதாக இருந்தேன். பல ஆண்டுகளாக அவருக்கு ஓய்வே இல்லை. மிகக் கடுமையாக உழைத்துவந்ததால், சிறிது ஓய்வும் மாற்றமும் தமக்கு அவசியமென்று அவர் கருதினார்.

ஒத்திப்போட முடியாத ஒரு முக்கியமான வியாஜ்ஜிய சம்பந்தமாய், துரதிர்ஷ்டவசமாகக் கடைசி நிமிஷத்தில் அவர் தமது பிரயாணத்தை நிறுத்தவேண்டியதாயிற்று. நீதிமன்றங்களில் தொழில் செய்துகொண்டிருந்த காலத்திலேயே அவர் இவ்வழக்கை ஏற்றுக்கொண்டிருந்தார். மீண்டும் நீதிமன்றங்களுக்குச் செல்ல அவர் விரும்பவில்லை; எனினும், பழைய கட்சிக்காரர்களுக்குத் துணை புரியவேண்டியதாயிற்று.

அப்பா, தமது வக்கீல் தொழிலைத் துறந்த பின்னரும், பழைய கட்சிக்காரர்களில் பலர் வந்து, தங்கள் விஷயத்தில் விதிவிலக்குச் செய்யவேண்டுமென வேண்டிக்கொள்

வார்கள். ஆனால், அதற்கு அவர் ஒருபோதும் இசைவ தில்லை. அவர்கள் கொடுக்கவந்த பெருந் தொகைகளா லும், அவரது முடிவை அசைக்க முடியவில்லை. ஒரு சமயம் லட்ச ரூபாயுடன் ஒரு கட்சிக்காரர் வந்து, தம் வழக்கை நடத்தவேண்டு மென்று அப்பாவிடம் கேட்டுக்கொண் டார். என் தந்தை அதனை ஏளனத்துடன் நோக்கிவிட்டு, அருகில் நின்றுகொண்டிருந்த என்னைப் பார்த்து, "மகளே! இந்த வழக்கை நான் ஏற்றுக்கொள்வது சரி யென நீ நினைக்கிறாயா?" என்று கேட்டார். என்ன சொல்வதென்று தெரியாது சில விநாடிகள் தயங்கி நின்றேன். அப்பொழுது தந்தையிடம் பண வசதி மிகக் குறைவாக யிருந்த தென் பதும், அத்தொகையைப் பெறுவது நல மென்பதும் எனக் குத் தெரிந்திருந்தாலும், அப்படிச் செய்வது சரியல்ல என்றே எண்ணினேன். எனவே நான், "இல்லை, அப்பா, நீங்கள் அப்படிச் செய்யவேண்டு மென நான் நினைக்க வில்லை" என்று கூறினேன். என் முடிவைக் கண்டு மிகவும் பெருமை கொண்டவராய், உடனே என் கையைப் பிடித்துக் குலுக்கிவிட்டு, தமது கட்சிக்காரரை நோக்கி, "நான் மிகவும் வருந்துகிறேன். என் மகள்கூட ஆட்சே பிக்கிறாள், பார்த்தீர்களா?" என்றார். நான் எப்படிப் பட்ட மகளாய் இருக்கவேண்டு மென் அவர் கருதினாரோ, அப்படி இருக்கிறேனா, அல்லது, ஆசைக்கு ஆளாகி அவ ருக்குத் தகுதியற்ற மகளாய் இருக்கிறேனா என்று அறிந்து கொள்ளவே, தந்தை என்னை அப்படிக் கேட்டார் எனப் பின்னர் நான் உணர்ந்தேன்.

வீட்டைவிட்டு என் குடும்பத்தோ டல்லாது நான் எங்கும் போன தில்லை; தனியாகப் பிரயாணம் செய்ததும் மில்லை. எனவே, என்னைமட்டும் ஐரோப்பாவுக்குத் தனியாய் அனுப்புவதா அல்லது என்னுடைய பிரயாணச் சீட்டையும் ரத்துச் செய்துவிடுவதா என்று அப்பாவுக்கு எதுவும் தோன்ற வில்லை. இதைப் பற்றி அப்பா என்னோடு கலந்து பேசினார்; என் விருப்பம்போல் செய்யலாமென்றும் தெரிவித்தார். நான் தயங்கினேன். இரண்டு விதமான ஆசைகளுக் கிடையே ஊசலாடினேன். அப்பாவோடு பிர யாணம் செய்யவேண்டு மென்று நான் ஆசைப்பட்டதால், தனியாகச் செல்ல எனக்கு இஷ்ட மில்லாமல் இருந்தது; அந்தச் சந்தர்ப்பத்தை உபயோகித்துக்கொள்ளாவிட்

டால், வேறு சந்தர்ப்பம் சமீபத்தில் வாய்க்காது என்றும் எனக்குத் தோன்றிற்று. ஆகையால், புறப்பட முடிவு செய்தேன். அம்முடிவு நல்ல முடிவுதான் என்று இப்பொழுது நினைக்கிறேன்.

நானாகத் தனிமையில் ஐரோப்பா செல்வதற்கு அப்பா சம்மதித்தது பற்றி அம்மா மிகவும் சஞ்சலப்பட்டாள். முன்பின் அறியாத ஒரு நாட்டுக்கு ஓர் இளம் பெண் தனியாகச் செல்வது சிறிதும் பொருத்தமற்றதென அவள் கருதினாள். என்னைத் தடுக்க முயன்றாள். அம்மா மனத்தைப் புண்படுத்த நான் விரும்பவில்லை. ஆனால், நான் போகவே பெரிதும் விரும்பினேன். பெரிய விவாதங்களுக்குப் பிறகு, எனது வாழ்க்கையில் முதன்முறையாகத் தனிமையில் நான் ஐரோப்பாவுக்குக் கப்பல் ஏறினேன்; எதிர்காலப் புது வாழ்க்கையைக் கண்டு, எனக்கு ஒருபுறம் சிறிது அச்சமும், ஒருபுறம் ஆர்வமும் உண்டாயின.

துவக்கத்தில் சில நாட்கள், தனியாகவே நான் சந்தோஷமற்றவளாய் இருந்தேன். பின்னர், விரைவில் சிலருடைய நட்பைப் பெற்று, அது முதல் கப்பலில் உல்லாசமாய்ப் பொழுதுபோக்கிவந்தேன். தனியாகவும் பாதுகாப்பின்றியும் இருந்த என்னைக் கண்டு, கப்பலிலிருந்த சில நண்பர்கள், தாங்களாகவே எனது பாதுகாப்பாளர்களாக அமைந்தார்கள். அக்கப்பலில் இளைஞர் சிலரே இருந்தனர். யாரேனும் ஓர் இளைஞருடன் நான் பேசிக்கொண்டிருப்பதைக் கண்டபொழுதெல்லாம், எனது பாதுகாப்பாளர்கள், புதிய மனிதருடன் சிநேகங்கொள்வது மிகவும் ஆபத்தானது என்று என்னிடம் ஒரு பிரசங்கம் செய்வார்கள். இரவில், மணி பத்தடித்ததும் நான் படுக்கைக்குச் செல்லவேண்டும். இத்திட்டத்திற்குச் சில நாட்கள் வரை இணங்கினேன்; பிறகு மீறத் தலைப்பட்டேன். இதன் பயனாய், இன்னும் பல உபதேச மொழிகளையும், கோபப் பார்வைகளையும் பெற்றேன். எனினும், நான் அவற்றைப் பொருட்படுத்தாமலே இருந்துவந்தேன்.

ஜவாஹர் அப்பொழுது ஜினிவா நகரில் இருந்தார். அவர் என்னைப் பிரிண்டிஸி நகரத்தில் சந்திப்பதாக ஏற்பாடாய் இருந்தது. ரயில் தவறிவிட்டதால் அவர் வர முடியவில்லை. பயங்கரமான தனிமை எண்ணம் என்னை

ஆட்கொண்டது. என்னோடு கப்பலைவிட் டிறங்கிய சில நண்பர்கள் எனக்கு உதவி அளித்திராவிட்டால் நான் மிகவும் கஷ்டப்பட் டிருப்பேன்.

ஜவாஹர் நேப்பிள்ஸ் நகரத்தில் என்னைச் சந்தித்தார். நேரே ஜினிவாவுக்கு நாங்கள் செல்ல வில்லை; ஆனால், செல்லும் வழியிலுள்ள ரோம், பிளாரென்ஸ், இன்னும் மற்ற நகரங்களையும் சுற்றிப்பார்த்துச் சென்றோம். நான், பார்த்த இடங்களை யெல்லாம் மிகவும் விரும்பினேன். ரோம், பிளாரென்ஸ், மற்ற நகரங்களைப் பற்றி நான் ஏராளமாகப் படித்தேன். தொன்மையான ரோமா புரியின் மகிமை, எனக்கு மன எழுச்சியைத் தர என்றும் தவறிய தில்லை. இப்பிரயாணத்தின் போது தான் ஜவாஹரை நான் நன்ருய் அறியமுடிந்தது. அவர் ஓர் ஒப்புயர்வற்ற தோழராகவும், ஆனந்தமான வழிகாட்டி யாகவும் இருந்தார். நான் மிகவும் பயந்துகொண் டிருந்த சகோதரராக அவர் அப்பொழுது இல்லை. அவர் என் அன் பான தோழராகவே இருந்தார். நாங்கள் இருவரும் சேர்ந்து காட்சிகளைக் கண்டு களித்த சில நாட்கள், உண்மையாகவே மிக்க இன்பமானவை.

ஜினிவாவில் நாங்கள் ஒரு தனி வீட்டில் தங்கியிருந் தோம். அவ்வளவு சிறிய இடத்தில் அதற்கு முன் நான் வசித்த தில்லை யானதால், இவ்வனுபவம் எனக்கு ஒரு புதுமையாகவே இருந்தது. சில நாட்கள் கழிந்ததும், இந்த வீடு எனக்குப் பிடிக்க வில்லை. ஆனந்தபவனத்தில் உள்ள பெரிய அறைகளையும், பரந்த இடங்களையும் நினைக்கலானேன். ஒரு வாரத்துக்குப் பின்னர், ஜினிவா நகரத்தின் படம் ஒன்றையும், ஆங்கில-பிரெஞ்சு அகராதி ஒன்றையும், பஸ், டிராம் வண்டிகளுக்கான சீட்டுக்கள் நிறைந்த புத்தகம் ஒன்றையும் ஜவாஹர் எனக் களித்தார். இவைகளைக்கொண்டு, இந்நகரில் நானுகவே எங்கும் போய் வரலாம் என்றும், உடனே அவ்வாறு நடந்து கொள்வது எனக்கு நல்லதென்றும் ஜவாஹர் தெரிவித் தார். கமலா உடல் நலமின்றி இருந்ததால் வீட்டு வேலை களை நானே செய்யவேண்டும் என்று சொன்னர்கள். முதலில், இது கஷ்டமாகவே தோன்றிற்று; என்ருலும், இது ஒரு நல்ல பயிற்சியா யிருந்ததால், இதுவும் சீக்கிரம்

பழக்கமாகிவிட்டது. அப்போது எனக்குப் பிரெஞ்சு பாஷை அதிகம் தெரியாது. பள்ளிக்கூடத்தில் நான் சிறிதளவு கற்றுக்கொண்டது, ஒன்றும் தெரியாததற்குச் சமமாகவே இருந்தது. அண்ணாவின் முடிவு என்னைப் பின்னடையச் செய்தது; அவரோடு விவாதிப்பதில் பயனில்லை என அறிந்தேன். ஆதலால், துரதிர்ஷ்டமான அந்தக் காரியங்களைச் செய்ய இணங்கி, என்னாலியன்ற வரை நன்றாகச் செய்ய முயன்றேன். முதலில் நான் செய்தது என்னவென்றால், வசிகரமான ஸ்விஸ் தேசத்து இளம் பெண் ஒருத்தியிடம் பிரெஞ்சு பாஷை கற்றுக்கொள்ளத் துவங்கியதுதான். பிற்காலத்தில் இவள் என்னுடைய அருமை நண்பர்களுள் ஒருத்தியாகிவிட்டாள். மார்கரைட் என்னும் எங்கள் பணிப்பெண், குடும்ப வேலைகளின் இரகசியங்களில் என்னைப் பழக்குவித்தாள். நாங்கள் சந்தோஷமாகக் காலங்கழித்தோம். இடையிடையே ஏற்பட்ட சில சிறிய இன்னல்களைத் தவிர, வாழ்க்கை, நான் முன் நினைத்தபடி அவ்வளவு கஷ்டமானதாக இல்லை. அகில உலகக் கோடைக்காலப் பள்ளிக்கூடம் ஒன்று ஜினிவாவில் இருந்தது. உலகத்தின் எல்லாப் பகுதிகளிலுமுள்ள மக்களும், சிறப்பாகக் கோடை விடுமுறையில் வந்த மாணவர்களும் அங்கு வந்து கூடியிருந்தார்கள். இந்தியர், சீனர், சிங்களவர், அமெரிக்கர், பிரெஞ்சுக்காரர், ஜெர்மானியர், இன்னும் பல தேசத்தவரும் அங்கிருந்தார்கள். ஜவாஹரும் கலந்துகொண்டார். பின்னர், நானும் கலந்துகொண்டேன். இப்பள்ளிக்கூடத்தில் பலர் எனக்கு நண்பரானார்கள். அப்பொழுது சர்வ தேச மகாநாட்டிற்காக அங்கு வந்திருந்த பிரபல அரசியல் நிபுணர்களும், ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ், மற்றும் பல பல்கலைக் கழகங்களைச் சார்ந்த பேராசிரியர்களும், மேலும்; பெயர் பெற்ற சில நூலாசிரியர்களும் அப்பள்ளியில் விரிவுரை நிகழ்த்தினார்கள். பிரசங்கங்கள் சுவையுடையதாயிருந்தன. மேலும், உலகத்தின் எல்லாப் பாகங்களிலிருந்தும் வந்திருந்த பல்வேறு பழக்க வழக்கங்களையுடைய மக்களையும் காண்பதற்குரிய ஒரு சந்தர்ப்பமும் கிடைத்தது.

ஒவ்வொரு வார முடிவிலும், அப்பள்ளிக்கூடச் சார்பில் உல்லாசப் பிரயாணங்களுக்கு ஏற்பாடு செய்

வார்கள். கமலாவைத் தனியாக வைத்துப் பிரிந்து செல்ல, அவளது உடல் நலம் இடங்கொடுத்தபொழுதெல்லாம் நானும் ஜவாஹரும் இந்த உல்லாசப் பிரயாணங்களில் மற்றவர்களுடன் கலந்துகொள்வதுண்டு. இப்படிப்பட்ட உல்லாசப் பிரயாணங்களில் ஒரு முறை, 'கோல் தெவாஸா' என்னும் பெயருடைய மலை ஒன்றிற்குப் பிரயாணம்செய்ய முடிவுசெய்தோம். எங்கள் கூட்டத்தில் அமெரிக்கர்களும், சுவிஸ் தேசத்தவர்களும் பெரும் பான்மையோராக இருந்தார்கள்; உற்சாகமான கூட்டம். ஜவாஹரும், சிந்தி மாணவர் ஒருவரும், நானுந்தான் இந்தியர்கள். எங்கள் சிந்தி நண்பர் வெறும் பகட்டுக்காரர்; எப்பொழுதும் உயர்ந்த ஆடைகளை அணிவதில் கவன மிக்கவராக இருந்தார். அவர் நீங்கலாக, மற்ற நாங்கள் எல்லோரும் அரைக் கால் சட்டைகளும், குளிர் அங்கிகளும், உருண்ட மேல் பாகத்தையுடைய ஆணிகள் அடிக்கப்பட்ட செருப்புக்களும் அணிந்திருந்தோம். ஆனால், எங்கள் சிந்தி நண்பரோ (இப்போது இந்தியாவில் அவர் ஓர் உயர்ந்த ஐ. சி. எஸ். உத்தியோகத்தில் இருக்கிறார்.) மிக உயர்ந்த கம்பளிச் சட்டையும், அழகிய—உயர்ந்த செருப்புக்களும் அணிந்து வந்திருந்தார். நாங்கள் முதலில் சாதாரண ரயிலிலும், பிறகு, மலையில் ஏறும் சங்கிலித் தொடர் ரயிலிலும், அப்பால் குறிப்பிட்ட இடத்தை நோக்கிக் கால் நடையாக மலையில் ஏறியும் சென்றோம். செங்குத்தான பாதையில் இரண்டு மணி நேரம் கால் வலிக்க ஏறிய பின், பனிக் கட்டி மழையும், பனியும் பெய்யத் தொடங்கின; அதனால் நாங்கள் முற்றிலும் நனைந்துபோனோம். மலை யேற்றத்திற் குரியவாறு அமைந்த தல்லாதவையான செருப்புக்கள் அடிக்கடி வழுக்கியதன் காரணமாக எங்கள் சிந்தி நண்பர் மலையில் ஏறுவதற்கு மிகவும் கஷ்டப்பட்டார். காயம் கட்டுவதற் குரிய துணிச் சுருள், காயத்திற்குத் தடவும் மருந்து (ஐயோடின்), மற்றும் முக்கியத் தேவையான பொருள்கள் இன்றி, ஜவாஹர் எங்குமே பிரயாணம் செய்வதில்லை; எனவே, தம்மிட மிருந்த அடிப்புறம் கயிற்றாலாகிய செருப்புக்களை எடுத்து எங்கள் சிந்தி நண்பரிடம் கொடுத்தார். இச் செருப்புக்கள், ஒருவாறு அவருடைய கஷ்டங்களி லிருந்து அவரை விடுவித்தன.

உடம்பெல்லாம் நனைந்து, மேலும் ஒரு மணி நேரம் நடந்த பின்னர், புதிய பனியால் மூடப்பெற்றதும், வெம்மையான சூரிய ஒளி மிகுந்ததுமான மலைச் சாரல் ஒன்றை அடைந்தோம். மிகக் களைத்திருந்தும், புதிய பனியைக் கண்டதும் ஜவாஹருக்கும், மற்றும் எங்களிற் சிலருக்கும் உற்சாகம் மேலிட்டது. ஒருவர் பின் ஒருவராய் இரண்டு மூன்று பேர்களாகச் சேர்ந்துசேர்ந்து உட்கார்ந்து சறுக்கி விளையாடினார்கள். எனக்கு அதிகக் களைப்பாக இருந்ததால், நான் ஒரு பக்கமாக அமர்ந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தேன். மறுபடியும் சறுக்குவதற்கு ஜவாஹர் தயாராகிக்கொண்டிருக்கும் பொழுது, மாணவர்களில் ஒருவர் அவருக்குப் பின்னால் உட்கார முயன்றுகொண்டிருந்தார். அவர் ஜவாஹரைச் சிறிது இடித்துத் தள்ளிவிடவே, சறுக்குவதற்கு முற்றும் தயாரான நிலையி லில்லாதிருந்த ஜவாஹர் தனியாகவே கீழ் நோக்கிச் சறுக்கி விழலானார். அம்மலைச் சரிவின் முடிவில் ஒரு மாபெரும் பள்ளம் இருந்தது. தம் போக்கை அடக்கிக்கொள்ள இயலாதவராய் ஜவாஹர் அதை நோக்கி விரைந்தார்! நாங்கள் எல்லோரும் ஸ்தம்பித்து விட்டோம். அந்தச் சில விநாடிகளில் லட்சக்கணக்கான முறை எனக்கு உயிர்போய் உயிர்வந்தது. பள்ளத்தை நெருங்கிவிட்டதையும், மிகமிகச் சமீபித்துவிட்டதையும் அறிந்த ஜவாஹர் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டவராய், மனித சக்திக்கு அப்பாற்பட்ட ஓர் ஆற்றலோடு தமது போக்கை அடக்க முயன்று வெற்றியும் பெற்றார். பனிக்கு மேல் எழுந்து தோன்றிய சில பாறைகளில் போய் அவர் தங்கினார். முகத்திலும் கைகளிலும் அதிகக் காயங்கள் ஏற்பட்ட போதிலும் அவர் பிழைத்தார். இவையெல்லாம் சில நிமிஷ நேரத்திற்குள் முடிந்துவிட்டன. ஆனால், என் கால்கள் வெகு நேரம் வரை பயங்கரமான பலவீனத்துடன் இருந்ததாக நான் உணர்ந்தேன். இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு, அருகாமையில் இருந்த ஒரு குடிசைக்கு நாங்கள் நேராகச் சென்று, அங்கு மிகவும் ஜ்வாலைவிட்டு எரிந்துகொண்டிருந்த நெருப்பைச் சுற்றி உட்கார்ந்துகொண்டோம். மற்றவர்களைப்போலவே எங்கள் சிந்தி நண்பரும், தனது அலங்காரச் செருப்புக்களை நெருப்பண்டை காய வைத்தார். கொஞ்ச நேரம் கழித்துத் தன் செருப்புக்

களைப் பார்க்கையில், அவை சுருங்கி உபயோகமற்ற வையாய்விட்டதைக் கண்டார். இது அவருக்கு வருத்தத்தை விளைத்தது. எங்களது கனமான செருப்புக்கள் கெடாமல் நன்ருகக் காய்ந்திருந்தன. இது அவர் வருத்தத்தை இன்னும் அதிகமாக்கிற்று.

அக்குடிசையின் சொந்தக்காரர்களான கிழத் தம்பதிகள் எங்களுக்கு நல்ல உணவு அளித்தார்கள். அன்றிரவே திரும்ப முடியா திருந்ததால், அப்புதுக் குடிசையிலேயே நாங்கள் தங்கினேம். ஆடவர்கள் தரையில் படுத்துறங்கிஞர்கள். பெண்கள் எல்லோருக்கும் போதிய படுக்கைகள் இல்லா திருந்தன; எனவே, இரண்டிரண்டு பெண்களாக நாங்கள் கட்டில்களில் படுத்துக்கொண்டோம். குளிர் மிகக் கடுமையாக இருந்தது. என்னுடன் படுத் திருந்த மாலி என்னும் பெண், நான் படுக்கை விரிப்புக்களைத் தூக்கிப் பிடித்துக்கொண்டால், மெழுகுவர்த்தியால் அடிப்பாகத்தில் சூடேற்றலா மென யோசனை கூறிஞள். நான் சிறிதும் அஞ்சாமல் இதற்கு உடன்பட்டு, விரிப்புக்களைத் தூக்கிப் பிடித்துக்கொண்டேன்; மாலி அங்குமிங்குமாக மெழுகுவர்த்தியால் படுக்கைக்குச் சூடு ஏற்றிஞள். சிறிது நேரத்தில் துணிப் புகை நாற்றம் வீசிற்று. விரிப்பில் ஒரு துவாரம் இருப்பதைக் கண்டு நாங்கள் நடுங்கினேம். மெழுகுவர்த்தியை அணைத்துவிட்டு,குடிசையையே நாங்கள் எரித்துவிடாததற்காக மகிழ்ந்தவர்களாய்ப் படுக்கையிற் படுத்துக்கொண்டோம். களைப்பு, உடல் வலி, வீடு திரும்புவதிலுள்ள மகிழ்ச்சி இவற்றேடு மறு நாள் நாங்கள் வீட்டுக்குப் புறப்பட்டோம்.

ஜினிவா நகரத்துக்கு அணித்தாக உள்ள வில்லுனூவே என்னும் ஊரில் வசித்துக்கொண் டிருந்த ரொமெயின் ரோலண்டைப் பார்க்க அண்ணு செல்வதுண்டு. சில சமயங்களில் நானும் அவரோடு போவேன். புகழ்படைத்த பல நூல் ஆசிரியர்களையும், இசை விற்பன்னர்களையும், விஞ்ஞானிகளையுங்கூட நான் சந்தித்திருக்கிறேன். இவர்களில் என் நினைவில் இருப்பவர்கள் ஈன்ஸ்டினும், எர்னெஸ்ட் டோல்லரும் ஆகும். முந்தினவரை நான் நேரில் சந்தித்துப் பேசவில்லை. ஆனால், நானும் விஜயம் செய்திருந்த, ஸர். ஜே. ஸி. போஸ் நிகழ்த்திய பிரசங்கம் ஒன்றிற்கு அவர் வந்திருந்தார். மேடையில் பல பேர்களுக்குப்

பின்னால் மறைந்து உட்கார்ந்திருந்தார். அவரை ஒருவரும் கவனிக்கவில்லை. ஓர் அமெரிக்க மாணவர் அவரைக் கண்டு பிடித்து, அச்செய்தியை எங்கும் பரப்பும் வரை அவர் அங் கிருக்கிறார் என்பதே யாருக்கும் தெரியவில்லை. பிறகு, ஒரு பெரிய ஆரவாரம் உண்டாயிற்று. எல்லோரும் அவரைப் பார்க்கவேண்டுமென்று கூச்சலிட்டார்கள். மிகவும் கேட் டுக்கொண்டதன் பின்னர், அவர் எழுந்துவந்து கூச்சத் தோடு தம் வந்தனத்தை எல்லோருக்கும் தெரிவித்துக் கொண்டார். கூட்டத்தி லிருந்தவர்கள், தம்பால் காட்டிய அன்பையும், மதிப்பையும் கண்டு அவர் ஒன்றும் தோன் றாதவர்போல் காணப்பட்டார். சில விநாடிகள் மேடைமீது இருந்துவிட்டு, பின்னர் விரைவாகப் பின்புறம் எங்கோ சென்றுவிட்டார்.

டோல்லரை, நான் பிரஸெல்ஸ் நகரத்தில் சந்தித்தேன். பார்ப்பதற்கு அவர் கவர்ச்சி உடையவராகத் தோன்ற வில்லை. ஆனால், நமது உள் மனத்தி லுள்ள எண்ணங்களை யும் அறிந்துகொள்ள வல்ல பிரமிக்கத்தக்க கண்களை உடையவராய் இருந்தார். பேசுவதற்கு இனியராகவும் இருந்தார். அடிக்கடி அவரது முகம் அளவு கடந்த துக் கத்துக் குள்ளானதுபோல் தோற்றமளிக்கும். அவருடைய கண்கள் எதையும் துருவிக் காணும் வேலையில் ஈடுபட் டிருக்கும்.

நாஜி ஆட்சியின் அடக்குமுறைக்கு ஆளாகி, டோல் லர், தம் நாட்டைவிட்டு வேறு நாடுகளில் தஞ்சம் புக நேர்ந்தது. அவர் ஒரு பெரிய கவிஞர். உண்மையும், விடுதலைப்பற்றுமே அவருடைய சிறந்த லட்சியங்களா யிருந்தன. நான் கண்டவர்களுக்குள், அவர் மிகவும் அஞ்சா நெஞ்சம் படைத்தவர். அவர் ஒரு விஷயத்தை நம்பிவிடுவா ரானால், அவரது மனச்சாட்சியும் அது சரி என்று சொல்லு மானால், அதைச் செய்வதினின்றும் அவரை யாராலும் தடுக்க முடியாது.

தம் தாய்நாட்டி லிருந்து நாடு கடத்தப்பட்டு, மனம் உடைந்து வெறுப்புற்றவராய் அவர் தற்கொலை செய்து கொண்டார்; அதன்மூலம் அவரது சிறந்த வாழ்நாள் முடிவுற்றது. அவருடைய மரணம் உலகத்துக்கே ஒரு நஷ்டமாகும்; ஆனால், அவருடைய நூல்களோ, அன்றிப்

புகழுடம்புடன் கூடியவரல்லரோ இறக்க முடியாது; அவர் என்றும் அமரத்துவம் உடையவர்; அவருடைய நூல்களும் அப்படிப்பட்டனவே.

ஜினிவா நகரில் சில மாதங்கள் தங்கியிருந்த பிறகு, மான்ட்டனு என்னும் மலைவாச ஸ்தலத்துக்குச் சென்றோம். அது சிறிய ஊர்; குக்கிராமம் போன்றது; ஆனால், அழகியது. அங்கே நாங்கள் பல மாதங்கள் தங்கியிருந்தோம். அங்கேதான் மாரிக் கால விளையாட்டுக்களில் நான் முதன்முறையாகக் கலந்துகொண்டேன். நீண்ட குறுகலான மரச் சோடுகள் அணிந்து பனியில் ஓடவும், உருளைகளை யுடைய செருப்புக்களை அணிந்து பனிக்கட்டியில் சறுக்கி விளையாடவும் தெரிந்துகொண்டேன். முதல் விளையாட்டில் எனக்கு ஆசை அதிகம். மகிழ்ச்சியுடன் பல மணி நேரங்களை நான் அவ்விளையாட்டில் செலவழித்த துண்டு. மான்ட்டனுவில் தங்கியிருந்தபோது ஜவாஹரும் நானும் அடிக்கடி பாரிஸ், பெல்ஜியம், ஜெர்மனி முதலிய இடங்களுக்கும், சில சமயங்களில் இங்கிலாந்திற்கும் சென்றுவந்தோம். இங்கிலாந்து எனக்குப் பிடிக்கவில்லை. ஆனால், பிரான்ஸ்-சிறப்பாகப் பாரிஸ் நகரம்-எனக்குப் பிடித்திருந்தது. அங்கு நடைபெற்ற கூட்டங்களில் கலந்துகொள்ளவோ அன்றி உல்லாசப் பிரயாணமாகவோ நாங்கள் செல்வது வழக்கம். முதலில், ஜவாஹர் மட்டும் தனியாகப் போய்வந்தார். அவருடைய காரியதரிசியாக இருந்து, அவருக்கு உதவிசெய்யக் கூடுமானால் என்னையும் உடன் அழைத்துச் செல்வதாக அவர் என்னிடம் தெரிவித்தார். அவரோடு பிரயாணம் செய்வதற்கு நான் பேரவாக் கொண்டேன்; ஆனால், அவருடைய காரியதரிசியாய் வேலைசெய்வதற்குச் சிறிது அஞ்சினேன். ஏனெனில், ஜவாஹர் கடுமையாக வேலைவாங்குவார்; மேலும், சாமர்த்திய மின்மையைப் பொறுக்கமாட்டார். ஆயினும், அவரது வார்த்தைகள் என்னை மிகவும் தூண்டின வாதலால், நான் உடனே ஜவாஹரின் டைப்ரைட்டரைப் பெற்றுக்கொண்டு, எதிர்கால வாழ்க்கைக்கு என்னைத் தயாரித்துக்கொள்ள, அதில் வேலை செய்யத் தொடங்கிவிட்டேன். அது முதல் அநேகமாக எல்லாப் பிரயாணங்களிலும் நானும் அவரோடு செல்லலானேன். இதுவே எனக்கு ஒரு கல்விப் பயிற்சியாய் இருந்தது;

ஆனால், நான் நினைத்தபடி வேடிக்கையாக இருக்கவில்லை. எப்பொழுதும் கடுமையாக வேலை செய்வதே ஒருவருக்கு நன்மை பயக்கத் தக்கது என்றும், அத்தகைய வேலையை அவர் கருத்துப்படி நான் அதற்கு முன் செய்ததில்லை என்றும் எண்ணிக்கொண்டு ஜவாஹர் எனக்கு ஓய்வே யின்றி வேலை கொடுத்துவந்தார். நான் மிகவும் சுக வாழ்க்கையே வாழ்ந்துவந்திருப்பதாகவும், சிறிது கஷ்டம் எனக்குப் பெருத்த அபிவிருத்தியையே கொடுக்கு மென்றும் அவர் என்னிடம் தெரிவித்தார். உண்மையில் எனக்கு நல்ல அபிவிருத்தி ஏற்பட்டது.

அதிக வேலை யில்லாதபோது கண்காட்சி சாலைகளுக்கும், சித்திரச் சாலைகளுக்கும், இவை போன்ற பிற இடங்களுக்கும் ஜவாஹர் என்னை அழைத்துச் செல்வார். சில வேளைகளில் நாள் முழுதும் கஷ்டத்துடன் நடந்தே செல்வோம். மிகவும் களைப் படைந்துவிட்ட காலங்களில் பார்க்கவேண்டிய மற்ற காட்சிகளை வண்டியில் சென்று பார்க்கலாம் என்று நான் கூறுவ துண்டு. அப்பொழுது, இரவில் நாடகம் பார்க்கச் செல்வதில்லை என்ற நிபந்தனைக்கு நான் சம்மதித்தால் என் ஆலோசனையை ஏற்றுக் கொள்வார். ஒரே சமயத்தில் அதிகமான சுகபோகங்களை அனுபவிப்பது தீமை பயப்பதாகும் என்பது அவரது எண்ணம். இரவு சினிமாவுக்குப் போகாம லிருப்பதைக் காட்டிலும் நடந்தே தீருவது என்று மனத்தாங்கலோடு நடக்கத் தொடங்கிவிடுவேன். அது ஒரு நல்ல பயிற்சி என்பதையும், இந்தியாவில் இருந்திருப்பேனாயின் அப்படிப் பட்ட ஒரு பயிற்சி எனக்குக் கிடைத்திராது என்பதையும், நான் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். என்மீது அனாவசியமான கஷ்டங்களை என் அண்ணா சுமத்துவதாக நான் சில சமயங்களில் எண்ணுவதுண்டு; இதற்காக நான் அவரை முற்றும் வெறுத்திருக்கிறேன்.

நான் சென்றவிடமெல்லாம் எனக்குப் பல நாட்டையும் சேர்ந்த சிநேகிதர்கள் ஏற்பட்டார்கள். பெரும்பாலும், அவர்கள் மாணவர்களாகவும், ஓவியர்களாகவு மிருப்பார்கள். மிகுந்த சுயேச்சையுடன் நான் வளர்க்கப்பட்டேன்; மேலும் சிறுவர் சிறுமியரிடையே, வேற்றுமை கருதா வண்ணமும் நான் கற்பிக்கப்பட்டேன். உண்மையில், கட்டுப்பாடின்றித் துள்ளித் திரிகின்ற ஒரு பெண்ணு

கவே நான் இருந்தேன்; அம்மா இதற்காக என்னை அடிக்கடி கண்டிப்பதுண்டு. சிறுவர்களும் சிறுமிகளும் தாராளமாக ஒன்றுகூடியிருப்பதென்பது எனக்குப் புதிதல்ல. நான் யாரைச் சந்தித்தாலும் அவர்களைக் கண்டு கூச்சப்படுவதோ அன்றி விகாரமாக நடந்துகொள்வதோ யில்லை. சிலர் எனக்கு அரிய நண்பரானார்கள். தற்போதைய உலக யுத்தம் ஆரம்பித்து ஓராண்டு வரை நாங்கள் ஒருவருக்கொருவர் தொடர்ந்து கடிதப் போக்குவரவு செய்து கொண்டிருந்தோம். பின்னர், என் நண்பர்களது தேசங்களில் நாஜிப் படைகள் ஆக்கிரமிக்க ஆரம்பித்ததும் சிறிது சிறிதாக ஒவ்வொருவரைப் பற்றியும் நான் தெரிந்துகொள்ள முடியாது போயிற்று. அவர்கள் தற்போது யுத்தக் கைதிகளின் சிறைகளில் இருக்கிறார்களா அல்லது உதவியற்ற அகதிகளாக இடம் விட்டு இடம் ஓடித் திரிகிறார்களா என்று ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. என்னுடைய இந் நண்பர்கள் எப்பொழுதும் உற்சாகம் நிரம்பியவர்களாய் இருப்பார்கள்; எதிர்காலத்தைக் குறித்து அவர்கள் அஞ்சுவதில்லை; அமைதியும், வளமும் நிறைந்த அச்சமற்ற ஒரு புதிய உலகத்தைத் தாம் சிருஷ்டிக்கப் போவதாக அவர்கள் கருதினார்கள்; ஆனால், அவர்கள் எண்ணம் ஈடேறவில்லை; கண்ட கனவுகள் கொடுமையாகச் சிதறடிக்கப்பட்டுவிட்டன. என்றாவது அக்கனவுகள் திரும்பவும் உருவடையுமா என்பதை யார் அறிவார்!

சுவிட்ஸர்லாந்திலும், பாரிஸ் நகரத்திலும், நான் இருந்த பொழுது அனுபவித்த நாட்கள்தான் மிக இன்பமான நாட்கள். கவலையற்றதாக, இன்பமயமாக இருந்த அப் பழைய வாழ்க்கையைத் திரும்பப் பெற்று, எனது பழைய நண்பர்களை மீண்டும் சந்திக்க நான் அடிக்கடி ஆசைப்படுவது உண்டு. ஆனால் பல முறை திட்டங்கள் போட்டும் அவை உருவாகாமற் போயின. நான் பிறகு அங்கு செல்லவே இல்லை.

1927-ம் ஆண்டின் ஆரம்பத்தில் ஏகாதிபத்திய எதிர்ப்புச் சங்கம் பிரஸெல்ஸ் நகரில் கூடிற்று. இந்திய தேசிய காங்கிரசின் பிரதிநிதியாக ஜவாஹரை அக் கூட்டத்திற்கு அழைத்தார்கள். வழக்கம் போல் நான் அவருடன் சென்றிருந்தேன். உலகத்தின் எல்லாப் பகுதிகளி

விருந்தும்- தொலை தூரத்தில் உள்ள சீனு, ஜாவா, ஸிரியா, பாலஸ்தீனம், ஆப்ரிக்கா, அமெரிக்கா முதலிய பல நாடு களிலிருந்தும் - மக்கள் வந்திருந்தார்கள். அமெரிக்க, ஆப்ரிக்க நீக்ரோப் பிரதிநிதிகள், ஆவேசம் மிக்க உருக்கம் நிறைந்த சொற்பொழிவுகளை நிகழ்த்தினுர்கள்.

இங்குதான் சரோஜினி நாயுடுவின் சகோதரரான வீரேந்திர சட்டோபாத்யாயாவை முதன் முதலாக நான் சந்தித்தேன். 'சட்டோ மாமா' என்ற பெயரில் இவரை எல்லோரும் அறிந்திருந்தார்கள். தம் தாய்நாட்டினின்று மிக நீண்ட நாட்களுக்கு முன்னரே நாடு கடத்தப்பட்ட இவர், இருக்க இடமோ, செலவுக்குப் பணமோ இன்றி, நித்திய தரித்திர வாழ்க்கையுடன், தனியாகவே தேச தேசங்களெல்லாம் சுற்றித் திரிந்து வாழ்ந்து வந்தார். இங்கிலேயிலுங்கூடப் பிறரைப் போன்று இவர் உல கத்தின்மீது கசப்படையவில்லை; இதற்கு மாருக இவர் எப்பொழுதும் புன்னகை பூத்த முகத்துடன் இருப்பார்; இனிய வார்த்தைகளால் எல்லோரையும் மகிழ்விப்பார். அவர் அறிவிற் சிறந்தவர்; சாந்தமும் வசிகரமும் உடைய வர். நான் அறிந்திருந்தவர்களுள் மிகவும் விரும்பத்தக்க ஒருவராக அவர் இருந்தார். எனக்கு அவர்மீது வெகு பிரியம். அவரும் என்னிடத்து அன்பு பாராட்டினுர். பழகப் பழக அவர் மீது எனக்கிருந்த அன்பும் மரியாதை யும் அதிகமாயின. பெரும் பசியால் வாடினும் அவர் மனம்உடைய மாட்டார். பல சமயங்களில் தம் கையில் காலை உணவுக்கென இரண்டு ஆப்பிள் பழங்களே யிருந்த காலத்திலும் பசியால் வாடும் ஏழை இந்திய மாணக்கர் களைக் கண்டதும் அவர்களை வற்புறுத்தித் தம்மிடமிருக் கும் உணவைப் பகிர்ந்து கொடுப்பது அவர் வழக்கம். 1927 அக்டோபரில் நாங்கள் பெர்லினுக்குச் சென்றிருந்த போது, சட்டோவை மறுமுறையும் கண்டு அவர் பெருமை களை இன்னும் விரிவாக அறிந்தோம். எங்கள் எல்லோ ருக்குமே அவர்மீது பிரியம் அதிகம். அவரும் எங்களை அவ்வாறே நேசித்தார். அவர், தம்மை அந்நியராகக் கருதாது தங்களது குடும்பத்தைச் சேர்ந்தவர் போலவே கருதும் சிலரைப் பல ஆண்டுகளுக்குப் பின்னர் சந்திக்க நேர்ந்தது இதற்குக் காரணமாக இருக்கலாம்.

பெர்லினைவிட்டு நாங்கள் புறப்பட்ட அன்று மாலை எங்களை வழியனுப்ப, அவர் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். தனியாகவே சுற்றித் திரிந்ததன் பயனாய் இறுகிப் போயிருந்த அவர் மனமும் எங்களுக்குப் பிரிவு உபசாரம் கூறுகையில் இளகிவிட்டது. பிளாட்பாரத்தி லிருந்து எனக்கு விடையளித்த தருணத்தில் அவர் கண் களிலிருந்து நீர் பெருகிற்று "கிருஷ்ணா! நான் உனக்குக் கூறும் வழியனுப்பு உபசாரம் நாம் மீண்டும் சந்திக்கக் கூடிய தருணத்தை அளிக்குமோ அல்லது இதுவே கடைசி யாக அமைந்துவிடுமோ தெரியவில்லை. நான் மீண்டும் உன்னைச் சந்திக்கலாமென்றே எண்ணுகிறேன். உன்னைச் சந்திக்க இந்திய மண்ணுக்கே நான் வரக்கூடியதாக ஏற் படுமோ என்னவோ யார் அறிவார்" என்று அவர் சொன் னார். என் மனம் உருகிவிட்டது; இனி எப்போதுமே சந்திக்க முடியாதோ என்று என் மனம் எண்ணவும் கண்ணீர் கடலாகப் பெருகிற்று; ஸ்டேஷனை விட்டு வண்டி நகர்ந்ததும் அவர் உருவம் கண்ணுக்குத் தெரியும் வரை கையை அசைத்து என் அன்பைத் தெரிவித்துக் கொண்டேன். அவர் உதட்டில் அப்பொழுது தோன்றிய கடைசிப் புன்னகையை நான் இன்னும் நினைவில் கொண் டிருக்கிறேன். அவர் எவ்வளவோ இதை மறைக்க முயன் றும் அது வெளித்தோன்றிற்று. பிளாட்பாரத்தில் அநாதை உருவமாய் அவரைத் தனிமையில் விட்டுவிட்டு நாங்கள் பிரிந்தோம். சுகமும் பாதுகாப்புமுள்ள வீட் டிற்கு நாங்கள் திரும்பினோம்; அவரோ கஷ்டமும் நிலை யில்லாமையும் தனிமையும் பொருந்திய வாழ்க்கையை அனுபவிக்கத் திரும்பினார். அதன் பிறகு இடையிடையே சட்டோ மாமாவிடமிருந்து எனக்கும் ஜவாஹருக்கும் கடி தங்கள் வந்துகொண்டிருந்தன, பிறகு செய்தி எதுவும் கிடைக்கவில்லை. பலவிதமான வதந்திகள் உலாவின. அவர் உயிரோடிருக்கிறாரென்றும் பெருந் துன்பத்தாலும் வறுமையாலும் கஷ்டப்படுகிறாரென்றும் சிலர் தெரிவித் தார்கள். மற்றுஞ் சிலரோ ரஷியாவில் கைது செய்யப் பட்டு அவர் சுட்டுக் கொல்லப்பட்டாரென்று தெரிவித் தார்கள். உண்மை இன்னதென யாருக்கும் தெரியவில்லை. அவர் உயிரோடிருக்கிறாரா அல்லது இறந்துவிட்டாரா என்பது இன்னும் மர்மமாகவே இருக்கிறது.

பெர்லினிலும் மற்ற நகரங்களிலும் பல புரட்சிக்காரர்களை நாங்கள் சந்தித்தோம். அவர்களுடைய பல திறப்பட்ட செயல்களைப் பற்றிய கதைகளைக் கேட்பதில் எனக்கு அவா அதிகம். அவர்களுடைய துணிவைக் கேட்டு நான் மிகவும் வியந்து பாராட்டினேன். அவர்கள் பெருந் தியாகிகள்; பெருங் கஷ்டங்களுக்கு உள்ளானவர்கள்; எல்லாவற்றிற்கும் மேலாகப் பொருள் சம்பந்தமான கஷ்டங்கள் அவர்களுக்குப் பெரும் பிரச்னையாய் இருந்தன. எனினும், பல இடையூறுகளுக்கிடையில் தங்களால் இயன்ற அளவு வாழ்க்கையை மிக உயர்ந்த முறையிலும் உற்சாகத்தோடும் நடத்திவந்தார்கள். நாடுகடத்தப்பட்ட இவர்கள் உலகமெங்கும் சிதறிக்கிடக்கிறார்கள். இவர்களுடைய உயர்வும், வீரமும் நமது கற்பனைகளுக்கும் அப்பாற்பட்டவை; அவ்வாறிருந்தும் நம் நாட்டில் இவர்களைப் பற்றி எத்தனை பேர் தெரிந்து கொண்டிருக்கிறார்கள்? தெரிந்தவர்களுள் எத்தனை பேர் இவர்களைப் பற்றிச் சிந்திக்கின்றார்கள்?

என் நினைவிலுள்ள மிகவும் விரும்பத்தக்க - கவர்ச்சி மிக்க - மற்றொரு மனிதர் தனகோபால முகர்ஜியாகும். இவர் ஓர் இளைஞர்; வங்காளத்தைச் சேர்ந்தவர்; நூலாசிரியர். இந்தியாவிலுள்ள தம் வீட்டினின்று வெளியேறிப் பலவிதத் துன்பங்களை அடைந்தபின் அமெரிக்காவுக்குச் சென்று அங்கேயே நிலையாகத் தங்கிவிட்டார். கல்லூரி ஓய்வு நேரங்களில் வெளியில் வேலை செய்து, அதன்மூலமாக, கல்லூரிக் கட்டணத்திற்குரிய வருவாயைப் பெற்றுப் படித்துவந்தார். கல்லூரிப் பயிற்சி முடிந்ததும், நூல்கள் எழுதத் தொடங்கினர். துரதிர்ஷ்டவசமாய் இந்தியாவில் உள்ளவர்கள் அவருடைய நூல்களைப் பற்றி அதிகம் அறியாதிருக்கிறார்கள். 'மௌன முகம்', 'மேல் ஜாதியும் கீழ் ஜாதியும்', 'என் சகோதரனின் முகம்' என்னும் அவரது நூல்கள் நான் படித்த புத்தகங்களுள் மிகச் சிறந்த சிலவாகும். 'உல்லாஸக் கழுத்து', 'காரி - யானை' என்பனபோன்ற சில இனிமையான நூல்களைக் குழந்தைகளுக்காகவும் அவர் எழுதியுள்ளார்.

ஜினிவாவில் நாங்கள் இருந்தபொழுது, ஒரு நாள் தனகோபாலிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அக்கடிதம்

அண்ணு பெயருக்கு விலாசமிடப்பட்டிருந்தது. அண்ணு அப்பொழுது இங்கிலாந்தில் இருந்ததால், கமலா அதைத் திறந்து படித்தாள். தனகோபால் எங்களைச் சந்திக்க விரும்புவதாக எழுதியிருந்தார். ஜவாஹர் ஊரிலில்லையென்றும், எனினும் தனகோபால் எப்பொழுது வேண்டுமானுலும் எங்களைச் சந்திக்க வீட்டுக்கு வரலாமென்றும் கமலா பதில் அனுப்பினுள். இரண்டு நாட்களுக்குப் பின்னர், சுமார் மாலை ஐந்து மணிக்கு, கூப்பிடும் மணிச் சப்தம் கேட்டது. விடுமுறை காரணமாக, பணிப்பெண் அன்று வேலைக்கு வராததால் நானே சென்று கதவைத் திறந்தேன். ஓர் இளைஞர் நின்றுகொண்டிருந்தார். என்ன வேண்டுமென்று அவரை நான் கேட்டேன். நேருவின் மனைவியையும், அவரது மகளையும் காண வந்திருப்பதாகக் கூறினுர். சந்தேகத்துடன் அவர் யாரென்று வினவினேன். தனகோபால் முகர்ஜி என்று தெரிவித்தார். நான் திடுக்கிட்டேன். எக்காரணம் பற்றியோ நானும் கமலாவும், தனகோபால் முகர்ஜி என்பவர் வயது முதிர்ந்த, நெடு அங்கி தரித்த, தாடியை உடைய ஒருவராய்த்தான் இருக்கக்கூடுமென்று நினைத்துக்கொண்டிருந்தோம். ஆனுல், அமெரிக்கர்களது ஆங்கில உச்சரிப்புடன் பேசும் அழகிய-இனிய பார்வையையுடைய-இளைஞர் ஒருவர் அங்கே நிற்கக் கண்டேன். என் வியப்பை மறைத்துக்கொண்டு அவரை உள்ளே வருமாறு கூறிவிட்டு, கமலாவிடம் தெரிவிப்பதற்காக நான் முன்னதாகச் சென்றேன். சில நிமிஷங்களுக்குப் பின்னர், நானும் கமலாவும் தனகோபாலைச் சந்திக்க வந்தபொழுது, அவர் மண்டியிட்ட வண்ணம் அணைந்துபோயிருந்த நெருப்பை ஊதிக்கொண்டிருக்கக் கண்டோம். எங்களைக் கண்டதும் அவர் எழுந்து, "இங்கு கொஞ்சம் சௌகரியங்களை ஏற்படுத்திக்கொள்வதில் உங்களுக்குத் தடையில்லையே?" என்று புன்சிரிப்புடன் கேட்டார். அவரது புன்சிரிப்பால் மற்றும் எத்தனையோ பேரைக் கவர்ந்ததுபோல், என்னையும் கமலாவையும் கவர்ந்துவிட்டார். தனகோபாலோடு தொடர்பு கொண்ட அன்று முதல் எங்கள் வாழ்க்கை ஒரு பெரும் விநோதமாக மாறிற்று. சில வேளைகளில் புஷ்பங்களையாவது அல்லது பழங்களையாவது அவர் கொண்டுவருவார்; சில வேளைகளில் காய்கறிகளைக் கொண்டுவந்து, வங்காளமுறை

யில் சமைப்பதாகக் கூறிச் சமையல் செய்வார். அது வங்காள முறையாகவே யிராது. என்னை அடிக்கடி உலாவ அழைத்துச் செல்வார். கொஞ்சம் உடம்பில் வெப்பம் கண்டவுடன்- அது எந்த இடமாயினும் சரி-மேல் சட்டையையும், உள்ச் சட்டையையும் கழற்றிச் சுருட்டிக் கக்கத்தில் இடுக்கிக்கொண்டு தொடர்ந்து நடப்பார். அவரது இந்தச் செயலைக் கண்டு நான் திகைத்துவிடுவேன். இந்தியரிடம் இருக்க வேண்டிய அமைதி என்னிடம் இல்லையென்றும், அமைதியையும், மன ஒருமையையும் பெற நான் நாள்தோறும் காலையில் அரை மணி நேரமாவது தியானம் செய்யவேண்டு மென்றும் அவர் எனக்கு உபதேசிப்பார். அவரிடத்தில் பல விபரீத குணங்கள் இருந்தன. நான் சந்தித்த மற்றவர்களைக்காட்டிலும், அவர் மிகவும் அன்பும் இனிமையும் வாய்ந்தவராக இருந்தார். பல ஆண்டுகள் எங்களுக்குள் கடிதப் போக்குவரவு இருந்தது. சில நாட்கள் தங்கியிருந்து திரும்பிப் போகும் எண்ணத்துடன் 1932-ல் தனகோபால் இந்தியாவுக்கு வந்தார். அவர், இளமையும், களிப்புடைய தோற்றமும் சிறிது குறைந்தவராக அப்பொழுது காணப்பட்டார். வாழ்க்கை இவருக்கு ஏமாற்றத்தை அளித்துவிட்டது. நூலாசிரியரா யிருந்தும் வருமானம் கிடைக்கவில்லை; மன முடைந்து காணப்பட்டார். தனகோபால் ஓர் அமெரிக்க மாதை மணம் புரிந்து கொண்டிருந்தார். இப்போது சுமார் 25 வயதுடையவனாக யிருக்கக்கூடிய-கோபால் என்ற பெயருடைய-ஒரு மகனும் அவருக்குண்டு. அவர் மனைவி, அவரைக் காட்டிலும் வயதில் மிகவும் மூத்தவள். நியூயார்க் நகரத்திலுள்ள ஒரு பெரிய பெண்கள் பள்ளிக்கூடத்தில் அவள் தலைமை யாசிரியையாக இருந்தாள்; அறிவும் திறமையும் வாய்ந்தவளாகவும், பழகுவதற்குரிய இனிய குணங்கள் வாய்ந்தவளாகவும் இருந்தாள். அவர்கள் குடும்பத்தில் ஒழுங்காகச் சம்பாதித்துக்கொண்டிருந்தவள் அவள்தான். மனைவியின் வருமானத்தில் தான் வாழ்ந்து வருவது தனகோபாலுக்கு வருத்தத்தை அளித்திருக்கு மென்று நினைக்கிறேன். 1932-ம் ஆண்டிற்குப் பிறகு தனகோபாலிடமிருந்து வந்த கடிதங்கள் அவருடைய மனம் நாளுக்கு நாள் உடைந்து வருவதையே காட்டின. பின்னர் கடிதம் வருவது நின்றுவிட்டது. 1935-ல் அவர் தூக்குப்

போட்டுக்கொண்டு தற்கொலை புரிந்துகொண்டதாக நாங்கள் கேள்விப்பட்டோம்.

தனகோபால் எங்களுடைய அரிய நண்பராக இருந்தார். அவருடைய மரணம் ஜவாஹருக்கும், கமலாவுக்கும், எனக்கும் மிகுந்த துக்கத்தை விளைத்தது. நாங்கள் ஓர் உண்மையான நண்பரை இழந்தோம்; இந்தியா அறிவிற் சிறந்த—ஆனால், பிறரால் பெரிதும் அறியப்படாத—ஒரு மகனை இழந்தது.

*1927*- கோடைக்காலத்தில் என் தந்தை ஐரோப்பாவுக்கு வந்தார். ஜவாஹருக்கும் எனக்கும் இது மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. அப்பாவுக்கு ஓய்வுமட்டுமன்றி, இடம், வாழ்க்கை மாற்றங்களும் அவசியமாய் இருந்தன. இம்முறை கடைசி நிமிஷத்தில் ஏதேனும் ஒரு தடை ஏற்பட்டு, அதன் காரணமாக அவர் தமது பிரயாணத் திட்டத்தை ரத்துச் செய்துவிடக்கூடுமோ என்றும், மறுமுறையும் அவருடைய பயணம் நின்றுவிடுமோ என்றும் நாங்கள் அஞ்சினோம்; ஆனால், அப்படியொன்றும் நிகழவில்லை. பிரயாணச் சீட்டு வாங்கிவிட்டதாக அப்பா தெரிவித்திருந்தார். புறப்படுமுன் கடைசியாக அவர் எழுதியிருந்த கடிதத்தில், "நீயும் அண்ணாவும் (ஜவாஹர்) என்னை ஐரோப்பாவுக்கு வந்து ஓய்வு எடுத்துக்கொள்ளுமாறு வற்புறுத்துகிறீர்கள். இங்கே சுவரூபும் ரஞ்சித்தும் அவ்வாறே என்னை வற்புறுத்திக்கொண்டிருக்கிறார்கள். இனி வெகு சீக்கிரத்திலேயே புறப்பட முடியுமென நினைக்கிறேன். கடந்த ஏழாண்டுகளாகத் தேசத்தொண்டில் ஈடுபட்டு உழைத்து, ஒருவாறு ஓய்ந்துவிட்டேன். இவ்வளவு நீண்ட காலத்திற்குப் பிறகும், பாராட்டத்தக்க நன்மை எதுவும் என்னால் நாட்டிற்குச் செய்யமுடியவில்லையென்பதை நினைக்க, எனக்கு வருத்தமாயிருக்கிறது. எனவே நான் ஓய்வு எடுத்துக்கொள்ள முடிவுசெய்துவிட்டேன். உங்களுடன் கூடயிருப்பதில் பெறக்கூடிய மகிழ்ச்சியை, இனியும் தள்ளிப்போட எனக்கு இஷ்டமில்லை" என்று எழுதியிருந்தார். நான், பிரஸெல்ஸ் (ஏகாதிபத்திய எதிர்ப்பு) மகாநாடு பற்றி முன்னர் எழுதியிருந்ததைப் பற்றி, அடியில் வருமாறு அதே கடிதத்தில் தந்தை எழுதியிருந்தாவது:

"பிரஸெல்ஸ் மகாநாட்டைப் பற்றியும், அதைப் பற்றிய உனது கருத்துக்களையும் விளக்கி நீ எழுதியிருந்த வற்றை மிகவும் மகிழ்ச்சியோடு படித்தேன். நீ ஓர் அரசியல்வாதியாகிவிட்டாய் என்று அறிகிறேன். ஆனால், பெண்ணாயிருப்பதால் அது எவ்விதத்திலும் தடையா யிருக்குமென்று எண்ண வேண்டாம். ஆண்களைப் போலவே, தங்கள் தாய்நாட்டின் மேம்பாட்டிற்காகப் பெரிதும் பங்கெடுத்துக்கொண்ட பெண்கள் அநேகர் இருக்கிறார்கள். அவர்களில் சிலர், அநேக ஆண்களைவிடப் பெரும் புகழையும் பெற்றிருக்கிறார்கள். இது, ஒருவர் தம் நாட்டின்மீது வைத்துள்ள பற்றுதலைப் பொறுத்தும், நாட்டின் வளர்ச்சி குறித்து உண்மையாக உழைப்பதைப் பொறுத்துந்தான் இருக்கிறது. ஆண் பெண் என்ற தடைக்கு இடமேயில்லை. இதற்கு நேர்மாறாக உறுதி படைத்த ஒரு பெண்ணின் செல்வாக்கு, ஆண்களால் பெற முடிவதைப் பார்க்கினும் அதிகமாகவேயிருக்கும். எனவே, உனக்கு இதில் நிறையச் சந்தர்ப்பம் இருக்கிறது. உண்மை யான தேசபக்தி உன் இரத்தத்தில் கலந்திருக்கிறதென் பதை நீ ஞாபகத்தில் வைத்துக்கொள். நீயாக அதை வலிந்து தடுத்தாலொழிய, இன்றோ நாளையோ அது தானாகவே வெளிவந்துதான் தீரும்."

தந்தை 1927 செப்டம்பரில் வந்து சேர்ந்தார். அவர் எங்களுடன் இருந்தது அதிக மகிழ்ச்சியைத் தந்தது. ஓர் ஆண்டு காலம் பிரிந்திருந்த பின்பு, மீண்டும் தம் குழந்தை களோடு வாழ்வதில் அவரும் ஆனந்தம் கொண்டார். படித்துக்கொண்டும், காரியதரிசியாக வேலைபார்த்துக் கொண்டும், மற்றும் பல வகைகளில் உதவி செய்து கொண்டும், அதுவரை ஜவாஹருடன் காலம் கழித்ததற்கு மாறாக, அப்பாவோடு வேலையின்றியும், ஆடம்பரமாகவும் நான் நாட்களைப் போக்கலானேன். இவ் வாழ்க்கையை நான் முழுதும் அநுபவித்தேன் என்பதை ஒளிக்க விரும்ப வில்லை; எனினும், அத்தகைய வாழ்க்கையை நான் அதிக மாகப் பெறாதது பற்றி மிகவும் மகிழ்ச்சியே யடைகிறேன்.

நாங்கள் எல்லோரும் லண்டனுக்குச் சென்றிருந் தோம். ஜவாஹரை, ஹாரோ பள்ளிக்கூடத்தில் சேர்ப் பதற்காகச் சென்றிருந்தபோது பல ஆண்டுகளுக்கு முன் அப்பா எந்த ஹோட்டலில் தங்கி யிருந்தாரோ, அதே

ஹோட்டலில் இப்பொழுதும் தங்கலானோம். நாங்கள் இங்கு வந்து சேர்ந்ததும், நான் வாயிற்காவலனை அணுகி, எங்களுக்கு ஏதேனும் கடிதம் வந்திருக்கின்றதா வென்று கேட்டேன். "அம்மா! தங்கள் பெயரென்ன?" என்றான் காவற்காரன். "நேரு" என்று பதில் கூறினேன். நேரு, நேரு என்று முணுமுணுத்துக்கொண்டே சில நிமிஷங்கள் வரை அவன் கடிதங்களிருக்கும் இடத்தில் தேடிக்கொண்டிருந்தான். பின்னர், என்னைத் திரும்பிப் பார்த்து, "அம்மா பல ஆண்டுகளுக்கு முன்னர், நேரு என்னும் பெயருடைய ஒரு கனவானை நான் பார்த்திருக்கிறேன். அவர் மிகுந்த பணக்காரர்; உயர்ந்த குணமுடையவர். அவருடைய மனைவி மிகவும் அழகுடையவர். அவர்களுடைய மகன் ஹாரோ பள்ளிக்கூடத்திற்குச் சென்று கொண்டிருந்தார். தாங்கள் அவர்களுக்கு உறவினராய் இருக்கக்கூடுமோ?" என்றான். ஆச்சரியத்துடன் நின்று கொண்டிருந்த காவற்காரனைப் பார்த்து மிகவும் மனம் பூரித்தவளாய், முன்னொரு சமயம் அந்த ஹோட்டலில் தங்கியிருந்த அதே கனவான்தான் என் தந்தை என்றும், தலையில் சிறிது வழுக்கையுடனிருந்த மற்றொருவர்தான் ஹாரோவுக்குச் சென்று படித்துக்கொண்டிருந்த இளைஞரென்றும் தெரிவித்தேன். வயது முதிர்ந்த அக் காவற்காரன் இச்செய்தியால் மிகவும் களிப்படைந்தவனாய், அதன் பிறகு அதிக சிரத்தையோடும் விசேஷமாகவும் எங்கள் வேலைகளைக் கவனித்தான். பல ஆண்டுகள் கடந்தும், அவன் எங்கள் பெயரை நினைவில் வைத்திருந்தது குறிப்பிடத்தக்கது; இது எனக்கு வியப்பையும் உருக்கத்தையும் விளைத்தது.

தந்தையோடு நாங்கள் எங்கு தங்கியிருந்தாலும் எங்களுக்கு ராஜ உபசாரம் நடைபெற்றது. நாங்கள் எந்த ஹோட்டலுக்குச் சென்றாலும், அங்குள்ள ஹோட்டல்மேற்பார்வையாளர் தமது மரியாதையைத்தெரிவித்து, புஷ்பங்களை அனுப்பிவைப்பது வழக்கம். பின்னர் அவர்களே நேரில் வந்து எங்கள் சௌகரியங்களைக் கவனித்துச் செல்வார்கள். எல்லோரும் எங்களை எப்பொழுதும் சூழ்ந்துகொள்வார்கள்; இம்மாறுதல் எனக்குச் சிறிது காலம் சந்தோஷத்தைக் கொடுத்தது.

ஒரு முறை அப்பா தனியாக லண்டனுக்குச் சென்றார்; நாங்கள் எல்லோரும் பாரிஸ் நகரத்தில் இருந்தோம். லண்டனிலிருந்து எனக்கு என்ன வாங்கிவரவேண்டுமென்று என்னிடம் கேட்டார். நீளமாயில்லாத தோல்சட்டைமீது எனக்கு நெடுங்காலமாக ஆவல் என்று நான் சொன்னேன். இந்தச் சட்டை அவசியமானதல்லவென்று ஜவாஹர் கருதியதால், அதுகாறும் நான் அதைப் பெறமுடியாது போயிற்று. ஒரு சட்டை வாங்கி வருவதாக அப்பா சொன்னார்; ஆனால், அளவு எடுத்துக்கொள்ள மறந்து விட்டார். லண்டன் சென்றதும் ஒரு நாள் செல்பிரிஜ் கடைக்குப் போய், அங்குள்ள மேலதிகாரியைப் பார்க்க வேண்டுமென்று தெரிவித்தார். மேலதிகாரி வந்ததும், தம் மகளுக்காக ஒரு தோல்சட்டை வாங்க வந்திருப்பதாக அவரிடம் சாதாரணமாகத் தெரிவித்தார். சரியான அளவு தெரியாததால், 5 அடி 2 அங்குல உயரமுள்ள கடைப்பெண்களை வரிசையாக நிறுத்தி, அப்பெண்களுக்குச் சட்டையை அணிவிக்கும்படி செய்தால், தமக்குச் சரியான அளவு தெரிந்துவிடுமென்றும் கூறினார். வழக்கத்திற்குமாறான இத்தகைய வேண்டுகோளைக் கேட்டதும் மேலதிகாரி திகைத்துப்போனார். அப்பா வற்புறுத்தியதன் பேரில், அதிகாரி அவர் விருப்பத்திற்கு இணங்கினார். இவ்வாறாக எனக்கு ஓர் அழகிய சட்டையை அப்பா வாங்கி வந்தார். சட்டையைப் பொறுக்கி யெடுப்பதில் அவர் சரியாகக் கவனம் செலுத்தவில்லை என்று தோன்றிற்று. இது தவறான வழி யென்றோ வழக்கத்திற்கு மாறானதென்றோ அவர் கருதவில்லை. இந்தக் கதையை எங்களிடம் சொன்னதும், எனக்கும் கமலாவுக்கும் வேடிக்கையாகயிருந்தது. ஆனால், ஜவாஹரோ கோபத்துடன் காணப்பட்டார். தம்மால் செய்ய முடியுமென்பதற்காக, தந்தை இப்படிப்பட்ட காரியம் செய்தது தவறு என்று ஜவாஹர் கருதினார்.

சில நாட்கள் தங்கியிருக்கும் எண்ணத்துடன் 1927 நவம்பரில் நாங்கள் எல்லோரும் பேர்லினுக்குச் சென்றோம். ரஷ்யப்புரட்சியின் பத்தாவது ஆண்டுவிழாவிற்குத் தாம் மாஸ்கோ செல்லவேண்டுமென்று ஜவாஹர் விரும்பினார். இந்த விழாவிற்கு, அப்பாவுக்கும் ஜவாஹருக்கும் அழைப்பு வந்திருந்தது. எனக்கும் அங்கு செல்லவேண்டு

மென்று மிக ஆவலா யிருந்தது ; கமலாவுக்கும் அப்படியே. மார்ஸேல்ஸிலிருந்து புறப்படும் கப்பலுக்கு வந்து சேரு முன் ரஷ்யாவில் ஒருவார காலம்தான் தங்கியிருக்க முடியு மாதலால், ரஷ்யா செல்லும் பிரயாணம் அனுவசியமான தென்று முதலில் தந்தை கருதினர். எனினும், ஜவாஹர் வற்புறுத்தியமையால் அப்பா இணங்கினர். நாங்கள் எல்லோருமே மாஸ்கோவுக்குச் சென்றோம். அது ஓர் அலுப்பான, சுகமற்ற பிரயாணமா யிருந்தது. அதனல் தந்தை அடிக்கடி அமைதியை இழக்கலானர். மாஸ்கோ நகரம் பார்ப்பதற்குச் சுறுசுறுப்பற்றும், கவர்ச்சியற்றும் இருந்தது ; எனினும், எளிய முரட்டுத் துணிகளை அணிந் திருந்த அந்நகரத்து ஆண் பெண் இருதரத்தாருடைய உள்ளங்களிலும், ஏதோ ஓர் உள்ளொளி குடிகொண் டிருப்பதாய்த் தோன்றிற்று. இதன் காரணமாகப் பார்ப்ப தற்கு இன்பமும் எழுச்சியும் உடையவர்களாக அவர்கள் தோன்றினர்கள். தங்கள் நாடு, உலகிலேயே மிகச் சிறந்த தாகவும், வலிவுடையதாகவும் ஆக, எத்தகைய கஷ்டங்களை யும், தியாகங்களையும் செய்ய அவர்கள் திடசங்கற்பமும் உறுதியும்கொண்டு விளங்கினர்கள்.

கிராண்ட் ஹோட்டலில் நாங்கள் தங்கி யிருந்தோம். அது மிகப் பெரிய அறைகளுடன் கூடிய கட்டிடமாகும். ஜார் மன்னர் காலத்து மேஜை, நாற்காலி முதலிய சாமான் களை யெல்லாம் கனமான, முறட்டுத் துணிகளைப் போட்டு மறைத்துவிட்டமையால், முதலாளித்துவ வாடையே அங்கு வீச வில்லை. குளிர் கடுமையா யிருந்தது. காலை யில் எழுந்ததும் மணியை அடித்து, பணிப்பெண்ணை அழைத்துக் குளிக்க வெந்நீர் வேண்டுமென்று கேட்டேன். ஆச்சரியத்தோடு அவள் என்னை வெறித்துப் பார்த்தாள். குளிப்பதற்காக நான் வெந்நீரை முற்றிலும் செலவழித்து விடக்கூடா தென்றும், குளிக்கும் எண்ணம் எனக்கு எப் படி ஏற்பட்டது என்பதை அறிந்துகொள்ள விரும்பு பவள் போலவும் அவள் சைகைகளாலும், குறிகளாலும் எனக்கு விளக்கினள். என் முகத்தைக் கழுவிக் கொள்வதற்கு அரை ஜாடி வெந்நீரே எனக்குக் கிடைத் தது. அதைக்கொண்டே நானும் மற்றவர்களும் திருப்தி யடையவேண்டியதா யிருந்தது. ஆனல், தந்தைக்கு இதில் திருப்தி யில்லை. கோடையிலும் மாரியிலும் நாள் தவரு

மல் அவர் குளிப்பது வழக்கம். ரஷ்யாவாயினும் மற்ற எந்த நாடாயிருப்பினும் தமது வழக்கங்களை மாற்றிக் கொள்ள விரும்ப வில்லை. எனவே தமக்குக் குளிக்க வெந்நீர் வேண்டும் என்று அவர் மிகவும் வற்புறுத்தினர். இதனல் ஹோட்டல்காரர்கள் மிகவும் சஞ்சலம் அடைந் தார்கள்.

அந்நியநாட்டு மந்திரியா யிருந்த கிச்சரீன் என்பவரை அப்பா கண்டு பேசுவதா யிருந்தார். கிச்சரீன் பல பாஷைகளிலும் பயிற்சி யுடையவர்; அறிவும் கூர்மையான புத்தியும் உடையவர். அவரைச் சந்திக்க ஒரு நேரம் குறிக்கப்பட்டது. இரவு முழுதும் வேலையிருப்பதால் மறுநாட் காலை 4 மணிக்கு, தந்தை கிச்சரீனைச் சந்திக்கலாம் என்று ஒரு ரஷ்ய இளைஞர் மூலம் எங்களுக்குச் செய்தி வந்தது. செய்தி கொண்டுவந்த இளைஞர், அறிவு தடுமாறிய நிலையில்தான் பிதற்றுகின்றுர் என்ற சந்தேகத்துடன் அப்பா அவரை நோக்கினர்; கூறிய வார்த்தைகளையே திரும்பச் சொன்னர். இளைஞர், தலையை அசைத்து அப்பா சரியாகவே புரிந்து கொண்டதாகத் தெரிவித்தார்; காலை 4 மணிதான் குறிக்கப்பட்ட சரியான நேரம் என்றும் மொழிந்தார். மறு நாட் காலை 4 மணி வரை தந்தைக்கு மிகவும் மனவேதனையாயிருந்தது. காலை 4 மணி வரை அவர் என்ன செய்ய இருக்கிருர் என்பதையும் அறிந்துகொள்ள விரும்பினர். அவர் அந்நேரத்தில் போக விரும்பாதவராய்த் தோன்றிய தால், இரவு சுமார் ஒரு மணிக்கு, கிச்சரீனைச் சந்திக்க ஏற் பாடாயிற்று.

விழாக் கொண்டாட்டங்கள் ஆடம்பரமாகவும், கண் கொள்ளாக் காட்சியாகவும் இருந்தன. செஞ்சேனையின் அணிவகுப்புகள் செல்லும் காட்சி பார்க்கத்தக்கது என்று நாங்கள் கேள்விப்பட்டோம்; ஒரு நாள் தாமதித்து வந்த தால், நாங்கள் இதனைப் பார்க்க முடியாதுபோயிற்று. சிவப்பு மைதானத்தில் லெனினுடைய கல்லறை இருந்தது. அங்கு லெனினுடைய உடம்பை, தைலத்திலிட்டு அழியாத படிசெய்து கண்ணுடிப் பெட்டிக்குள் வைத்திருந்தார்கள். குறிப்பிட்ட சில நேரங்களில் அங்கு சென்று, லெனினுக்குத் தங்கள் வணக்கத்தைச் செலுத்த மக்கள் அனுமதிக்கப்பட்டார்கள். தலையில் ஒன்றும் அணிந்துகொள்

ளாமல் நூற்றுக்கணக்கானவர்கள் வரிசையாக நின்று மௌனமாக, தங்கள் வணக்கத்தைச் செலுத்தினர். கல்லறைக்கு வெளியேயும் உள்ளேயும் போர்க்கோலத்துடன் போர்வீரர்கள் காவல்செய்துகொண் டிருந்தார்கள். இக் கல்லறையைக் காண நாங்களும் சென்றிருந்தோம். எழுந்து எந்த நேரத்திலும் பேசுவார் என்று எண்ணக்கூடிய விதத்தில் லெனின் உயிரோடிருப்பதுபோலவே தோன்றினார்.

அரசாங்க விருந்தினராக அழைக்கப்பெற்றிருந்த எல்லோருக்கும் ஒரு நாள் ஸோவியத் அரசாங்கம் விசேஷ விருந்தொன்று கொடுத்தது. நீண்ட தாடிகளையுடைய, கம்பீரமான இரண்டு *கொமிஸார்களுக்கிடையில், நான் இருக்க நேர்ந்தது. அவர்கள் வசீகரத் தோற்றமுடையவர்கள். ஆங்கிலமும் பிரெஞ்சும் தங்குதடை யின்றிப் பேசினார்கள். விருந்து நீண்ட நேரம் நடைபெற்றது. எனக்குக் கொஞ்சம் தாகமாய் இருந்தது; ஆனால், குடிப்பதற்கு ஒன்றும் அங்கு இல்லை. கொமிஸார்களைக் கேட்க நான் விரும்பவில்லை. எனவே நான் அமைதியாக, குடிப்பதற்கு ஏதாவது கிடைக்குமா வென்று சுற்றுமுற்றும் பார்த்தேன். ஒவ்வொரு மேஜையிலுமுள்ள தட்டுகளின் பக்கத்தில் ஒரு கிளாசும், தண்ணீர் ஊற்றிவைக்கும் போத்தலும் இருப்பதைக் கண்டேன்; அவற்றில் தண்ணீர் இருப்பதாகத் தெரிந்தது. நான் அதை எடுக்க முயன்றேன். இதை அறிந்த ஒரு கொமிஸார் என்னை விலக்கி, தாமே என்னுடைய சிறிய கிளாசிலும், அவருடையதிலும் தண்ணீரை ஊற்றினார். தன் பாத்திரத்தி லிருந்ததை அவர் ஒரே மூச்சில் குடித்துவிட்டார். அதிக தாகத்தோடிருந்த நானும் அவ்வாறே செய்தேன். இரண்டே தடவையில் அரைக் கிளாஸ் குடித்ததுமே, எனக்கு மூச்சுத் திணறிப் போய்விட்டது; தொண்டையில் ஏதோ எரிச்சல் ஏற்படுவதுபோல் தோன்றிற்று. கண்களில் நீர் ததும்பிற்று. கிளாசைக் கீழே வைத்துவிட்டு, என் முன்னால் இருந்த உணவை வாய் நிறையப் பலமுறை உட்கொண்டேன். பிறகு, சிறிது சௌகரியமா யிருப்பதுபோல் தெரிந்தது. அதற்குள்ளாகவே ஒரு யுகமாய்விட்டதுபோல் தோன்றிற்று. அப்புறந்தான் நான் குடித்தது தண்ணீர் அல்ல

* ஸோவியத் அரசாங்க இலாக்காத் தலைவர்கள்

என்றும், அது புகழ்பெற்ற ரஷ்ய சாராய மென்றும் தெரிந்துகொண்டேன்.

ரஷ்யாவில் நாங்கள் சென்றிருந்த ஒரே நகரமான மாஸ்கோவில் பலவற்றைக் கண்டோம். கிறிஸ்துவக் கோயில்கள் பல கண்காட்சிச்சாலைகளாக மாற்றப்பெற்றிருந்தன. ஆனால், சில சமயங்களில் கோயிலின் வழியாகச் செல்லும் கிழவன் அல்லது கிழவியிடம் சிலுவைச் சின்னங்கள் இருப்பதை நாம் இன்றும் பார்க்கலாம். 'மதம் மக்களுக்கு அபின் போன்றது' என்பதுபோன்ற வாக்கியம் அமைந்த பல பெரிய சுவரொட்டிக் காகிதங்கள் எங்கும் காணப்பட்டன. எனினும், மக்கள் உள்ளத்தி லிருந்து கடவுளைப் பற்றிய நினைவு அறவே ஒழிந்துவிட வில்லை.

ரஷ்யாவில் நாங்கள் கண்ட சிறைச்சாலை ஒன்று என் கவனத்தை மிகவும் ஈர்த்தது. 1920-ம் ஆண்டிலிருந்து நான் அநேக சிறைச்சாலைகளைப் பார்த்திருக்கிறேன். ரஷ்யர்கள் அரசியல் கைதிகளையும், மற்ற கைதிகளையும் எவ்வாறு நடத்துகிறார்கள் என்பதைப் பார்க்க நான் ஆவல்கொண்டேன். இந்தியாவி லுள்ள சிறைச்சாலைகளின் முக்கிய வாயில்களில் ஆயுதபாணிகளான காவலாளிகள் காவல்புரிந்து வருவார்கள். சிறைச்சாலைகளுக்குள்ளும், வார்டர்கள் தடிகளையும், சில சமயங்களில் மற்ற ஆயுதங்களையும் வைத்துக்கொண் டிருப்பார்கள். ஸோவியத் சிறைச்சாலையை நாங்கள் அடைந்ததும், முக்கிய வாயிலின் முன்பாக ஒரு மனிதன் துப்பாக்கி தாங்கியவனாய் அங்குமிங்குமாக நடந்து, காவல் புரிந்துகொண் டிருப்பதைக் கண்டோம். சிறைக்குள் உள்ள காவலர்களின் கைகளில் துப்பாக்கிகளோ, தடிகளோ எவையுமே யில்லை. நாங்கள் நேராக உள்ளே நுழைந்தோம். நாங்கள் பார்க்க விரும்பும் அறைகளைக் குறிப்பிடும்படி சிறைச்சாலையின் அதிகாரி எங்களைக் கேட்டுக்கொண்டார். பார்வையாளர்களைத் திருப்திப்படுத்துவதற்காக, விசேஷமாக அந்தச் சமயம் இவ்வாறு கூறப்பட்டதா என்பதும் அல்லது அதுதான் சாதாரணமாக அங்குள்ள வழக்கமா என்பதும் எனக்குத் தெரிய வில்லை. சில அறைகளை நாங்கள் குறிப்பிட்டோம். அவ்வறைகள் எங்களுக்குக் காண்பிக்கப்பட்டன. அநேக கைதிகள் தனி அறைகளி

லேயே இருந்தனர். ஒவ்வொரு அறையின் கதவுகளும் திறந்தே யிருந்தன; கைதிகள் தம் விருப்பம்போல் வெளியே போய்வந்துகொண் டிருந்தார்கள். நடைபாதைகளில் காவலர்கள் கண்காணித்து வந்தார்கள்; மற்றப்படி அவர்கள் எவ்விதத் தடையும் செய்யவில்லை.

சில கைதிகள் தாங்களே அமைத்துக்கொண்டுள்ள தங்கள் சொந்த வானொலிக் கருவிகளி லிருந்து நிகழ்ச்சிகளைக் கேட்டுக்கொண் டிருந்தார்கள். அங்கு சில பாடகர்களும் இருந்தார்கள். அவர்கள், தங்கள் இசைக் கருவிகளை மீட்டிக்கொண் டிருந்தார்கள். கைதிகள் தங்களுக்கென்றே ஓர் இசை அரங்கை நிறுவியிருந்தார்கள். சிறைக்குள் வாரம் ஒருமுறை அவர்கள் கச்சேரி நடத்தி வந்தார்கள். சிலர் தங்கள் அறைகளி லிருந்துகொண்டு இசைப் பாட்டுக்கள் எழுதிக்கொண் டிருந்தார்கள்; மற்றும் சிலர், வெளி முற்றத்திலோ, அன்றி, தொழிற்சாலையிலோ இருந்து, வேலைசெய்துகொண் டிருந்தார்கள். இந்தியச் சிறைகளில் மிருகங்களைப் போலும், காட்டுமிராண்டிகளைப்போலும் நடத்தப்படும் பயந்த, வெருண்ட பார்வைகளையுடைய அநேக கைதிகளைப்போ லல்லாமல், அந்நாட்டுக் கைதிகள் மனிதப் பண்புடையவர்களாகவே காணப்பட்டார்கள். நாங்கள் பார்த்த இச்சிறைச்சாலை மிக உயர்ந்த முறையில் இருந்ததெனினும், ரஷ்யச் சிறைச்சாலைகளைப் பற்றிப் படித்தும், கேள்விப்பட்டும் உள்ளவற்றிலிருந்து, ரஷ்யச் சிறைச்சாலைகளெல்லாம் இப்படியே இருக்கும் என்று கருத இடமில்லை.

மாஸ்கோவில் மற்றொரு விநோதமான சம்பவம் நிகழ்ந்தது. ஒரு நாள் வேறு எவ்வித அலங்காரங்களுமின்றி, சாதாரணமாக ஒரு 'டாக்கா' புடவையை அணிந்துகொண்டு, ஒரு கூட்டத்திற்குச் சென்றிருந்தேன். அக்காலத்தில் அலங்காரங்கள் வெறுத்து ஒதுக்கப்பட்டன. என் பக்கத்தில் சிறிது நேரம் இருந்த, பொது உடைமைக் கட்சியைச் சேர்ந்த ஓர் இளம் பெண் என்பக்கம் திரும்பி என் நெற்றியி லிருந்த குங்குமத்தைத் தொட்டுப் பார்த்து, "நீ இதை ஏன் அணிந்திருக்கிறாய்? இது மதச் சின்னம் அல்லவென்று நினைக்கிறேன்! ரஷ்யர்களாகிய நாங்கள் மதங்களை வெறுப்பவர்கள்" என்றாள். அதைப் பற்றி நான் என்றுமே சிந்தித்தவளில்லையாதலால், அவளுடைய

கேள்வி என்னைத் திடுக்கிடச் செய்தது. அவசியமான மற்ற ஆடைகளைப் பற்றி நான் எப்படி எண்ணுகிறேனோ அப்படியே குங்குமத்தையும் எண்ணி அணிந்து வந்தேன். மேற்கண்ட கேள்வியைக் கேட்டதுமே, நான் உண்மையைத் தெரிவித்தேன்; ஆனால், என் வார்த்தைகளை அவள் நம்பாதவளாய், "மதச் சின்னம் இல்லையென்றால் அழகுக்காகவே நீ அந்த இடத்தில் பொட்டு வைத்திருக்க வேண்டும். அதற்காகத்தான் நீ அணிந்திருக்கிறாயா?" என்று வினவினாள். "முதலாளிகளைப்போல் இயற்கைக்கு மாறான முறைகளில் தங்கள் அழகை அதிகப்படுத்திக் கொள்வதில் பொது உடைமைக்காரர்களுக்கு நம்பிக்கை யில்லை" என்று மேலும் அவள் தெரிவித்தாள். நான் பொது உடைமைக் கட்சியைச் சேர்ந்தவள் அல்லள் என்றும், ஆனால், என்றாவது ஒரு நாள் அவ்வாறு மாறக்கூடு மென்றும் அவளிடம் தெரிவித்தேன். எப்படியும் ரஷ்யர் களை நான் மெச்சுகிறேன். அந்தப் பெண் ஏதோ ஒரு விதத்தில் சமாதானம் அடைந்தும், நான் ஆத்மாவையே இழந்துவிட்டவள் என்ற கருத்தோடு என்னை வேண்டா வெறுப்பாக நோக்கிக்கொண் டிருந்தாள். அக்காலத்தில் ரஷ்யாவில் அழகிய ஆடைகளோடு தோற்றமளிப்பது புதுமையாகவும், வெட்கப்படத்தக்கதாகவும் இருந்தது. நமது சாதாரணப் புடவைகள் அந்நாட்டில் அநாகரிக மாகக் கருதப்பட்டது. பொதுமக்களை மேம்படச் செய்ய எண்ணும் உறுதியும், மனோசக்தியும் அழகியற் கலைக ளுக்கு எதிர்ப்பை உண்டாக்கிவிட்டனவோ என்றும், அத் தகைய கடுமையான உணர்ச்சிபடைத்தவர்களில் ஒரு வளையே நான் சந்தித்தேனோ என்றும் வியந்தேன்.

ஒரு வாரம் கழித்து நாங்கள் பெர்லினுக்குத் திரும்பி னோம். குறைந்த காலமே நாங்கள் ரஷ்யாவில் தங்கி யிருந்தோமாயினும், நாங்கள் நிறைந்த அனுபவத்தைப் பெற்றோம். அநேக திட்டங்கள் இன்னும் ஆரம்ப நிலையி லேயே இருந்தன. நாங்கள் சந்தித்த ரஷ்யர் ஒவ்வொருவ ரிடமும் காணப்பட்ட மனோவுறுதியும், நம்பிக்கையுடன் கூடிய புத்துணர்வும் என் மனத்தைப் பெரிதும் ஈர்த்தன. இத்தகைய உணர்ச்சி மலைபோன்ற இடுக்கண்களையும் நிச்சயமாக வெற்றிகொள்ளும். உலக மக்களின் நிலையை உயர்வுபடச் செய்யும் ஒரு சிறந்த சமூகத்தை

உருவாக்குவதில் அவர்கள் ஒருநாள் வெற்றி பெறுவார்கள் என்று நான் திடமாக நம்பினேன்.

புதிய ரஷ்யாவைப் பற்றியும், ஸோவியத் கூட்டு வாழ்க்கை முறைகளைப் பற்றியும் அறிந்துகொள்வது அப்பாவுக்குக் கஷ்டமாக இருந்தது. அவர் பெற்றிருந்த எண்ணங்களும், அவற்றிற்கு ஆதாரமா யிருந்தவையும் வேறு விதத்தைச் சார்ந்தவை; எனவே, புதிய தத்துவங்களுக்கு—அதிலும் அத்தகைய புரட்சித் தத்துவங்களுக்கு—இணங்கத் தம்மை மாற்றிக்கொள்வது அவருக்குச் சுலபமாக யில்லை. ஆயினும், ரஷ்யாவுக்குச் சென்றிருந்தது பற்றி சந்தோஷப்பட்டார். அவர் கண்ட சிலவுங்கூட உண்மையில் காணத்தக்கனவே. புதிய நாடு ஒன்று உருவாக்கப்படுகிற செயல் ஆச்சரியப்படத்தக்க விதமாக எங்கள் எல்லோர் மனத்திலும் பதிந்துவிட்டது. அந்த யாத்திரை - விரைந்தோடித் திரும்பிய நிலையில் இருந்ததாயினும் - என்றும் மறக்க முடியாததாகும்.

*போன நாட்களை எண்ணி எண்ணி மறுகுவது தானா*
*நம்மால் ஆவது? வெட்கித் தலை குனிவதா நமது விதி?*
*எங்கள் முந்தையோர் தமது ரத்தத்தைச் சிந்தினர்.*
*பூமித்தாயே! அன்று சுதந்திரத்திற்காகத் தம் உயிரை*
*ஈந்து உன் மடியை அடைந்த ஸ்பார்டன் வீரரில்*
*சிலரை மறுபடியும் எங்களுக்குத் தா. அந்த முன்னூறு*
*வீரரில் மூவரையாவது தந்துவிடு. இன்னொரு தர்மாபைலி*
*போர் முனையில் சுதந்திரத்தைக் காப்பதற்கு.*

— பைரன்.

மாஸ்கோவி லிருந்து பெர்லினுக்குத் திரும்பினோம். அங்கிருந்து பாரிஸுக்குச் சென்றோம். சில வாரங்கள் அங்கு தங்கியிருந்த பின், மார்ஸேல்ஸ் துறைமுகப் பட்டினத்திற்குச் சென்று, அங்கிருந்து தாய்நாட்டுக்குக் கப்பலில் புறப்பட்டோம்.

இதற்கு முன் அம்மாவைவிட்டு நான் இத்துணை நீண்ட காலம் பிரிந்திருந்ததில்லை; எனவே, அவளைப் பார்க்க - வீடு திரும்ப - மிக்க ஆவலாய் இருந்தேன். ஆனால், பாரிஸை விட்டுப் புறப்பட்டது எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது. நான் அந்நகரத்தில் பல நாட்களை இன்பமாய்க் கழித்தேன். அழகிய - மகிழ்ச்சி அளிக்கத்தக்க - அந்நகரத்தை நான் மிகவும் விரும்பினேன். பாரிஸை விட்டுப் புறப்படும் வரையில், அந்நகரத்தின் அழகைப் பற்றியும், கவர்ச்சியைப் பற்றியும் நான் சரியாக அறிந்து கொள்ள வில்லை. ரயில்வே ஸ்டேஷனை விட்டு ரயில் மெல்ல நகர ஆரம்பித்ததும், பிரெஞ்சு நாட்டின் அழகிய தலைமை நகரத்துக்கு மறுபடியும் எப்பொழுது வரக் கூடுமோ என்று எண்ணினேன். இனி அதை நான் காண முடியாதென்றும், ஒருவாறு காண நேர்ந்தால் அந்நகரத் தோற்றம் பெரிதும் மாறுபட்டே இருக்குமென்றும் ஒரு விநோதமான எண்ணம் எப்படியோ எனக்கு ஏற்பட்டது. சிரிப்பு, களிப்பு, ஆடல் பாடல், கலை ஆகியவற்றால் உலகப் பிரசித்தி பெற்றதும், என் விருப்பத்திற் குரியதுமான பாரிஸ், சில வருடங்களிலேயே நாஜிகளின் கைகளில் சிக்குண்டுவிடு மென்று நான் அப்பொழுது சிறிதும் எண்ணவே யில்லை.

மேலும் சில மாதங்கள் வரை, ஐரோப்பாவில் தங்கி யிருக்க என் தந்தை தீர்மானித்தார். ஜவாஹர், கமலா, அவர்கள் மகள் இந்திரா, நான் எல்லோரும் கொழும்பு வழியாக, 1927 டிசம்பரில் இந்தியாவுக்குத் திரும்பினோம். அவ்வாண்டு மாரிக்காலத்தில் இந்திய தேசிய காங்கிரஸ் சென்னையில் நடைபெற்றது. நாங்கள் இக்கூட்டத்தில் கலந்துகொள்ளும் பொருட்டு, சென்னையில் இறங்கி விட்டோம். பத்து நாட்கள் சென்னையில் தங்கிய பின்னர், அலஹாபாத்திற்குத் திரும்பினோம்.

எனக்குப் பிரிய முள்ளதும், நான் பழகியதுமான இடத்துக்குத் திரும்பி வந்தும், என் மனத்தில் அமைதி ஏற்படவில்லை. சில மாதங்கள் சந்தோஷ மில்லாமலும், அமைதி யில்லாமலும் காலங் கழித்தேன். ஐரோப்பாவில் வாழ்க்கை சுறுசுறுப்புடையதாய் இருந்தது. வீட்டில் பொழுது போகவில்லை. பல நூல்களைப் படிப்பதைத் தவிர, வேறு என்ன செய்வதென்று தெரிய வில்லை. பழைய வாழ்க்கைக்கு ஒழுங்குபடுத்திக்கொள்ள முடியாதவாறு, முற்றும் வழி தவறிவிட்டவள் போன்று, இன்னது செய்வ தென்று தெரியாமல் வருந்தினேன். அந்தத் தருணத்தில் அலஹாபாத்தில் மாண்டிசோரி பள்ளிக் கூடம் ஏற்படப்போவதாகக் கேள்விப்பட்டேன். எனக்கு எப்பொழுதுமே குழந்தைகளிடம் மிகுந்த அன்பு உண்டு. மாண்டிசோரி திட்டம் எனக்குப் பிடித்திருந்தது. அதில் எனக்கு நல்ல பயிற்சி உண்டு. எனவே, அங்கு ஒரு வேலை யைப் பெற முயற்சிக்கத் தீர்மானித்தேன். வேலை எளிதில் கிடைக்கக் கூடியதாய் இருந்தது; அப்பாவின் யோசனை யைக் கேட்கவேண்டு மென்று அப்பொழுது நான் நினைக்க வில்லை. அந்தச் சமையம் என் தமக்கையும், அவள் கணவ ரும் அவர்களுடைய சிறிய பெண் குழந்தைகளான சந்திரலேகா, நயந்தாரா என்னும் இருவரையும் அம்மா விடம் விட்டுவிட்டு, மீண்டும் ஐரோப்பாவுக்குச் சென்றார் கள். அம்மாவுக்கு அப்பொழுது உடல் நலம் சரியாய் இல்லாததால், நானே அக்குழந்தைகளைக் கவனிக்க வேண்டியதாயிற்று. எனக்கு அவர்களிடத்தில் பிரியம் அதிகம். எனினும், அவர்களைக் கவனித்துக்கொள்வது கஷ்டமாய் இருந்தது.

ஐரோப்பாவி லிருந்து அப்பா அப்பொழுதுதான் வந்திருந்தார். ஒரு நாள், அவர் சந்தோஷமாய் இருக்கும் சமயம் பார்த்து, தந்திரமாக விஷயத்தைத் தெரிவித்தேன். என் மனம் அமைதியாய் இல்லையென்றும், நாள்தோறும் ஐந்தாறு மணி நேரமாவது, சுறுசுறுப்பைத் தரக்கூடிய-எனக்குப் பிடித்த-வேலையைச் செய்துவர விரும்புவதாக வும் நான் அவரிடம் தெரிவித்தேன். அப்பா இதை ஏற் றுக்கொண்டு, என் உள்ளத்தில் ஏதாவது கருதியிருக் கிறேனு என்று கேட்டார். தமக்கோ அன்றி ஜவாஹ ருக்கோ காரியதரிசியாய் இருப்பதுபோன்ற ஒரு வேலை யைச் செய்துவரலா மென்று அவர் குறிப்பிட்டார். அது நல்ல யோசனைதா னெனினும், ஒழுங்காக நடைபெருதென எண்ணினேன். அதில், குறிப்பிட்ட வேலை நேரங்களும், கிரமமான வேலை முறையும் இருக்கமுடியாது. நான் எண் ணியது அது அல்ல என்று தந்தையிடம் தெரிவித்தேன். பள்ளிக்கூடத்தைப் பற்றியும், அங்கு ஆசிரியையாக இருந்து பாடம் சொல்லிக்கொடுக்க விரும்புவது பற்றியும் அவருக்கு எடுத்துரைத்தேன். முதலில் அப்பா இதை நம்பவேயில்லை. ஆனுல், இவ்விஷயத்தில் நான் மிகவும் திவிரமாகயிருந்ததை அறிந்ததும்,அவர் இதற்கு இணங்க அறவே மறுத்துவிட்டார். பல சிசுக்களோடு பெரும் பொழுதைக் கழிப்பது இன்பத்தைக் கொடுக்கா தென்றும், விரும்பினுல் நாள்தோறும் இரண்டு மணி நேரம் பொழுது போக்குக்காக அங்கு நான் போய்வரலா மென்றும் தெரி வித்தார். நான் இதில் மிகத் திவிரமாய் இருக்கிறேன் என்பதை அவர் உணர வில்லையென்று யூகித்தேன். மீண்டும் மனத்தைத் தைரியப்படுத்திக்கொண்டு (தந்தை யிடம் என் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கத் தைரியம் மிக அவசியமாய் இருந்தது), ஏற்கெனவே அந்த வேலைக்கு நான் மனுப்போட்டு ஒப்புக்கொள்ளப்பட் டிருக்கிற தென்றும், அவரது சம்மதந்தான் வேண்டு மென்றும் நளினமாகத் தெரிவித்தேன். கௌரவ வேலையாக நான் பார்க்கப்போவ தில்லை யென்பதையும் தெரிவித்தேன். சொன்னதுதான் தாமதம், அப்பாவுக்குக் கோபம் மூண்டு விட்டது; அப்படி ஏற்படு மென்றும் எனக்குத் தெரியும். நான் வேலை செய்வதைப் பற்றி அப்பாவுக்குத் தடை யொன்றும் இல்லை; ஆனுல், சம்பளத்துக்கு வேலை

6

செய்யக்கூடா தென்றும், கௌரவ வேலையாக இருக்க வேண்டு மென்றும் அவர் கருதினர். இதைப் பற்றி நீண்ட நேரம் விவாதித்தோம். நான் வைராக்கியத் துடன் இருந்தேன்; அப்பாவும் அப்படியே இருந்தார். வருமானத்துக்கு வேலை செய்ய வேண்டும் என்று எண்ணி நான் கண்ட கனவுகளும், நம்பிக்கைகளும் பறந்து போயின. என் தந்தையை நான் மிகவும் அன்போடு நேசித்துவந்தமையால் அவரை மீறி நடக்க முடியவில்லை. ஆனல், முதன்முறையாக அவருடைய அதிகாரத்தைப் பற்றிச் சினங்கொண்டேன். நான், பொறுமையா யிருந்து, மாற்றுதற்கரிய அப்பாவின் மனத்தை மாற்றுவதற் குரிய வழிகளைப் பற்றிச் சிந்திக்கலானேன். அம்மாவின் உதவி யையும் பெற முயன்றேன். அம்மாவும் தனது சொந்த எண்ணங்களின்படி மறுத்துவிட்டாள். மணம் புரிந்து கொண்டு, குடும்ப வாழ்க்கையை மேற்கொள்ளுமாறு எனக்கு உபதேசித்தாள். வேலைக்குச் சென்றுல், என் கல்யாணம் மேலும் நீண்ட நாட்களுக்குத் தள்ளிப் போய்விடக்கூடு மென்று தெரிவித்தாள். ஜவாஹரிடம் சென்றேன். என் மனம் மிகவும் களிப்படையுமாறு, நான் வேலைசெய்ய வேண்டு மென்பதை ஒப்புக்கொண்டதோடு மட்டுமல்லாமல், அப்படி நான் செய்யும் வேலை சம்பளம் பெறுவதாகவே இருக்கவேண்டு மென்று தெரிவித்தார். என் முடிவைக் கண்டு சந்தோஷப்பட்டதோடு, அப்பா வையும் இணங்கவைக்க முயற்சி செய்வதாய் வாக் களித்தார். மிக்க ஆறுத லடைந்து, பொறுப்பை அண்ண விடம் சுமத்திவிட்டு, யாவும் நன்ருக முடியு மென்று நம்பி யிருந்தேன். அப்பாவுக்கும் ஜவாஹருக்கு மிடையே பன்முறை விவாதங்கள் நடைபெற்றன; இறுதியில் அப்பா இசைந்தார். பிறகு, பள்ளிக்கூட வேலையில் சேர்ந்தேன். ஏறக்குறையப் பதினெட்டு மாதங்கள் நான் அங்கு பாடம் கற்பித்துவந்தேன். அதில் எனக்குப் பூர்ண திருப்தி. பின்னர், அரசியலில் ஈடுபட விரும்பியதால், இரண்டு வேலைகளையும் செய்ய முடியா தென எண்ணி, நான், என் வேலையை ராஜிநாமாச் செய்துவிட்டேன். அரசியல் வேலை, முழு நேர வேலையாகும். ஒத்துழையாமை இயக்கம் நடந்துகொண் டிருந்தது. என் முழு நேரத் தையும் அதில் ஈடுபடுத்த ஆவல்கொண்டேன்.

1928-ல் கல்கத்தாவில் காங்கிரஸ் நடைபெற்றது. தந்தை அதற்குத் தலைமைவகித்தார். ரயிலில், எங்களுக்கெனத் தனியாக இணைத்திருந்த வண்டிகளில் அலகாபாத்திலிருந்து நாங்கள் பெருங் கூட்டமாகக் கல்கத்தாவுக்குச் சென்றோம். அங்கு, தலைவரைக் கௌரவிக்கும்பொருட்டு, புஷ்பங்களாலும், தேசியக் கொடிகளாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்று, தலைவர் தங்குவதற்கென ஏற்பாடுசெய்யப்பட் டிருந்த ஒரு பெரிய விடுதிக்கு, காங்கிரஸ் விருந்தாளிகளாகிய எங்களை அழைத்துச் சென்றார்கள். முன் வாயிலில், சிறு பையன்கள் ஒரேமாதிரி உடைதரித்து, குதிரைகள்மீது அமர்ந்து காவல் புரிந்துகொண் டிருந்தார்கள். அவர்கள், சுறுசுறுப்பும், மிகப் பணிவுமுள்ளவர்களாய் இருந்தார்கள். அப்பா தம் காரில் வெளியில் செல்லும்பொழுதெல்லாம், ராஜாங்க முறையில், படைகள் சூழ அழைத்துச் செல்லப்பட்டார். தங்கள் பெருமையை முற்றும் உணர்ந்த தோற்றத்தோடும், நேராக நிமிர்ந்தும் குதிரைகளில் வீற்றிருந்த இளைஞர்களின் படை, முதல் அணியில் செல்லும். அடுத்து, வழிகாட்டி வண்டி ஒன்றில், கண்களைக் கவரும் உடைகளை அணிந்து, தொண்டர் படைத் தலைவரான சுபாஷ் போஸ் நின்றுகொண்டு செல்வார். பின்னல், அப்பாவுடைய வண்டி செல்லும். அக்காட்சி கண்களுக்கு விருந்து அளிக்கக்கூடியதாய் இருந்தது. இத்தகைய ஆடம்பரங்களை அப்பா வெறுத்தவராய், தம் உயிருக்கு ஆபத்து எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை என்றும், தம்மை இவ்வாறு அழைத்துச்செல்ல வேண்டாமென்றும், தம் இஷ்டப்படி போய்வர அனுமதிக்கும்படியும் உரியவர்களிடம் கேட்டுக்கொண்டார்.

இந்தக் காங்கிரஸில்தான், அப்பாவுக்கும் ஜவாஹருக்கும் ஏற்கெனவே யிருந்த கருத்து முரண்பாடுகள் முதிர்ச்சி பெறலாயின. அவர்கள் அடிக்கடி தர்க்கம் செய்துகொண் டிருந்திருக்கிறார்கள்; ஒத்துப்போகாமலும் இருந்திருக்கிறார்கள்; ஆனல், இவ்வளவு தூரம் ஒருபோதும் வந்ததில்லை. சர்வகட்சி மகாநாட்டைச் சேர்ந்தவர்கள் பரிபூர்ண சுயேச்சைக்கு ஆதரவாகயில்லாதிருந்ததால், டொமினியன் அந்தஸ்துக்கு அவர்கள் சம்மதத்தைப் பெறத் தந்தை பெரிதும் விரும்பினர். இந்த

சமாதான ஏற்பாட்டிற்கு ஜவாஹர் இணங்க வில்லை. தந்தைக்கும் மகனுக்கும் மன வேற்றுமை நீடித்தது. வீட்டிலும் வெளியிலும் இம்மன வேற்றுமை வரவர முற்றிக்கொண்டே போயிற்று. காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில், டொமினியன் அந்தஸ்துத் தீர்மானம் நிறை வேறியது. ஜவாஹர் அதை எதிர்த்தார்.

அடுத்த ஆண்டு முழுதும் இந்தியா எங்கணும் அரசியல் இயக்கங்கள் பெரிய அளவில் காணப்பட்டன. பொதுமக்களுக்கு அரசியல் அறிவு மேலும் மேலும் வளர்ச்சி அடைந்துவந்தது. மக்கள், ஒரு புதிய பலத் தோடும் உறுதியோடும் முன்னேறிக்கொண் டிருந்தார் கள். சிறிது சிறிதாக, ஜீவன் நிரம்பிய நிலையில் நடை பெற்றுக்கொண்டுவந்த இவ்வியக்கங்கள் எங்கும் காணக் கூடியனவா யிருந்தன. ஏதோ ஒரு பெரிய செயல் நடை பெறு மெனத் தோன்றிற்று. விசேஷமாக, அக்காலத் தில் மிகவும் அமைதியின்றி வசித்த, ஐக்கிய மாகாணத்துக் குடியானவர்க ளிடையே பெரிதும் காணப்பட்ட அது, உலகின் எத்தகைய சக்தியாலும் தடுக்க முடியாததாய்த் தோன்றியது. இளைஞர் இயக்கமும் நாடெங்கும் விரைவா கப் பரவத் தொடங்கியது. மிகக் குறுகிய காலத்திலேயே இந்தியாவெங்கும் இளைஞர் சங்கங்கள் நிறுவப்பெற்றன. இவர்கள், மகாநாடுகள் கூட்டி, இந்தியாவின் பூர்ண சுயேச் சைக்கு உழைப்பதாகப் பிரதிக்ஞைசெய்துகொண்டார் கள். கிராமங்களுக்குச் சென்று, குறிப்பிட்ட காலம்வரை அங்கு தங்கி, கிராம மக்களுக்குத் தொண்டுசெய் வதற்காக, அவர்கள், சிறுவர் சிறுமியர்களை அனுப்பி வைத்தார்கள். அலஹாபாத் இளைஞர் சங்கத்தின் கூட்டுக் காரியதரிசியாக நான் வேலைசெய்தேன்; என்னோடு ஒரு வங்காளி மாணவரும் காரியதரிசியாய் இருந்தார். ஜவாஹர் எங்கள் தலைவர். என்னுடன் வேலைசெய்த நண்பர், ஓர் அருமையான, துணிவுமிக்க இளைஞர்; சக்தி யும், உற்சாகமும் உடையவர். ஆனால், இரண்டு ஆண்டு களுக்குப் பின், அவர், காங்கிரஸுக்குச் செய்யவேண்டிய கடமையை மறந்து, தம் நோக்கங்களை மாற்றிக்கொண்டு வேறு துறையில் வேலை செய்ய ஆரம்பித்துவிட்டார். இவரைப் பற்றிய செய்தி ஒன்றுமே தெரிய வில்லை. அக் காலத்தில் என்னோடு உழைத்துவந்த பலர், பின்னர்

பல்வேறு துறைகளில் இறங்கிவிட்டார்கள். பலர், பொதுவுடைமைக் கட்சியினராயினர். தடியடிகளையும், ஏனைய கஷ்டங்களையும் என்னுடன் தோளோடு தோள் நின்று ஏற்று, ஒற்றுமையுடன் நீண்ட நாட்கள் தொண்டாற்றி வந்த இத்தோழர்களை இப்பொழுது நான் பார்க்கும் போது, பழைய தோழர்களைக் காண்பதுபோலல்லாமல், அயலார்களைக் காண்பதுபோலவே எனக்குத் தோன்றுகிறது.

அந்த ஆண்டு, ஜவாஹர் லாகூர் காங்கிரஸுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். தலைமைப்பதவியை மகனிடம் தந்தை ஒப்புவித்தது, காங்கிரஸ் சரித்திரத்திலேயே இதற்கு முன் எப்போதும் நடைபெற்றதில்லை; காங்கிரஸைப்போன்ற இதர உலக ஸ்தாபனங்களின் சரித்திரத்திலும் இத்தகைய நிகழ்ச்சியைக் காண்பது அரிது. அப்பாவுக்கு இது ஒரு பெருமை தரத்தக்க சம்பவமாய் இருந்தது. தம்முடைய சொத்துக்களுக்குமட்டு மன்றித், தாய்நாடு, தன் மகனொருவனுக்கு அளிக்கக் கூடிய தலைசிறந்த கௌரவமான காங்கிரஸ் தலைமைப் பதவிக்கும், தமக்குப் பின், உரிமையையடைந்த ஜவாஹரிடம், அவர் பெருமையோடும், சந்தோஷத்தோடும் தலைமைப் பதவியை ஒப்புவித்தார்.

இந்தக் காங்கிரஸ் பல விதங்களாலும் மறக்க முடியாததாய் இருந்தது. டிஸம்பர் மாதத்தில் ஒரு நாள், குளிர் மிகுந்த காலை நேரத்தில், பல்லாயிரக்கணக்கான மக்கள் ரவி நதிக் கரையில் ஒருங்கு திரண்டு, பூர்ண சுதந்திரப் பிரதிக்ஞை எடுத்துக்கொண்டார்கள். பூர்ண சுதந்திரத் தீர்மானத்தின் மூலம் நம்முடைய நாட்டின் சரிதையில், ஒரு புதிய யுகம் ஆரம்பமாயிற்று. பொறுக்க முடியாத குளிரையும் பொருட்படுத்தாமல் ஆடவர், பெண்டிர், சிறுவர் ஆகிய எல்லோரும் கூடியிருந்தார்கள். களங்கமற்ற நீல வானத்தின் கீழ் எழுந்து நின்று, அவர்கள் ஆழ்ந்த பக்தி விசுவாசத்தோடு சுதந்திரப் பிரதிக்ஞை எடுத்துக்கொண்டார்கள். ஜவாஹர் சுதந்திரப் பிரதிக்ஞை வாசகத்தைப் படித்தார்; கூடியிருந்த மக்கள் திரும்பக் கூறினார்கள்.

இவ்வாறாக நமது நாடு விடுதலை அடைய உறுதி கொண்டது. 1929, மாரிக் காலத்திலிருந்து ஒரு சிலர்

இவ்வுறுதியினின்றும் பிறழ்ந்தன ரெனினும், பல்லாயிரக் கணக்கான மக்கள், தங்கள் வாக்கைக் காப்பாற்றி, இந்தியாவின் அமைதிக்கு இன்றியமையாததான சுயராஜ்யத்தைப் பெறுவதற்காகப் போராடிப் பலவித கஷ்டங்களை அனுபவித்துவருகிறார்கள்.

காங்கிரஸ் கூட்டம் முடிவுற்றதும் நாங்கள் அலஹாபாத்துக்குத் திரும்பினோம். எதிர்காலம் தெளிவுடையதாகத் தோன்றவில்லை. பன்மடங்கு கஷ்டங்களும் துன்பங்களும் போராட்டங்களும் எதிர் நிற்பது நன்கு தெரிந்தது. எனினும், இது பற்றி ஒருவரும் மன வலிமையை இழக்கவில்லை. இதற்கு மாறாக, எதிர்காலத்தில் தங்களுக்கு நேர இருந்த இன்னல்களைத் தாங்கிக்கொள்ள முகங் கோணாது, உற்சாகமும் ஊக்கமும் கொண்டிருந்தார்கள்.

காங்கிரஸ் கூடுவதற்குச் சில மாதங்கள் முன்னரே, அப்பா எங்களுடைய பழமையான வீட்டை, நாட்டிற்கு நன்கொடையாகக் கொடுத்துவிட்டார். அப்பாவுக்கு இந்த எண்ணம் நீண்ட நாட்களாகவே இருந்தது; இது பற்றி அவர் களிப்புடையவராய் இருந்துவந்தார். முக்கியமாக ஜவாஹருக்காகவும், அவரது குடும்பம் வசிப்பதற்காகவும் என்றே கட்டப்பெற்ற புதிய வீட்டிற்குச்சென்று, நாங்கள் எல்லோரும் வசித்துவந்தோம். வீடு மிகவும் அழகியதாய் இருந்தது. அந்த வீட்டில் வசிப்பதில் அப்பா அதிகப் பெருமைகொண்டார். ஐரோப்பாவில் இருந்தபொழுது, இப்புதிய வீட்டிற்கென மின்சாரப் பொருள்களும், மற்றும் பல அலங்காரப் பொருள்களும் வாங்க அப்பா கடைக்குச் செல்லும்பொழுதெல்லாம் நானும் கூடச் சென்றிருக்கிறேன். அப்பா, இவ்வேலைகளில் களைப்படையமாட்டார். அவற்றை அவர் சந்தோஷமாகச் செய்வதைப் பார்க்க எனக்கு இன்பமாய் இருக்கும்.

ஆனந்தபவனத்தைத் தவிர வேறு எங்கும் வசிக்க அப்பா விரும்பவில்லையாதலின், இப்புதிய வீட்டிற்கும் ஆனந்தபவனம் என்றே பெயர் வைக்கவேண்டியதாயிற்று. பழைய வீட்டிற்கு சுயராஜ்யபவனம் என்று மறு பெயர் இடப்பட்டது. அடிக்கடி போலீசாரால் பூட்டப்பட்டு முத்திரைவைக்கப்பெறாத காலங்களில் எல்லாம், ஒரு பகுதியில் காங்கிரஸ் வைத்தியசாலையும், மற்றொரு பகுதி

யில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயமும் இவ்வீட்டில் இன்றும் நடைபெற்றுவருகிறது.

பொறுக்கியெடுத்த சில சீடர்களோடு, காந்திஜி 1930 மார்ச்சு 12ந் தேதி, உப்புச் சட்டத்தை உடைத்தெறிய, புகழ்பெற்ற தண்டி யாத்திரையைத் துவக்கினார். ஆர்த்தெழும் கடலேபோன்று, மக்கள் திரள் திரளாக இவரைப் பின்தொடர்ந்தனர். அன்றுவரை மறுக்கப்பட்டுவந்த நீதியையும், விடுதலையையும் புதுமையான அஹிம்ஸைப் போர் மூலம், இச்சிறிய மனிதர், தங்களுக்கு வாங்கித்தரப் போகிறார் என்று இந்திய மக்கள் எல்லோரும் ஆவலுடன் நோக்கினார்கள். உப்பின்மீது அரசாங்கத்தார் கொண்டிருந்த வெறுக்கத்தக்க ஏகபோக உரிமையை மக்கள் எதிர்த்து, ஒவ்வொரு கிராமத்திலும், நகரத்திலும் உப்புச் சட்டத்தை மீறும் இயக்கத்தில் கலந்துகொண்டனர். அலஹாபாத்தில் நாங்கள் மாபெரும் ஊர்வலத்தை நடத்திச்சென்று கூட்டம்போட்டோம். கூட்டத்தில் ஜவாஹர் சட்டத்தை மீறி முதலில் உப்புக் காய்ச்சினார்.

எதிர்பார்த்தபடி காந்திஜி தண்டியில் கைதுசெய்யப் படவில்லை; அடுத்த கிராமத்துக்கு அவரைப் போக விடுத்து, அங்கு நள்ளிரவில் கைதுசெய்தார்கள். இந்நாட்டு மக்களைத் தூங்கு மூஞ்சிகளென எண்ணி, அவர்களை, அடக்குமுறைகளால் அடக்கி ஒடுக்கிவிடலாமெனக் கருதிய வலிமை மிக்க அரசாங்கம், அம்மக்களின் எழுச்சிக்குப் பயந்து, எப்படி 'இராக்காலத்துத் திருடர்'களின் முறையைக் கையாள நேர்ந்தது என்பது, உண்மையில் வியப்பிற் குரியதே.

இதன்பிறகு ஜவாஹரும் கைதுசெய்யப்பட்டார். உடனே ஒவ்வொரு கிராமமும், நகரமும் செயலில் இறங்கின. உறுதியையும், அஹிம்ஸையையும் மேற்கொண்ட பொதுமக்களைச் சிறைப்படுத்தியும், சுட்டும், தடிகொண்டு தாக்கியும், அரசாங்கம் பயங்கர ஆட்சிபுரிந்தது. தங்களுடைய அரிய உரிமைகளைக் காப்பாற்றும்பொருட்டு, மக்கள், நேர்மையையும் பெருமையையும் இழக்காதவர்களாய், மிருகத்தனமான தாக்குதல்களையும் பொறுத்துக் கொண்டார்கள். மாண்டிசோரிப் பள்ளிக்கூடத்திலிருந்து விலகி, ஒரு தொண்டராய்ச் சேர்ந்து, அயல்நாட்டுத் துணி விற்கும் கடையில் மறியல்செய்தும், தொண்டர்களுக்கு

அணிவகுப்புப் பயிற்சி அளித்தும், ஊர்வலங்கள் நடத்தியும், மற்றும், காங்கிரஸ் கட்டளையிட்ட ஏனைய காரியங்களைச் செய்தும் நான் எனது வாழ்க்கையைக் கழித்துவந்தேன். கடுமையான வெய்யிலில், நானும், கமலாவும், அக்காளும் நாள் முழுதும் வெளியில் வேலை செய்வதை அப்பா விரும்ப வில்லை. எனினும், அவர் எங்களைக் கண்டிக்க முற்படவில்லை; நாங்கள் செய்துகொண்டிருந்த வேலையை விட்டுவிடும்படி எங்களில் யாரிடமும் கட்டாயப்படுத்தவும் இல்லை. அவர் நோய்வாய்ப்பட்டிருந்தார்; தம்முடைய குழந்தைகள் தம் பக்கத்தில் இருக்கவேண்டுமென்று விரும்பினார். ஜவாஹர் சிறையில் இருந்தார். நாங்கள் யாரும் சிறைப்படுத்தப்படுவதை அவர் விரும்ப வில்லை. அவரது உடல் நிலை, வேலை செய்வதிலிருந்தோ, இயக்கத்தை நடத்துவதிலிருந்தோ அவரைத் தடைசெய்ய வில்லை. ஆனால், சிறிதும் ஓய்வேயின்றி இராப் பகலாய் அவர் ஆற்றிவந்த கடுமையான உழைப்பு, அவரால் தாங்க முடியாததாய் இருந்தது. ஓய்வு எடுத்துக் கொள்ளுமாறு வைத்தியர்கள் கூறினார்கள். ஆனால், அரசாங்கம் வைத்தியர்களுக்கு முந்திக்கொண்டு, அவரை 1930 ஜுன் 30ல் கைதுசெய்தது. மலைவாச ஸ்தலத்திற்குச் செல்வதற்குப் பதிலாக, என் தந்தை கங்கை நதியைக் கடந்து நைனி சிறைக்குச் சென்றார்.

சிறையில் வாசம் செய்த பத்து வாரங்களுக்குள், அப்பாவின் உடல் நலம் சிறிது சிறிதாகக் குறைந்துவந்தது. அவருடைய உடம்பு துரும்புபோல் மெலிந்த பிறகுதான், பிரிட்டிஷ் அரசாங்கம் அவரை விடுதலைசெய்ய எண்ணியது. அவர் வெளியே வந்ததும், மூஸோரி என்ற இடத்திற்கு நாங்கள் எல்லோரும் சென்றோம். அங்கு, மலைக் காற்றும், மற்ற சௌகரியங்களும் களைத்து நோய் கொண்டிருந்த அவருடைய உடலுக்குச் சிறிது வலிமையை ஊட்டின. இதற்கிடையில் ஜவாஹரும் விடுதலையடைந்து அலஹாபாத்தில் வசித்துவந்தார். அடிக்கடி வந்து ஜவாஹர் எங்களைப் பார்த்துவிட்டுப் போவார். இது தந்தைக்கு உதவியாயும், ஆறுதலாயும் இருந்தது.

நீண்ட நாட்கள் சுதந்திரத்துடன் இருக்க ஜவாஹர் அனுமதிக்கப்படமாட்டாரெனத் தெரிந்தது. விரைவில் மீண்டும் அவரைச் சிறைப்படுத்துவார்கள் என்னும் வதந்தி

எங்கும் பரவியது. இதுகேட்டு, வைத்தியர்கள் யோசனை யையும் புறக்கணித்துவிட்டு, எவ்வளவு விரைவில் இய லுமோ அவ்வளவுவிரைவில் அலஹாபாத்துக்குத் திரும்பிச் செல்ல, தந்தை முடிவுசெய்தார். எனவே, அக்டோபர் 18ல் நாங்கள் முஸோரியைவிட்டுப் புறப்பட்டோம். ஜவாஹ ரும், கமலாவும் எங்களைச் சந்திக்க ஸ்டேஷனுக்கு வந்திருந் தார்கள். ஆனால், வண்டி தாமதித்து வந்ததால் ஜவாஹரால் தங்கமுடியாதுபோயிற்று. ஒரு பொதுக் கூட்டத்திற்கு அவர் போகவேண்டியதிருந்தது. கூட்டத்திற்கு, பக்கத்துக் கிராமங்களிலிருந்து ஆயிரக் கணக்கில் குடியானவர்கள் வந்திருந்தார்கள். கூட்டம் முடிந்து ஜவாஹரும், கமலாவும் வீட்டிற்குத் திரும்பிவந்து கொண்டிருக்கும்பொழுது, எங்கள் வீட்டின் முன் அவர் கள் காரை நிறுத்தி, ஜவாஹரைக் கைதுசெய்து, மீண்டும் ஒரு முறை நைனி சிறைக்கு அழைத்துச் சென்றுவிட்டார் கள். தம் மகனின் வருகையை வீணே எதிர்பார்த்து, நோயுடன் இருந்த தந்தையிடம் விடைபெற்றுக்கொள்ள வும், அவர் அனுமதிக்கப்படவில்லை.

ஏற்கெனவே எதிர்பார்த்தபடியே ஜவாஹர் கைது செய்யப்பட்டாரெனினும், அது அப்பாவுக்கு ஒரு பெரும் அதிர்ச்சியாய் இருந்தது. அரசியல் விஷயங்களைப் பற்றி யும், குடும்ப விஷயங்களைப் பற்றியும் ஜவாஹரோடு பேசத் தமக்குச் சமயம் கிடைக்குமென அப்பா நம்பி யிருந்தார்; ஆனால், அது கைகூடவில்லை. அவர் சிறிது நேரம் வரை துக்கத்தால் தலைகுனிந்தவண்ணம் இருந்தார்; ஆனால், அவரது அரிமா உள்ளம் எத்தகைய சோர்வை யும் நீண்ட நேரம் கொண்டிருக்க இடம் அளிக்கவில்லை. தம்மை ஒரு நோயாளி என்று கருதி, வைத்தியர்கள் தமக்குச் சிகிச்சை செய்துகொண்டிருக்க இனி அனு மதிக்கப்போவதில்லையென்றும், இயக்கத்தில் கலந்து கொள்ளப்போவதாகவும் தெரிவித்தார். தம்மைப் பிடித்த- மரணத்தை அளிக்கக்கூடிய - நோயை, தமது மன வலி ஒன்றையேகொண்டு அவர் அடக்க முயன்றது பெரு வியப்பிற்குரியதாகும். ஆனால், இப்படி அவர் நடந்து கொண்டது சிறிது காலத்திற்கே. புத்துயிர்பெற்ற ஊக்கத் தோடு ஒத்துழையாமை இயக்கத்தை மீண்டும் அதிதீவிர வேகத்தில் நடத்த அப்பா முயற்சித்ததை, எதுவும் தடுக்க

முடியவில்லை. நாளுக்குநாள் அவர் உடம்பு மேலும்மேலும் நலிவதாயிற்று. ஓய்வு எடுத்துக்கொண்டு கப்பற்பிரயாணம் செய்யுமாறு ஜவாஹர் அப்பாவைத் தூண்டினர். நானும் அவரோடு போவதாயிருந்தேன். ஆனல், கல்கத்தா சென்றவுடன், மேலும் அவர் பலவீனமடைந்துவிட்டதாகத் தோன்றியதால் பயணத்தை நிறுத்திவிட்டோம். கல்கத்தாவின் சுற்றுப்புறப் பகுதியில், என் தந்தையோடு நான் சில வாரங்கள் தங்கியிருந்தேன். அந்தக் காலம் நெஞ்சைப் பிளக்கும் தன்மை வாய்ந்ததாய் இருந்தது. தாம் இனிப் பிழைக்கப்போவதில்லை யென்றும், தம் நோயைக் குணப்படுத்த யாராலும் முடியாதென்றும் அவர் உணர ஆரம்பித்தார். சில மாதங்களே உயிருடன் இருக்க முடியும் எனத் தெரிந்திருந்தும், அப்பா அது பற்றிக் கவலைப்படவில்லை; அதற்கு மாருகத் தமது நோயைப் பற்றி அவர் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருப்பார். இறுதிவரை அவருடைய மனேதிடம் மிக உயர்ந்ததாகவே யிருந்தது.

கமலாவைக் கைதுசெய்துவிட்டதாக ஒரு நாள் செய்திவந்தது. கமலாவின் உடல் நிலை சரியாக இல்லையென்பதை அறிந்திருந்த என் தந்தைக்கு, இச்செய்தி மிகவும் துன்பம் அளித்தது; உடனே அலஹாபாத்திற்குப் புறப்படவேண்டுமென்று விரும்பினர். வைத்தியர்கள், இன்னும் சில நாட்கள் தங்கித்தான் போகவேண்டுமென்று நயந்து கூறி, இணங்கச்செய்தார்கள். சிறிதும் தாமதமின்றி என்னை அலஹாபாத்திற்குப் புறப்படும்படி செய்தார்; சில நாட்கள் சென்றதும், அவருடன் இருந்த மற்ற குடும்பத்தாரோடு அவரும் வந்துசேர்ந்தார். கல்கத்தாவிலிருந்து நான் திரும்பிவந்ததும், வேடிக்கையான சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. நாள்தோறும் என்னுடைய நண்பர்களும், தோழர்களும் கைதுசெய்யப்பட்டு வந்தார்கள்; அவர்களைப் பற்றிய விசாரணைகள் சிறைச்சாலையிலேயே நடைபெற்றன. விசாரணை நடைபெறுவதைப் பார்க்க விரும்புகிறவர்கள், பிறருக்கு இடையூறே செய்யும் ஆணவமுடைய ஜில்லா மாஜிஸ்ட்ரேட் ஒருவரிடமிருந்து விசேஷ அனுமதி பெறவேண்டியதிருந்தது. இளைஞர் சங்கத்தைச் சேர்ந்த அனைவரும் கைதுசெய்யப்பட்டு, அன்று பிற்பகல் விசாரணை நடைபெறுவதாக

இருந்தது; விசாரணையின்போது இருக்க அனுமதி பெறுவதற்காக, ஒரு நாள் நான் அவரிடம் சென்றிருந்தேன். என்னைப் பார்த்தவுடனே அவருடைய கண்கள் சிவந்தன. "ஏன் நீங்கள் மீண்டும் இங்கே வந்திருக்கிறீர்கள்? உங்களைப்போன்றவர்கள், ஏன் உங்கள் சொந்த வேலையில் கவனம் செலுத்தி, என்னை என் வேலையைக் கவனித்துக் கொண்டிருக்கும்படி விடக்கூடாது?" என்றார். "நான் இளைஞர் சங்கத்தின் காரியதரிசி யாகையால், அவர்களுடைய விசாரணையைப் பார்வையிடுவது என் வேலைதான்" என்று அமைதியோடு விடை பகர்ந்தேன். முதலில், எனக்கு அனுமதிதர அவர் மறுத்துவிட்டார். அன்று முழுதும் காத்திருக்கவேண்டி வந்தாலும், அங்கேயே யிருந்து அனுமதி வாங்கிக்கொண்டுதான் போவேன் என்று தெரிவித்தேன். இது அவருக்கு அதிகக் கோபத்தை உண்டாக்கியது; அனுமதிச் சீட்டு ஒன்று எழுதிக்கொடுத்தார்; கொடுக்கும்பொழுது, "இறைவன் பேரில் ஆணையிட்டுக் கூறுகிறேன், இனி இங்கு வருவதை நிறுத்திக்கொள்ளுங்கள். நீங்கள் என்னைப் புத்திதடுமாறச் செய்கிறீர்கள்" என்றார்.

நான் விசாரணைக்குச் சென்றிருந்தேன். நண்பரான ஜில்லா மாஜிஸ்ட்ரேட், மிகவும் கீழ்த்தரமான தந்திரத்தை என் விஷயத்தில் பிரயோகிப்பார் என நான் எதிர்பார்க்கவே யில்லை. என் தோழர்களிட மிருந்து விடைபெற்றுக் கொண்டு, நானும், எனது உறவினள் ஒருவளுமாக வெளியில் வந்துகொண்டிருக்கையில், ஒரு வாரத்திற்கு முன் நடந்த ஒரு சட்ட விரோதமான கூட்டத்தில் கலந்து கொண்டதற்காக, எங்கள் இருவருக்கும் கைதுசெய்யும் உத்தரவுகள் இருப்பதாகத் தெரிவிக்கப்பட்டது. இது எங்களுக்கு ஆச்சரியம் உண்டாக்கியது; ஆனால், அதைப் பற்றி நாங்கள் செய்யக்கூடியது ஒன்றும் இல்லை. என் உறவினளான சியாம் குமாரி, அரசியலில் தீவிரமாக ஈடுபட்டவளல்ல. ஒரு வழக்கறிஞர் என்ற முறையில், தொழில் பற்றிய நோக்கோடு விசாரணையைக் கவனிக்க அவள் வந்திருந்தாள். 'நேரு' என்னும் அடைமொழியே அவளைத் தண்டிக்கப் போதிய சாட்சியமாக யிருந்தது. நூறு ரூபாய் அபராதம் அல்லது ஒரு மாதம் வெறுங்காவல் என்று எங்களுக்குத் தீர்ப்பு அளித்தார்கள்.

ஒரே ஒரு விஷயந்தான் எனக்கு வருத்தத்தைத் தரக் காரணமாய் இருந்தது. தந்தை நோயாளியாய் இருந்தார்; அந்தச் சமயம் நான் சிறைக்குச் செல்லமாட்டேன் என்று நம்பியிருப்பதாக அவர் அடிக்கடி என்னிடம் தெரிவித்து வந்தார். எனவே, அவர் விருப்பத்திற்கு மாருக நாளுகவே இத்தண்டனையைத் தேடிக்கொண்டேன் என்று அவர் நினைப்பதை நான் விரும்ப வில்லை. எனினும், இது பற்றி எவ்வாறு நான் அவருக்கு விளக்கிக் கூற முடியும்? மாரிக் காலம்; சிறை அறையில் குளிர் அதிகம்; அது அசுத்த மாகவும் இருந்தது; எங்கும் பூச்சிகளும் புழுக்களும் வளர்ந்துகொண் டிருந்தன. சியாம் குமாரியும், நானும் சிறிது நேரம் வேடிக்கையாகக் காலம்போக்க முயன்ருேம்; பின்னர் வாளா இருந்தோம். அப்பாவை நினைத்துக் கொண்டு ஆற்ருெணுத் துயருடன் இருந்தேன். உண் மையை அப்பா அறிந்துகொள்ளக்கூடு மென்று நம் பினேன். பிறகு நான் தூங்கிவிட்டேன். நீண்ட நேரம் தூங்கிய பின் விழித்தேன். பேச்சுக்குரலும், சங்கிலிச் சப்தமும், கதவுகள் திறக்கப்படும் ஓசையும் எனக்குக் கேட்டன. யாரோ பேசிக்கொண்டு விளக்குகளுடன் எங் களை நோக்கி வந்துகொண் டிருந்தார்கள். எங்கள் அறைக் கதவு திறக்கப்பட்டது. சிறை அதிகாரியும், மேற்பார்வை அதிகாரியும், இரு காவலர்களும் உள்ளே நுழைந்தார்கள். எங்களுக்கு விதிக்கப்பட்ட அபராதத் தொகை செலுத்தப் பட்டுவிட்டபடியால், எங்களை விடுதலைசெய்திருப்பதாகச் சிறை அதிகாரி கூறினர். அப்பா எக்காரணங்கொண்டும் அபராதம் செலுத்த இசையமாட்டா ரென்பதை நான் அறிவேன்; ஆதலால், இச்செய்தியை என்ருல் நம்பவே முடிய வில்லை. ஆயினும், நாங்கள் விடுதலைசெய்யப்பட்டு விட்டதால், படுக்கைகளைக் கட்டிக்கொண்டு வெளியில் வந்தோம். எங்களை வீட்டிற்கு அழைத்துச் செல்ல சிறைக் காரியாலயத்தில் எங்கள் நண்பரான வழக்கறிஞர் ஒருவர் காத்திருந்தார். எங்களுடைய அபராதத் தொகை களைச் செலுத்தியது யாரென்று அவரை நாங்கள் கேட் டோம்; தம்மால் தெரிவிக்க முடியா தென்று அவர் சொல்லிவிட்டார். அபராதம் செலுத்தியது என் தந் தையோ அன்றி சியாம் குமாரியின் தந்தையோ அல்ல; தம் பெயரை வெளியிட விரும்பாத ஒரு நண்பரே அவ்

வாறு செய்தா ரென்று தெரியவந்தது. நள்ளிரவுக்குப் பின் நாங்கள் விடுவிக்கப்பட்டோம். சிறையில் பன்னிரண்டு மணி நேரங்களே இருந்தோம்.

என்னுடைய விடுதலையை ஒருவரும் எதிர்பாராத தாலும், விடுதலைச் செய்தி வீட்டில் உள்ளவர்களுக்குத் தெரியாததாலும், நான் வீட்டிற்குச் சென்ற சமயம், வீடெங்கும் ஒரே இருட்டாய் இருந்தது. அம்மாமட்டும் விழித்திருந்து இராமாயணம் படித்துக்கொண்டிருந்தாள். மறு நாள் அதிகாலையில் நான் அப்பாவின் அறைக்குச் சென்றேன். நான் வந்துவிட்டதைக் கண்டு அம்மாவைவிட அப்பா அதிக வியப்பை யடைந்தார். என்னைக் கண்டதும் அதிக மகிழ்ச்சி யடைந்தா ரென்றாலும், அபராதம் செலுத் தப்பட்டதற்காக மிகவும் வருந்தினார். முதல் நாள்—நாங் கள் சிறைப்பட்ட அன்று—அப்பா விடுத்த அறிக்கையைக் காலைப் பத்திரிகைகளில் படித்தேன். அபராதம் செலுத்த அவருக்குச் சம்மதம் இல்லாவிட்டாலும், தாங்களாவது அபராதத் தொகையைச் செலுத்தலா மல்லவா என்று, சில நண்பர்கள் அவரைக் கேட்க வந்தபோது, இயல்பாகவே மிகவும் சினந்தவராய், அபராதம் செலுத்தக்கூடா தென் பது தமது கொள்கை யாதலால், அதற்கு மாறாக அவர்கள் அதைச் செய்வதென்பது நட்பிற்கும், தம் இஷ்டத்திற்கும் நேர்மாறானதாகு மென்றும், அப்படி யாராவது செய்தால், தம்மை மிகவும் வருத்தியதாகு மென்றும், பதில் கூறினா ரென அறிந்தேன். ஆனால், தந்தையின் உடல் நிலையை எண்ணி, அவசியமானால் குற்றத்தை ஏற்றுக்கொள்ள உறுதிகொண்டு ஒரு நண்பர் அபராதத்தைக் கட்டி விட்டார். பல ஆண்டுகளுக்குப்பின்னர்தான் இந்த நண்பர் யாரென்பதை நாங்கள் தெரிந்துகொண்டோம். சிறையி லிருந்து வெளிவந்ததும், இளைஞர் சங்கத்தின் சார்பாகச் சுற்றுப்புறக் கிராமங்களில் நான் ஒரு சிறு பிரயாணத்தை மேற்கொண்டேன். திரும்பி வந்ததும், தந்தைக்கு எழுதிய கடிதத்துடன் எனக்காக ஜவாஹர் இணைத்திருந்த ஒரு சிறு குறிப்பைப் பார்த்தேன். அதில், "உனக்குப் பேழை களும், உபசாரப் பத்திரங்களும் அளிக்கப்படுவதாக நான் அறிகிறேன். உன்னிடம் எந்த அரும் பெரும் செயல் களைக் கண்டு இக்கொண்டாட்டங்கள் நடத்தப்படுகின் றன? சிறையில் சில மணி நேரங்கள் இருந்தது நிச்சயமாக

ஒரு வீரச்செயலாகாது. எவ்விதத்தும் மண்டைக்கர்வம் கொண்டுவிடாதே! ஒருவேளை, மண்டையில் ஒன்றுமே யில்லாம லிருப்பதைவிடக் கர்வ முள்ள மண்டையை யுடையவர்களா யிருப்பது நல்லதாய் இருக்கலாம் போலும்!'' என்று எழுதியிருந்தது.

குண மடைந்துவருவதாகத் தந்தை நினைத்துக்கொண் டிருந்தபோதிலும், உண்மையில் அவருடைய உடல்நிலை நாளுக்கு நாள் கேடடைந்துகொண்டே வந்தது. உடல் வளமும், மனோ வலிமையும் ஒருங்கு வாய்ந்தவரென்று நாங்கள் அவரைப் பற்றிக் கருதிவந்தோம். இந்நிலையில் சிறிது கூனியும், வீங்கிய முகத்தோடும், பலவீனத்தோடும், நோயோடும் தோற்றமளித்த அவரைக் காண, எங்களுக்கு மனங்கொள்ள வில்லை. இறுதியில், அவர் படுத்தபடுக்கை யாகிவிட்டார். அப்பொழுதுங்கூட, அவர், மரணத்திற்கு வெகு சமீபத்தி லிருக்கிறாரென்று நான் உணர வில்லை. எங்களிடமிருந்து கூற்றுவன் அவரைக் கொண்டுபோய் விடுவானென்று நினைப்பதே முடியாததாய் இருந்தது. பெரும் எதிர்ப்புக்களை வெற்றிகொண்ட அவர், கூற்றுவனையே எதிர்க்க நேர்ந்தபோதிலும், அதிலும் வெற்றி கொள்வார் என்று நான் முற்றும் நம்பியிருந்தேன். ஆனால், அவ்விதம் நடைபெற வில்லை.

*பெருமையுடைய மக்கள் மலைஉச்சியில் உள்ளவர்களைப்போல. அங்கே சூறவளி சுழன்று வீசும்; மூடுபனி யிருள் கவியும்; என்றாலும் அங்கேதான் அவர்கள் தாராளமாக மூச்சு விடமுடியும்; அங்கேதான், வேறெங்கேயும் இருப்பதைவிட வலிமை பொருந்தியவர்களாய் வாழ முடியும்.*

—ரோமெயின் ரோலண்ட்.

தந்தையின் உடல் நிலை மிகவும் அபாயமாய் இருந்த தால், சுதந்திர தினமான 1931, ஜனவரி 26-அன்று ஜவாஹரையும், அக்காளின் கணவர் ரஞ்சித்தையும், நிபந் தனை யின்றி விடுதலைசெய்தனர். பன்னிரண்டு ஆண்டு களுக்கு முன் நடைபெற்ற நிகழ்ச்சியும், அந்த நாளின் நினைவும் இன்னும் என் நினைவி லிருந்து வருத்திக்கொண் டிருக்கிறது. ஜவாஹர், ஆனந்தபவனத்திற்கு வந்ததும், நேராக அப்பாவின் அறைக்குச் சென்றார்; அப்பாவின் தோற்றம் மிக மாறுபட்டிருந்ததையும், முகம் மிகவும் சுரந்திருந்ததையும் கண்டு, பெரும் அதிர்ச்சிக்குள்ளான வராய், வாயிற்படியில் க்ஷண நேரம் தயங்கி நின்றார். பின் னர் அப்பாவைத் தழுவிக்கொள்வதற்காக நேரே அவ ரிடம் சென்றார். தந்தையும் மகனும் எவ்விதப் பேச்சு மின்றி, ஒருவரை யொருவர் மார்புறத் தழுவிக்கொண்டார் கள். தந்தையின்பிடியினின்று அகன்று. ஜவாஹர், அவரது படுக்கையில் அமர்ந்ததும் கண்களில் நீர் பெருகலாயிற்று; அதனை அடக்க முயன்றதும் வீணாகியது. ஜவாஹருக்கு ஆசி கூறும்பொழுது, அப்பாவின் முகத்தில் தோன்றிய சந்தோஷத்தையும், அவரது கண்களில் தோன்றிய ஒளி யையும் என்னால் எப்போதுமே மறக்க முடியு மென்று எண்ண வில்லை. ஆழ்ந்த அன்போடு பாராட்டிவந்த தம் தந்தையின் படுக்கையை அணுகிய சமயத்தில், ஜவாஹரின் கண்களில் தோன்றிய வேதனையையும் நான் என்றுமே மறக்க முடியாது. எங்கள் தந்தை, எங்களுக்குத் தந்தை யாகமட்டு மன்றி, எங்கள் ஒவ்வொருவரின் பெறுதற்கரிய துணைவராகவு மிருந்தார்.

தந்தை நோய்வாய்ப்பட் டிருந்த காலம் சந்தோஷ மற்றிருந்தது என்றுமட்டு மல்லாமல், எங்கள் எல்லோ

ருக்கும் கவலையையும் கொடுத்தது. இதன்றி, நான் முதன் முதலில் துக்கத்தை அனுபவித்த காலமாகவும் இருந்தது. தந்தையின் நிலை, மேலும் மேலும் சீர்கேடடைந்துவந்தது. மரணம், அப்பாவின் அருகிலேயே வந்துவிட்டதென்று அப்போதும் என்னால் நம்பவே முடியவில்லை. அதுகாறும் எங்கள் சிறிய குடும்பத்தில் மரணமே நேர்ந்ததில்லை; எனக்கு அது பற்றிய அனுபவம் சிறிதும் இல்லை.

ஜவாஹர் விடுதலையடைந்த அன்று, இந்தியா வெங்கும் பலர் விடுதலைசெய்யப்பட்டனர். அப்பா ஆபத்தான நிலையிலிருக்கிறார் என்பதைக் கேள்விப்பட்டு, காந்திஜி, மற்ற எல்லோருக்கும் முன்னதாக, பூனாவிலுள்ள ஏர்வாடா சிறையிலிருந்து நேராக அலஹாபாத்திற்கு வந்துசேர்ந்தார்; அவரைக் கண்டதும், அப்பா அளவற்ற மகிழ்ச்சிகொண்டார். காந்திஜி அருகிலிருந்தது தந்தைக்கு ஆறுதலை அளித்தது. விடுதலை பெற்ற மற்றும் பலரும் என் தந்தையைப் பார்க்க ஆனந்த பவனத்திற்குத் திரள்திரளாய் வந்தனர்; தங்கள் கடைசி மரியாதையை அவருக்குச் செலுத்த வந்தனர்போலும்! வீட்டில் விருந்தினர் நிறைந் திருந்தனர். எப்பொழுதும் சிரிக்கும் ஒலியையே கேட்டு, ஆனந்தத்தையே கண்டுவந்த எங்கள் வீட்டில், அவற்றிற்குப் பதிலாக மௌனமும், துக்கமும் எங்கும் நிலவியிருக்கக் காணும்படியாயிற்று. சிலர் மௌனமாக அங்குமிங்கும் திரிந்துகொண்டும், சிலர் வேலைபார்த்துக்கொண்டும், மற்றவர்கள் ஒன்றுந்தோன்றாதவர்களாய்ச் சுற்றிச்சுற்றி வந்துகொண்டும் இருந்தார்கள். வீடெங்கும் துக்கம் குடிகொண் டிருந்தது.

இடைவிடாது நானும், அம்மாவும், ஜவாஹரும், கமலாவும், சுவரூபும் அப்பாவைச் சூழ்ந்துகொண்டிருந்தோம். இரவில் உதவிசெய்வதற்காக, நாங்கள் ஒருவர் மாறியொருவர் அவருக்கு அருகாமையிலேயே படுத்திருந்தோம். நான் பக்கத்திலிருந்த பல சமயங்களில், குடிக்கத் தண்ணீர் கேட்கும்பொழுதெல்லாம் எனக்குத் தொந்தரவு கொடுக்கக்கூடாதென்று கருதி, அவர் மிகவும் தயவாகவே கேட்பார். அவர் இவ்வளவு நயந்து கேட்பது என் நெஞ்சைப் பிளக்கும். மரணத்தை யளிக்கும் நோய்வாய்ப்பட் டிருந்தபொழுதும், தம் நலத்தைப் பற்றிச் சிறிதும் சிந்தியாது, பிறர் நலத்திலேயே அவர் கவனம்

இருந்தது. நாளுக்கு நாள் அவர் வலிமை யிழந்து வரு வதைச் சஞ்சலத்தோடு நாங்கள் கவனித்துவந்தோம். ஆனால், அதைத் தடுக்க முடியாதவர்களாய் இருந்தோம். இறுதி வரை அவர் தமது நகைச்சுவையை இழக்க வில்லை. அடிக்கடி காந்திஜியுடன் வேடிக்கையாகப் பேசிக்கொண் டிருப்பார். அம்மாவிடம், தாம் அவளுக்கு முன்னர் செல் வதாயும், மறு உலகத்தில் அவளைச் சந்திக்கக் காத்துக் கொண்டிருக்கப்போவதாயும் கூறி, அவளை வருத்தத்திற் குள்ளாக்குவார். தவிர்க்க முடியாத மரணத்திற்கு, அவர் சிறிதும் அஞ்சியவராகக் காணப்பட வில்லை. ஆயுள் முழு தும் அவர் பல போராட்டங்கள் புரிந்திருக்கிறார்; பெரும் பாலும், அவற்றில் வெற்றியும் பெற்றிருக்கிறார். எனவே, மரணத்திற்கும் பின்வாங்காதவராய், மேலும் சில ஆண்டுகள் வாழக் கருதி, வலி யிழந்த தம் நிலையில் நின்று, அதனோடு இரவு பகலாக எதிர்த்துப் போராடினார். தம் வாழ்க்கையை எதற்கு அர்ப்பணம் செய்தாரோ, அதில், சில நல்ல பயன்களையாவது காணவேண்டுமென்ற ஆசை யோடு அவர் உயிர் வாழ விரும்பினரே யன்றி, உலக இன் பம் துய்ப்பதற்காக அல்ல. ஆனால், அவரது தைரியம் எல் லாம் பயனற்றுப்போய், இறுதியில் மரணமே வெற்றி கொண்டது.

ஒரு நாள் காந்திஜியோடு பேசிக்கொண் டிருக்கும் பொழுது, அகில இந்தியக் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அங்கத்தினர்களில் பலரும் ஏற்கெனவே அங்கு வந்திருப் பதனால், சுயராஜ்யபவனத்தில் காரியக் கமிட்டிக் கூட்டம் ஒன்று நடைபெற வேண்டும் என்ற விருப்பத்தைத் தெரி வித்தார். அவருடைய கடைசி வார்த்தைகள் வருமாறு: "இந்தியாவின் தலைவிதியை, சுயராஜ்யபவனத்தி லிருந்து நிர்ணயப்படுத்துங்கள். அப்படி நிர்ணயிப்பதையும் என் முன்னிலையிலேயே நிர்ணயியுங்கள். என்னுடைய தாய் நாட்டின் தலைவிதியைப் பற்றி முடிவாக நிர்ணயிக்கும் ஏற்பாடுகளில் நானும் கலந்துகொண்டவனாக யிருக்க வேண்டும். நான் சாகவேண்டிவந்தால், விடுதலை பெற்ற இந்தியாவின் மடியிலேதான் சாகவேண்டும். என்னுடைய கடைசித் தூக்கத்தை அடிமை நாட்டிலன்றி, சுதந்திர நாட்டிலேயே தூங்கச்செய்யுங்கள்."

தந்தையின் நிலைமை வரவர அதிக வருத்தத்தைத் தரக்கூடியதாக விருந்தபடியால், தந்தையை லட்சுமண புரிக்கு அழைத்துச்சென்று, 'எக்ஸ்ரே' சிகிச்சை அளிக்க வேண்டுமென்று வைத்தியர்கள் கருதினார்கள்; ஆனால், அப்பா அங்கு செல்ல விரும்பவில்லை. தமக்கு இறுதிக் காலம் அணுகிவிட்டதென்பதை, வைத்தியர்களைக் காட்டிலும் அவர் நன்கு அறிந்தார். பெருமையோடு கட்டிப் பிரியத்துடன் வாழ்ந்துவந்த 'ஆனந்தபவனத்திலேயே தாம் சாகவேண்டுமென விரும்பினார். ஆனால், வைத்தியர்கள் வற்புறுத்தினார்கள்; காந்திஜியும் வைத்தியர்கள் கருத்தை ஒப்புக்கொண்டார். பின், அதை மறுப்பதற்கு வலிமையில்லாதவராய், அப்பா, 1931, பிப்ரவரி 4-ம் நாள், காரில் லட்சுமணபுரிக்கு அழைத்துச்செல்லப்பட்டார். நீண்ட பிரயாணம்செய்துங்கூட, மறு நாட் காலை, தந்தை சிறிது நலமடைந்தவராகக் காணப்பட்டார். ஆனால், அன்று மாலை அவர் நிலைமை மிகவும் கேவலமாகிவிட்டது. அவரால் மூச்சுவிட முடியாமற்போயிற்று; பிராண வாயு கொடுக்கப்பட்டது. தம்மைச் சுற்றியுள்ள ஒவ்வொன்றைப் பற்றியும் அவருக்கு அப்பொழுதும் பிரக்ஞை இருந்துவந்தது. மாலை சுமார் 5-மணிக்கு, டாக்டர் அன்சாரி, டாக்டர் ஜிவராஜ் மேத்தா, மற்றும் சில வைத்தியர்களோடு, தந்தைக்குச் சிகிச்சை செய்துகொண்டிருந்த டாக்டர் பிதன்ராய், தந்தையின் அறைக்குள் வந்து, அவருக்குப் பின்புறம் இருந்து, அவரைத் தாங்கிக் கொண்டிருக்குமாறு என்னிடம் கூறினார். நான் அவ்வாறே செய்தேன். வைத்தியர்கள் விடைபெற்றுச் சென்றார்கள். என் தந்தைதான் என்னைப் பக்கத்தில் இருக்கும்படிசெய்ய விரும்பினாரா, அல்லது வைத்தியர்களாகவே அப்படிச் சொன்னார்களா என்பது எனக்குக் கடைசிவரை தெரியாது. சில நிமிஷங்களில் தந்தை ஏதோ ஒன்றைத் தேடுவதாகத் தெரிந்தது. நான் குனிந்து, தங்களுக்கு என்ன வேண்டும் என்று கேட்டேன். அவரால் பேசமுடியவில்லை. சுரப்புடன் இருந்த தமது கைகளால் முயன்று என் முகத்தைப் பிடித்துக்கொண்டு, உருத் தெரியாதபடி வீங்கியிருந்த தமது இதழ்களால், கடைசிமுறையாக விடைபெற்றுக் கொள்பவர்போல் என் முகமெங்கும் முத்தமிட்டார். நான் பல்லைக்கடித்துக்கொண்டு, கண்களில் பெருகிய நீர்

அவர் கையில் விழாமலும், துக்கத்தால் வாய்விட்டரற்ருமலும், மனிதத் தன்மைக்கு அப்பாற்பட்ட ஒரு சக்தியோடு என்னை அடக்க முயன்றேன்; முடியாதுபோனதால் அவர் பிடியிலினின்றும் விலக முயன்றேன். அறிவு நுட்பமும், எளிதில் உணருந் தன்மையும் இயல்பாகவே பொருந்திய என் தந்தை, என் நிலைமையை யூகித்தவராய், தாம் பிடித்த பிடியை நெகிழவிடாமல், கஷ்டத்தோடு நாக்குளறி, "என் சின்னஞ் சிறிய மகள் எப்பொழுதும் தைரியத்தோடு இருத்தல் வேண்டும்" என்று மொழிந்தார். என்னல் இதைத் தாங்க முடியவில்லை. கண்களை மூடிக்கொண்டு வெளியே ஓடி விம்மி விம்மி அழுதேன். இரவு நெருங்க நெருங்க அவருடைய நிலைமை மோசமாகிக்கொண்டுவந்தது. அவரது அறைக்குள் மறுபடியும் செல்லச் சகியாதவளாய் மற்ற சிலரோடு அறைக்கு வெளியே இரவு முழுதும் உட்கார்ந் திருந்தேன். துக்கத்தாலும், களைப்பாலும் அலுத்துப்போய், பொழுது விடியும் தருணத்தில், நானும், என் அக்காளும், கமலாவும், மற்றும் அங்கு தங்கியிருந்த எங்கள் உறவினர்களும் தூங்கிப்போய்விட்டோம். சரியாக ஒரு மணி நேரங்கூடத் தூங்கியிருக்கமாட்டோம், அப்பொழுது என் பெரிய தாயார் எங்களை எழுப்பி, அப்பா இறந்துவிட்டார் என்று தெரிவித்தாள். தந்தை இறந்தபொழுது அம்மாவும், ஜவாஹரும், வைத்தியர்களுமே அவர் பக்கத்தில் இருந்தார்கள்.

நாங்கள் ஒவ்வொருவராக அறைக்குள் நுழைந்தோம். படுக்கையில் உறங்கிக்கொண் டிருப்பவர் போல அவர் படுத்திருந்தார். உயிரோ டிருந்த காலத்தில் இருந்ததை விட, அப்பொழுது அவர் முகம் அமைதியோடும், சாந்தத்தோடும், கம்பீரத்தோடும் விளங்கிற்று. என் அருமைத் தந்தை இறந்துபோனு ரென்று நம்ப என் உள்ளம் மறுத்தது. அப்பாவின் பின்புறத்தி லிருந்தவண்ணம், ஜவாஹர், தந்தையின் தலையைத் தடவிக்கொடுத்துக் கொண்டிருந்தார். கண்களில் நீர் ததும்பி நின்றது. நிகழ்ந்த விஷயத்தையே என்னல் நம்ப முடியவில்லை யாதலால், என்னுடைய கண்களி லிருந்து நீர் வெளிவரவில்லை. அப்பொழுது காந்திஜி அறைக்குள் வந்து, நேராகத் தந்தையின் படுக்கை அருகே சென்ருர்; நாங்கள் எல்லோரும் சூழ்ந்துகொண் டிருந்தபொழுது, ஏதோ பிரார்த்தனை

செய்பவர் போலவும், தம் கடைசி வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்பவர் போலவும், தலைகுனிந்து, கண்களை மூடிக்கொண்டு சிறிது நேரம் நின்றார்; பிறகு, இறந்தவுடன் ஒரு முறை வாய்விட்டலறியதன்றி, தாங்க வொண்ணாத் துக்கத்தால் மௌனமாக ஒரு மூலையில் உட்கார்ந்திருந்த எனது தாயை நோக்கிச் சென்று, அவள் அருகில் அமர்ந்து, அவள் தோளின்மேல் கையை வைத்துக் கொண்டு, "மோதிலால்ஜி இறக்கவில்லை; அவர் நெடுங்காலம் வாழ்வார்" என்று கூறினார். அவர் கூறிய சொற்கள் என்னைத் தாக்கி, உண்மையை உணர்த்தின; என் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாய்ப் பெருகிற்று.

தந்தை இறந்த செய்தி நாடெங்கும் பரவிற்று. இச் செய்தி லட்சுமணபுரியிலும் காட்டுத் தீபோல் பரவ, தங்கள் தலைவரைக் கடைசி முறையாகத் தரிசனம்செய்யும் பொருட்டு, நாங்கள் தங்கியிருந்த காலகங்கர் அரண்மனைக்கு மக்கள் ஆயிரக்கணக்கில் கூட்டம் கூட்டமாய்த் திரண்டுவந்தார்கள்.

தந்தையின் உடல் புஷ்பங்களில் புதையுண்டு இருந்தது. அதிகாலையிலிருந்து நண்பர்களும், உறவினர்களும், பிறரும் எண்ணற்றவாறு அறைக்குள் மௌனமாகக் குழுமி, தங்கள் கடைசி மரியாதையைச் செலுத்திவிட்டுச் சென்றவண்ணமாய் இருந்தார்கள். படுக்கையருகில் இருந்துகொண்டு மௌனமாக இவையனைத்தையும் காந்திஜி பார்த்துக்கொண்டிருந்தார். அப்பாவோடு அவரது பெருமையிலும், சந்தோஷத்திலும், கஷ்டத்திலும், யாவற்றிலுமே இணைபிரியாது பங்குகொண்டிருந்த என் அன்னையும், திக்கற்றவளாய் பரிதபிக்கத்தக்க தோற்றத்தோடு, அவரது படுக்கையருகில் இருந்தாள். ஒரே இரவில் கிழத்தன்மை எய்திவிட்டதாகக் காணப்பட்ட ஜவாஹர், மெலிந்து தேய்ந்த உருவத்தினராய்ப் பக்கத்தில் நின்றுகொண்டிருந்தார். இம்மாபெரும் துக்க சம்பவத்தினிடையேயும் ஜவாஹர் முகத்தில், அமைதியும், சாந்தமுமே நிலவின.

வீட்டிற்கு வெளியே கூட்டம் மேலும் மேலும் பெருகிக்கொண்டிருந்தது. ஒவ்வொருவரது முகத்திலும் துக்கமும், துன்பமுமே குடிகொண்டிருந்தன; கண்ணீர் வடிக்காத கண்களே யில்லை. எங்கும் மௌனமே குடிகொண்

டிருந்தது. நாங்கள் அனுபவித்த பிரிவுத் துக்கத்தைச் சொல்வதற்கு வார்த்தைகளே யில்லை.

தந்தையின் உடல், மோட்டாரில் அலஹாபாத்துக்குக் கொண்டுவரப்பட்டது; உடல் முழுதும் தேசியக் கொடியால் போர்த்தப்பட்டிருந்தது; ஜவாஹர் அருகில் அமர்ந்திருந்தார். நானும், கமலாவும், சுவரூபும் மற்றவர்களுக்கு முன்னதாக வீட்டுக்குச் செல்ல எண்ணி, முன்னதாகவே அலஹாபாத்துக்குக் காரில் சென்றுவிட்டோம். அலஹாபாத்துக்கு வெகு சமீபமாக நாங்கள் வந்தபொழுது, சாலை நெடுகப் பல மைல்கள் தூரம் வரை ஆயிரக்கணக்கான மக்கள் கூடி நின்றார்கள். வீட்டை நெருங்க நெருங்கக் கூட்டத்தின் எண்ணிக்கை பெருகிக் கொண்டேயிருந்தது. ஆனந்தபவனத்தி லிருந்து நான்கு மைல்கள் தூரத்திற்கு அப்பால், கூட்டம் பிரம்மாண்டமாக யிருந்தது; மேலும் மேலும் பெருகிக்கொண்டு மிருந்தது. கூட்டத்தினூடே எங்கள் கார் மெதுவாகச் சென்றபொழுது, நாலா பக்கங்களி லிருந்தும் அவர்கள் தங்கள் அநுதாபங்களைத் தெரிவித்துக்கொண்டார்கள். தந்தைக்குத் தங்கள் மரியாதையை இறுதியாகச் செலுத்திக் கொள்ளும்பொருட்டு, பல மைல்களுக்கு அப்பாலிருந்து வந்து, திரண்டு நின்ற எண்ணிறந்த ஜனசமுத்திரத்தின் காட்சி எங்கள் மனத்தைப் பிளந்தது. நாங்கள் வீடு வந்து சேர்ந்தோம், வீடு வீடாக யில்லை. பெறற்கரிய ஒரு ஜீவ சக்தியை அது இழந்துவிட்டது. எங்கள் தோட்டம் முழுதும் எள் விழ இடமின்றி ஜனக்கூட்டம் நிரம்பியிருந்தது. என்றும் பெருமையோடு பறந்துகொண்டிருந்த தேசியக் கொடி, இறந்த தந்தைக்கு மரியாதை செலுத்தும்பொருட்டு, நகரில் மற்றும் பல இடங்களில் பறந்துகொண்டிருந்த கொடிகளைப்போல் தாழ்ந்து பறந்துகொண்டிருந்தது. இறுதியில், லட்சக்கணக்கான மக்கள் தேம்பும் சப்தம் கேட்டது; அப்பாவின் உடலைக் கொண்டுவந்த கார் பெரிய இரும்புக் கதவின் உள்ளே வந்தது. லட்சுமணபுரியி லிருந்து எல்லோரும் வந்துவிட்டார்கள். இறுதிச் சடங்குகளுக் குரிய ஏற்பாடுகளெல்லாம் தயாரா யிருந்தன. ஆனால், காந்திஜியும், அம்மாவும் வந்த மோட்டார் வந்துசேர வில்லை. இது பெருங் கவலையை யுண்டாக்கிற்று. என்ன நிகழ்ந்தது என்று

பார்த்துவர, பல கார்கள் அனுப்பப்பட்டன. ஏறக்குறைய ஒரு மணி நேரம் கழித்து அவர்கள் வந்துசேர்ந்தார்கள். பாதையில் அவர்களுக்கு ஒரு விபத்து ஏற்பட்டதாகத் தெரியவந்தது. லட்சுமணைபுரி - அலஹாபாத் சாலை நல்ல நிலைமையில் இல்லை; எங்கள் மோட்டார் டிரைவர், அழுது கொண்டே வண்டியை ஓட்டிவந்ததால், சாலையின் நடுவிலிருந்த ஒரு பெரும் பள்ளத்தை அவன் பார்க்கவில்லை. எங்களுடைய பெரிய 'டிலேஜ்' கார், குழியில் இறங்கியதும், தலைகீழாகப் புறண்டுவிட்டது; தெய்வீகமாய் வண்டியின் கதவு திறந்துகொண்டது; அம்மாவும், காந்திஜியும் வெளியே எறியப்பட்டார்கள்; இருவருக்கும் காயங்கள் ஏற்படவில்லை; காரும் பழுதடையவில்லை; ஆனால், டிரைவருக்குமட்டும் சொற்ப காயங்கள் ஏற்பட்டன.

அம்மா, வீடு வந்துசேர்ந்ததும், சடங்குகளெல்லாம் நிறைவேறின. பின்னர், மாபெருங் கூட்டம் சூழ்ந்துவர, புஷ்பங்களால் அலங்கரிக்கப்பெற்ற பாடைமீது அப்பாவை வைத்து, கங்கை நதிக் கரைக்கு எடுத்துச்சென்றனர். அப்பெருங் கூட்டத்தில், கண்களில் நீர் ததும்பாத மனிதரைக் காணமுடியவில்லை; வல்லமையில் சிங்கத்தை யொத்த என் தந்தையின் மரணத்தைக் கண்டு, உண்மையோடு வருந்தாத மனிதரையும் காண முடியவில்லை. பெருந் திரளான மக்கள், அப்பாவை இவ்வளவு அருமையோடும் பெருமையோடும் பாராட்டுவதைக் கண்டு புண்பட்ட எங்கள் மனத்திற்குச் சிறிது ஆறுதல் ஏற்பட்டது. மீளாத பிரயாணத்தை மேற்கொண்ட அருமைத் தந்தையை, எங்களிடமிருந்து எடுத்துச் சென்றபொழுது, இறுதி வணக்கத்தைத் தெரிவித்துக்கொண்டோம். அன்றிரவு தனிமையில் நான் நந்தவனத்தில் உலாவிக்கொண்டிருக்கையில், மாறுதல் எதுவும் விளைந்திருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. வானம் மாசற்றிருந்தது; நட்சத்திரங்கள் என்றும்போல் பிரகாசமாயும், அழகாயும் விளங்கின. எனினும், என்னளவில், உலகமே என் காலடியில் நசுங்கி விழுந்ததுபோன்று இருந்தது.

அலஹாபாத்தின் சரித்திரத்திலேயே எக்காலத்திலும் இத்தகைய உணர்ச்சிமிக்க மாபெரும் பிரேத ஊர்வலம் நடந்ததில்லை. இறுதிச் சடங்குகளை நிறைவேற்ற,

கங்கைக் கரையில் - சங்கம ஸ்தலத்தில் - ஆண்களும், பெண்களும், குழந்தைகளுமாகச் சுமார் நூறாயிரம் மக்கள் கூடியிருந்தார்கள். கண்ணுக்கு எட்டிய தூரம் வரை, தலையில் எதையும் அணியாது, மௌனமாகக் காத்திருந்த ஜன சமுத்திரமே காணப்பட்டது. ஊர்வலத்தில் கலந்து கொள்வதற்காகப் பக்கத்துக் கிராமங்களிலிருந்து ஏராளமான குடியானவர்கள் வந்திருந்தார்கள்.

இறுதிச் சடங்குகள் நடைபெற்ற பின்னர், காந்திஜியும், பண்டித மதன் மோகன் மாளவியாவும் அங்கு கூடியிருந்த பெருங் கூட்டத்தில் பேசினார்கள். பாபு பேச எழுந்ததும், ஆயிரக்கணக்கான மக்களின் தொண்டைகளிலிருந்து அழுகை ஒலி எழுந்தது; பின்னர், மூச்சுவிட்டாலும் கேட்கக் கூடிய அளவு நிசப்தம் நிலவியது. "கங்கையும் யமுனையும் கலக்கின்ற இவ் ஆற்றங் கரையில், நமது மாபெரும் வீரரது சாம்பலின் முன்னிலையில், இங்கு கூடியிருக்கும் ஒவ்வொரு ஆணும் பெண்ணும், இந்தியா விடுதலை யடையும் வரை ஓய்வு எடுத்துக்கொள்ளப்போவதில்லையென்று பிரமாணம் செய்துகொள்ள வேண்டும். இதுதான் மோதிலால்ஜியின் மனத்திற்குகந்த காரியம். இதற்காகவே அவர் தம் உயிரைக் கொடுத்தார்" என்று காந்திஜி விரிவாக மனம் உருகும்படி பேசினார். மக்கள் எல்லோரும் கண்ணீர்வடித்தனர்.

மக்கள் தங்களுடைய வேற்றுமைகளைக் குழி தோண்டிப் புதைத்துவிட்டு, தங்கள் தலைவர் செய்த தியாகங்களை நினைந்து, இந்தியாவின் விடுதலைக்கு ஒற்றுமையுடன் பாடுபட வேண்டும் என்று பண்டித மதன் மோகன் மாளவியா எடுத்துரைத்தார்.

இந்தியா முழுதும் இரண்டு நாட்கள் துக்கம் கொண்டாடப்பட்டது. பிறர் தூண்டுதலின்றி ஒவ்வொரு கிராமத்திலும் நகரத்திலும் உள்ள கடைகள், பள்ளிக் கூடங்கள், கல்லூரிகள் ஆகியவை மூடப்பெற்றன. உலகெங்கு மிருந்து நூற்றுக்கணக்கில் அநுதாபத் தந்திகள் வந்துகுவிந்தன.

தந்தை இறந்ததும் காந்திஜி விடுத்த அறிக்கையில் கூறுவதாவது: "ஒரு விதவையினுடைய நிலைமையைவிட என் நிலைமை மோசமாக விருக்கிறது. கணவர் உயிரோடிருந்த காலத்தில் உண்மையுடன் தமது வாழ்க்கையை

நடாத்திச்சென்ற ஒரு விதவை, தம் கணவரின் தகுதிகளையும், பெருமைகளையும் தமக்கு உரித்தாக்கிக்கொள்ள முடியும். ஆனால், நான் உரிமையாக்கிக்கொள்ள எதுவும் இல்லை. மோதிலால்ஜி இறந்துவிட்டதன் காரணமாக நான் இழந்ததை என்றும் பெற முடியாது."

என் தந்தை உடற்கட்டுடையவர்; பார்வைக்கு மிக உயரமாகத் தோன்றினாரெனினும், நடுத்தர உயரமானவர்தான். அழகிய - அறிவுக் களை பொருந்திய - முகத்தையுடையவர்; பிறர் உள்ளத்தைத் துருவிப் பார்க்கும் விழிகளையுடையவர்; வணங்காத தலையையுடையவர்; உள்ளத்தைக் கவரும் தோற்றம் படைத்தவர். நான் பிறந்தபொழுதே அவருக்குத் தலை பிறிது நரைத்துவிட்டது. எனது பதினைந்தாவது வயதில், அவருடைய தலை முற்றிலும் வெள்ளிக் கம்பிபோல் நரைத்துவிட்டது; இது அவருக்கு மிகவும் பொருத்தமாகவே யிருந்தது. பார்வைக்குக் கடுமையானவர் போன்று காணப்படுவார்; பெரும்பாலோர் அவரிடம் நெருங்க அஞ்சுவார்கள்; ஆனால், வெளித்தோற்றத்தில் கரடுமுரடாய்க் காணப்பட்டாலும், தங்கமான உள்ளமும், இளகிய மனமும், பிறர் சுக துக்கங்களை யறிந்து ஈடுபடும் இதயமும் உடையவர் என்பதையும், வழியறிந்துகொண்டவர்கள் எளிதில் வெற்றிகொண்டுவிடக் கூடிய நிலையில் உள்ளவர் என்பதையும் அவர்கள் அறியமாட்டார்கள். குழந்தைகளிடம் அவர் அதிகப் பிரியத்துடன் இருப்பார். குழந்தைகளும் அவரிடம் அன்போடு செல்லும். அவரைக் கண்டவுடன் அவர்மீது அன்புகொண்டு அவரிடம் அணுகாத குழந்தையை நான் கண்டதேயில்லை. தம் சொந்தக் குழந்தைகளை, அவர் அளவுகடந்த அன்போடு பாராட்டிவந்தார். ஆனால், அவர்களிடத்தும் இதை வெளிப்படுத்திக்கொள்ள மாட்டார். நான் குழந்தையாய் இருந்தபொழுது, அவரிடத்து மிகவும் பிரியமுடையவளாய் இருந்தும், அவரைக் கண்டால் நடுங்குவது வழக்கம். பெரியவளாகி அவரை நன்கு அறிந்துகொண்டதும், எனக்கு இருந்த அச்சம் அறவே நீங்கிவிட்டது. ஆண்டுகள் செல்லச் செல்ல நாங்கள் நெருங்கிய நண்பர்களானோம்; நான் பெற்ற சிநேகிதர்களுக்குள்ளே அவர் நிகரற்றவராக இருந்தார். அவருடைய வெற்றிகொள்ளும் தோற்றமும்

ராஜ அம்சமும், அவர் இருந்த எந்தக் கூட்டத்திலும் அவரை ஒரு தனி மனிதராகவே காண்பித்தன. அவருடைய குழந்தைகளாகிய எங்களுக்கும், அவரால் பராமரிக்கப்பட்டவர்களுக்கும், அவர், ஒரு வலிமையின் சிகரமாய் இருந்தார். இதை நாங்கள் முழுதும் உபயோகப் படுத்திக்கொண்டோம்.

தம் குடும்பத்தாரோடு இருக்கும்பொழுது, என் தந்தை மிகவும் சந்தோஷமாய் இருப்பார். ஆனால், இவ்வாறு தனியாக இருக்க நாங்கள் மட்டும் விடப்படுவது அரிது. மாலை வேளைகளில் நண்பர்களும், உறவினர்களும் வந்துவிடுவார்கள்; அப்பொழுதுதான் அவர்களோடு அளவளாவுவதற்கு அப்பாவால் முடியும். பகல் முழுதும், சில சமயங்களில் இரவில் வெகு நேரம் வரையுங்கூட அவர் வேலை செய்துகொண்டிருப்பார். களைப்பு ஏற்படும் படியாக நாள் முழுதும் உழைத்த பின்னர், என் தந்தை உணவுகொள்ளும் காட்சி இன்னும் என் நினைவில் தெளிவாக இருக்கின்றது. தம் அன்பிற் குரியவர்களுட னிருந்து உணவுகொள்ளும்பொழுது, அவர் ஒவ்வொருவரையும் பார்த்துச் சிரித்துக்கொண்டும், விளையாடிக்கொண்டும், தமாஷ் செய்துகொண்டும் இருப்பதைப் பார்த்தால், வெளியில் உள்ளவர்கள் மிகவும் கடுமையானவர் என்று எண்ணுவதற்கு நேர்மாருக இருக்கும். புதிய முறையில் ஆடை அணிவது, புதிய முறையில் தலை பின்னிக்கொள்வது உட்பட எங்களைப் பற்றிய ஒவ்வொரு சிறிய விஷயத்தையும் அவர் கவனிப்பார். பிறர் மனத்தில் நிகழும் எண்ணங்களைக் கண்டறிந்துகொள்வதில் அவருக் கிருந்த ஆற்றல் தெய்விகமானது. சில சமயங்களில் மிக அபூர்வமாக எங்களில் யாரையாவது ஒருவரை அவர் புகழ்ந்துபேசுவார். ஆனால், செல்லம் பாராட்டுவது அவருடைய வழக்கமன்று. அம்மாவை அவர் புகழும்போதும், - குழந்தைகள் பக்கத்தில் இருப்பதையும் மறந்து - அவளுடன் அவர் கழித்த இன்ப நாட்களைக் குறித்து மிகவும் அநுபவித்துப் பேசும் போதும், அம்மாவின் முகம் சந்தோஷத்தால் பூரித்துச் சிவந்து காணப்பட்டது என் நினைவில் இருக்கிறது. இத்தகைய நினைவுகளெல்லாம் மறக்கக்கூடியன வல்ல; எனவே, அவற்றை நான் என்றும் நினைவில் கொண்டிருக்கிறேன். வாழ்க்கை முழுதும் தோழர்களைப் போன்று

வாழ்ந்தும், ஆண்டுகள் செல்லச் செல்ல அன்பும் உணர்வும் மிகைப்பட்டுச் சுக துக்கங்களைச் சேர்ந்து அநுபவித்தும் கறைபடாது வாழ்ந்த நரை முதுகுரவர் இருவரையும் பார்த்துக்கொண் டிருப்பதைக்காட்டிலும் வேறு அழகுள்ள காட்சி எனக்கு உலகில் வேறு எதுவு மில்லை.

வேலைகளெல்லாம் முடிந்த பிறகு, மாலை நேரங்களில் தான் அப்பா மிகவும் சந்தோஷத்தோடு இருப்பார். இரவு உணவுகொள்வதற்கு முன்னர், அவருக்கு இரண்டு மணி நேரம் ஓய்வு உண்டு. உணவு முடிந்ததும் மீண்டும் வேலை செய்யத் தொடங்கிவிடுவார். மாலை நேரத்தில் ஏறக்குறைய ஆறரை மணிக்கு அவருடைய நண்பர்கள் ஒவ்வொருவராய் வந்துகொண்டிருப்பார்கள் ; விரைவில் இருபது முப்பது பேர்களடங்கிய கூட்டம் கூடி விடும். புல் தரையில் நாற்காலிகளும் மேஜைகளும் பரப்பப்படும். அங்கே, அறிவும், நாவன்மையும் படைத்த தம் பேச்சாலும், சிரிப்பாலும், வேடிக்கைகளாலும் தம்முடைய நண்பர்களையும், தம்மைப் பாராட்டுபவர்களையும் நாள்தோறும் மகிழ்வித்துக்கொண்டு, சிறிய நீதி மன்றம் ஒன்றை நடத்திகொண் டிருப்பார். இத்தகைய கூட்டங்களில், பெரும்பாலும் அப்பாவே தலைமை வகித்து, பழங் கதைகளையும், புது நிகழ்ச்சிகளையும் கூறி, எல்லோரையும் மெய்மறந்திருக்கும்படி செய்துகொண் டிருப்பார். எப்பொழுதாவது ஒரு முறை, மற்றவர்களுக்கும் இக்கூட்டத்தில் முதன்மை கிடைப்ப துண்டு.

என் தந்தையை ஒரு சிலரே நன்முக அறிவார்கள். முதன்முறையாக அவரைக் காண்பவர்கள், அவர் கடுமையானவரென்றும், எதற்கும் இணங்காதவரென்றும், நெருங்கிப் பழக முடியாதவரென்றும் எண்ணுவார்கள். சில சமயங்களில் அவர் அப்படித்தான் இருப்பார். எனினும், அவரை நன்முக உணர்ந்தவர்கள் அவர் எவ்வளவு விரும்பத்தக்கவர் என்பதை அறிவார்கள். தலைசிறந்து விளங்கும் தோற்றத்தையும், கவர்ச்சியையும் உடையவராய் அவர் இருந்தார். எத்தகைய கூட்டத்தில் அவர் இருந்தபோதிலும், கூட்டத்தின் நடுநாயகமாகத் திகழ்ந்தார். சமூகக் கூட்டங்களிலும்கூட, இளைஞர்களில் பலரும் கண்டு அதைரியப்படக் கூடியவாறு எல்லோரது அன்பிற்கும் பாத்திரராக இருந்தார். அவர் சற்று

யதேச்சாதிகாரப் போக்குடையவர்; அதிகார தோரணை யும், தற்பெருமையும் வாய்ந்தவர்; அவரை அறிந்தவர்கள், அவருக்கு மரியாதை அளிக்கக்கூடிய கம்பீரமும், பெருமை யும் உடையவர்; அற்ப குணம் என்பதை அவரிடத்தில் ஒரு சிறிதும் காணமுடியாது; உடலிலும் உள்ளத்திலும் உறன்பெற்ற அவரை, ஒப்பார் இல்லையென்பதே என் கருத்து. நான் பல நாடுகளில் சுற்றுப்பிரயாணம்செய் திருக்கிறேன்; பல துறைகளிலும் தலைசிறந்த ஆண்களை யும், பெண்களையும் சந்தித்து, அவர்களைப் பெரிதும் பாராட்டியிருக்கிறேன்; ஆனால், தந்தையைப்போல் எல்லா நற்குணங்களும் ஒருங்கே வாய்ந்த ஒருவரை நான் கண்டதேயில்லை. அவர்மீது நான் கொண்டுள்ள பேரன் பாலும், பெரு மதிப்பாலும் இக்கருத்து, ஒருக்கால் பாரபட்சமானதாகவும் இருக்கலாம்.

அவரிடத்தில் ஒரே ஒரு குறைதான் இருந்தது; அது தான் கோபம். ஆனால், இக்குறை பரம்பரையாக வந்த ஒரு குறை; எங்களில் யாருமே இதனின்று விலகியவர்கள் இல்லை. அவரிடம் ஒரு பலவீனமும் இருந்தது; அதுதான் அவர் தம் குழந்தைகள்மீது வைத்திருந்த அளவற்ற அன்பு. அன்பில்லாத, கண்டிப்பு மிகுந்த தந்தையென்று பலர் அவரைக் கருதினார்கள். ஆனால், கடுமையான அவ் வெளித்தோற்றத்திற்குள்ளே, குடும்பத்தின்மீது பேரன்பு நிறைந்த உள்ளம் இருந்தது. ஜவாஹர் குடும்ப விஷயங் களில் கருத்தைச் செலுத்தாதவராய் இருந்தமையால், குடும்பப் பொறுப்புக்கள் அனைத்தையும் அப்பாவே தாங்கிவந்தார். அவர் உள்ளத்தை எந்தவிதமான கவலைகள் வருத்தின என்பதை நாங்கள் அறியமாட் டோம். ஏனெனில், அவர் எவற்றையும் பற்றி எங்க ளிடம் தெரிவித்து, எங்கள்மீது பொறுப்பு எதையும் சுமத்துவதில்லை. அப்பா உயிரோடிருந்த காலத்தில், எங்களைப் பாதுகாக்கவும் போஷிக்கவும் அவர் இருக் கின்றார் என்ற எண்ணத்தில் மிகவும் மகிழ்ச்சியுடையவர் களாய், சுயேச்சையுடன் வாழ்ந்துவந்தோம். அவருடைய அன்பின் துணையால், கவலையென்பதும், சஞ்சலமென்ப தும் என்ன என்றே தெரியாதவர்களாய் இருந்தோம். அவர் இருக்கிறார் என்ற நினைவே, எங்களுக்கு ஆறுதல் அளித்துவந்தது. அவர், வலிமையின் சிகரமாயும், வாழ்க்

மையின் கஷ்டங்களி லிருந்தும், உபத்திரவங்களி லிருந்தும் விலகித் தஞ்சம் புகுவதற் குரியவராயும் இருந்தார். அவர் இறந்ததும், புயலில் அகப்பட்ட மரக்கலம்போல் நாங்கள் முற்றும் திகைப்படைந்தோம்; அவர் இல்லாது வாழ முடியாது என்றும் எண்ணினேம்.

நாட்டுக்கும், அவர் பிரிவு ஒரு பெரிய நஷ்டமாகவே யிருந்தது. நாட்டின் சரித்திரத்தில் மிகவும் நெருக்கடியான ஒரு சந்தர்ப்பத்தில், நிகரற்ற போர்வீரரும், அரசியல் அறிஞருமான ஒருவரை நாடு இழந்துவிட்டது. அப்பாவின் அறிவு நுட்பம் வியக்கத்தக்கதா யிருந்தது; அந்தச் சமயத்தில் அவருடைய உதவி நாட்டிற்கு மிக்க நன்மையைச் செய்திருக்கும். நம் தலைவர்களில் ஒருவர், அவரைப் பாராட்டிப் பேசும்பொழுது, "அவருடைய தியாக உணர்வு சாதாரண மனிதர்களுக் குள்ளதைவிட மிகவும் அதிகமானது. நம்முடைய விடுதலைப் போராட்டத்தில், அவர், தியாகத்தின் மேல் தியாகமாக அடுக்குவதில் இன்புற்ருர்; தம்முடைய தியாகங்களுக்கு வரையறை காணுதவராய் இருந்தார்; இந்தியாவின் விடுதலையைத் தம் சொந்தக் காரியமாக எண்ணினுர். மற்றெதற்காகவும் அன்றி, இந்தியாவின் விடுதலைக்காகவே அவர் உயிர்வாழ்ந்தார். விடுதலைபெற்ற இந்தியாவில், சுதந்திர வீரர்களுக்காகக் கட்டப்பெறும் கோயிலில், புதிய இந்தியாவின் சிற்பியாகிய மகாத்மா காந்தியின் பக்கத்திலேயே, மோதிலால்ஜியும், ஒரு முக்கிய இடத்தைப் பெறுவார்" என்று கூறினுர்.

வெளியிலே உள்ள உலகில் அழுதம் அன்பும் அளவுகோல்;
இங்கே உள்ள எங்களுக்கோ தூக்கிலிடும் கயிறும் சிறை
[விலங்குமே.

— கலிப்.

வைஸ்ராய் இர்வின் பிரபுவுடன் பேச்சுக்கள் நடத்திக் கொண்டிருந்த காந்திஜியோடு கலந்து பேசுவதற்காக, தந்தை இறந்த பின்னர், ஜவாஹர் டில்லிக்குச் சென்றார். ஜவாஹரால் கவனிக்கப்படவேண்டிய குடும்ப விஷயங்கள் பல இருந்தன; அவரில்லாததால் அவைகளை நிறுத்தி வைக்க நேர்ந்தது. டில்லியில், ஜவாஹர், தம் அலுவல்களில் முற்றும் மூழ்கி யிருந்தா ரெனினும், எங்கள் சிறிய குடும்பத்திற்கு அவரே தலைவரா யிருப்பதையும் மறந்து விட வில்லை. அந்தச் சமயம் அவர் எங்களுடன் இருக்க வேண்டியது மிகவும் அவசியம் என்று நாங்கள் கருதினோம். சிறப்பாக, முற்றிலும் மனமுடைந் திருந்த அம்மாவுக்கு இது மிகவும் இன்றியமையாததாய்த் தோன்றிற்று. நாட்கள் கழிந்தன; ஜவாஹரால் வீடு திரும்ப முடியவில்லை. எனவே, எனக்கு அவர் எழுதிய கடிதத்தில், அடியில் வருமாறு எழுதினார்:

"அலஹாபாத்தில் ஒரு வாரம் தங்கி எல்லோருமாகக் கலந்து பேசி, நம் குடும்ப விஷயங்களைப் பற்றி முடிவு செய்ய நான் பெரிதும் விரும்பினேன்; என்றாலும், இங்கு கால வரையறை யின்றித் தாமதிக்கவேண்டி யிருக்கிறது. இதுவரைக்கும் நம் குடும்பச் சுமையைத் தந்தையே தாங்கி வந்தார்; வரும் இன்னல்களை முன்னதாகவே அறிந்து ஆவன செய்தும், நம்மை அன்போடு கவனித்தும்வந்தமையால், எந்தவிதமான கவலையும் நம்மை அணுகாமல் இருந்தது. குழந்தைகள்மீது அவர் கொண்டிருந்த வியக்கத்தக்க அன்பு நம்மைப் பாதுகாத்துவந்தது. எனவே, பிறரைப்போ லன்றி நாம் கவலை யற்ற இன்ப வாழ்வு வாழ்ந்துவந்தோம். வாழ்க்கையின் கஷ்டங்கள் எதிர்ப்பட்ட பொழுது, அவரது நினைப்பே நமக்கு ஆறுதல் அளித்துவந்தது. இன்று, நாம் அவரின்றியே எதையும் செய்யவேண்டியவர்களாய் இருக்கிறோம். எனவே, நாள் செல்லச் செல்ல, அவருடைய பிரிவு என்னை உறுத்து

கின்றது; பயங்கரமான தனிமை யுணர்வு என்னை ஆட்கொள்ளுகிறது. ஆனால், நாம் அவருடைய குழந்தைகள்; அவருடைய சிறந்த வலிமையையும், மனோதிடத்தையும் நாமும் ஓரளவு பெற்றிருக்கின்றோம்; எத்தகைய சோதனைகள், கஷ்டங்கள் நம்மை எதிர்ப்பட்டாலும், உறுதியோடும், நம்பிக்கையோடும் நாம் அவற்றை வெற்றி கொள்ளுவோம்.''

தந்தையின் மரணத்தினால், எங்களைப் போன்றே, ஜவாஹரும் எவ்வளவு ஆழ்ந்த துக்கத்தை அனுபவிக்கிறார் என்பதையே இக்கடிதம் தெளிவாய்க் காட்டுகிறது. தந்தையின் ஆதரவும் உதவியும் இன்றி, செய்வதொன்றும் அறியாது, யாவற்றையுமே நாங்கள் இழந்துவிட்டதாக எண்ணினோம். எங்கள் குடும்பத்தின் சுமை அனைத்தையும் ஜவாஹர் ஏற்க நேர்ந்தது; அதை அவர் தைரியத்தோடும், ஆற்றலோடும் ஏற்றுக்கொண்டார். அப்பாவின் பொறுப்பை ஜவாஹர் ஏற்றுக்கொண்டதும், ஒவ்வொரு சிறிய விஷயத்திற்கும், நாங்கள் அவர் உதவியையே நாடலானோம்; இன்றும் அப்படித்தான் செய்கிறோம்.

ஜவாஹரின் கடிதம் எனக்கு ஓர் அமுதம் போன்றிருந்தது. வேறெதனாலும் ஆற்ற முடியாத என் மனப்புண்ணை அது ஆற்றிற்று. ஜவாஹர் இதை அறியாரெனினும், நான் தன்னம்பிக்கை யிழந்து வருந்திய பல சந்தர்ப்பங்களில், பன்னிரண்டு ஆண்டுகட்கு முன்னர் அவரால் எழுதப்பெற்ற இக்கடிதமே, என் வாழ்க்கைப் பிரச்சினைகளின் முன் நிற்க எனக்கு ஊக்கமளித்துக்கொண்டு வருகிறது.

அவ்வாண்டு கராச்சியில் இந்தியக் காங்கிரஸ் நடைபெற்றது. ஜவாஹரோடும், அவர் மனைவியோடும், நானும் அம்மாவும் அங்கு சென்றோம். ஜவாஹரின் உடல் நிலை சரியாயில்லை. விடுதலையடைவதற்குச் சிறிது முன்பிருந்தே அவர், சிறையில் நோய்வாய்ப்பட்டிருந்தார். அதோடு அவர் வெளிவந்த சமயம், தந்தையின் நோயாலும், பிறகு, தந்தையின் மரணத்தாலும் ஏற்பட்ட துக்கமும் அதிர்ச்சியும், 'எஃகு உடம்பு' என்று அவர் கூறிக்கொள்ளும் அவரது உடம்பை நலியச் செய்துவிட்டன. நீண்ட கால ஓய்வும், முழு நேர அமைதியும் அவசியமென்று வைத்தியர்

கள் வற்புறுத்தினர்கள். எனவே, ஜவாஹரும், கமலாவும், இந்திராவும் இலங்கையில் மூன்று வாரங்கள் தங்கிவரப் புறப்பட்டார்கள். இலங்கைத் தீவு ஜவாஹருக்கு இன்பம் அளித்தது. இலங்கை மக்கள் காட்டிய அன்பும், அருமையும் அவர்களைக் களிக்கச்செய்தன. திரும்பி வருகையில், கப்பலிலிருந்து ஜவாஹர் எனக்கு எழுதிய கடிதத்தில், "எங்கு சென்றாலும் உன்னதமான, வியக்கத்தக்க வரவேற்பு எங்களுக்கு அளிக்கப்பட்டது. ஒரு பெரிய கூட்டத்திலிருந்து மற்றொரு கூட்டத்திற்குச் சென்றபொழுதும், பாதைகளில் என்னைப் பார்ப்பதற்காக எண்ணிறந்த மக்கள் கூடியிருந்த காட்சியைக் கண்டபொழுதும், இத்தகைய அற்புதத்திற்குக் காரணம் எதுவாய் இருக்கலாமென்று அறிய முயன்றேன். ஏதோ இதில் ஒரு மர்மம் இருக்கிறதென்பதையும், தனிப்பட்ட ஒருவருக்காக நடைபெறவில்லையென்பதையும் நான் தெரிந்துகொண்டேன். அவர்கள், இந்தியாவின் பெருமையையும், அதன் ஒப்பற்ற போராட்டத்தையுமே பாராட்டுகிறார்களென்றும், இப்பெருமையின் ஓர் அற்ப அறிகுறியாகவே நாம் இருக்கிறோம் என்றும் உடனே அறிந்துகொண்டேன். அயல் நாடுகளில் ஓர் இந்தியன் வெட்கத்தால் தலைகுனிந்த காலம் மிகச் சமீபம் வரையிருந்து வந்தது. ஆனால், ஏதோ ஒன்று நிகழ்ந்ததன் பயனாய் வெட்கப்பட்ட காலம் மலையேறிவிட்டது. நினைத்தால் வருத்தத்தைத் தரும் அக்கனவு நிலை மறைந்துவிட்டது. இன்று, இந்தியராய் இருப்பதில் பெருமைகொள்ளக்கூடியவர்களாய் இருக்கிறோம். மேலும், போராட்டங்களிலும் கடமைகளிலும் பங்குகொண்ட ஒருவர் என்று சொல்லிக்கொள்ளக்கூடிய நிலைமையில், நம்மில் யார் எந்த இடத்துக்குச் சென்றபோதிலும், ஆணோ, பெண்ணோ புதிய இந்தியாவின் பெருமையில் ஒரு சிறிதாவது தாங்கியே செல்கிறோம்" என்று எழுதியிருந்தார். தம்மிடத்தில் காட்டப்படும் அன்புக்கும், மரியாதைக்கும் தம் தகுதி காரணமல்லவென்றும், தமக்குச் சொந்தமான யாவற்றையும் தம் நாட்டுக்குத் தத்தம்செய்து, இந்தியாவின் விடுதலைக்காகப் போராடி, இந்தியா விரும்புமானால், தம் உயிரையும் கொடுக்கச் சித்தமாய் இருக்கும், இந்தியாவின் போர்வீரர்களில் தாமும் ஒருவர் என்ற முறையில்

அளிக்கப்படும் பெருமைதான் இது என்றும் ஜவாஹர் அன்றும் கருதினர்; இன்றும் கருதுகிறர்.

காந்தி - இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டுங்கூட, நாட்டின் நிலைமையில் மாறுதல் ஏற்படவில்லை. ஒப்பந்தத்தின் கருத்துப்படி நடந்துகொள்ள அரசாங்கம் விருப்பமின்றியிருப்பதுபோல் காணப்பட்டது; எனவே, விழிப்படைந்த மக்கள் தங்கள் போராட்டத்தின் பலனை வீணாக்க விரும்பவில்லை.

ஐக்கிய மாகாணத்தில் குடியானவர்களிடையே அமைதியின்மையும், அதிருப்தியும் தொடர்ந்து காணப்பட்டன; குடியானவர்களின் கொந்தளிப்பை அடக்கும் பொருட்டு அரசாங்கம் அவசரச் சட்டங்களைப் பிறப்பித்தது. இம்மாகாணத்தில் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருந்த மாகாண மகாநாட்டை அரசாங்கம் தடைசெய்து விட்டது; ஆனல், குடியானவர்கள் பிரச்சினைகளுக்கு மகாநாட்டில் இட மளிக்காவிட்டால், மகாநாட்டை நடத்தலா மென்றும் அரசாங்கம் கூறிற்று. குடியானவர்கள் குறைகளைப் பற்றிப் பரிசிலனைசெய்யவே கூட்டப்பெற்ற மகாநாட்டில், அதை விட்டுக்கொடுப்பது நகைப்பிற்கு இடமாகு மெனக் கருதப்பட்டது. அப்பொழுது வட்டமேஜை மகாநாட்டி லிருந்து காந்திஜி திரும்பிவரும் சமயமாய் இருந்தமையாலும், ஜவாஹரும் பிறரும் காந்திஜியைச் சந்திக்க விரும்பியதாலும், மகாநாட்டை ஒத்திவைப்பது நல்லதென எண்ணினர்கள். ஆனல், அவர்களால் காந்திஜியைச் சந்திக்க முடியாதுபோயிற்று!

1931-டிஸம்பரில், அலஹாபாத்திலிருந்து பாம்பே செல்லும் வழியில் சில மைல்களிலுள்ள ஒரு ரயில்வே ஸ்டேஷனில் ஜவாஹரைக் கைதுசெய்தார்கள். இரண்டு நாட்களுக்குப் பிறகு, வட்டமேஜை மகாநாட்டிற்குச் சென்று திரும்பிய காந்திஜி பாம்பேக்கு வந்துசேர்ந்தார். துறைமுகத்தில் ஜவாஹரைச் சந்திக்கலா மெனக் காந்திஜி எதிர்பார்த்திருந்தார்; ஆனல், இதற்குப் பதிலாக, ஜவாஹரும் இன்னும் பல தலைவர்களும் கைதுசெய்யப்பட்டன ரென்றும், பல மாகாணங்களிலும் எண்ணிறந்த அவசரச் சட்டங்களை அரசாங்கம் பிறப்பித் திருக்கிற தென்றும் காந்திஜி கேள்விப்பட்டார். விஷயம் முடிவு செய்யப்பெற்று, மீண்டும் போராட்டம் துவங்கிற்று,

1932, ஜனவரி 4-ம் தெய்தி காந்திஜியையும் வல்லபாயை யும் அரசாங்கத்தார் கைதுசெய்து விசாரணை யின்றிச் சிறையில் வைத்தார்கள். சில வாரங்களுக்குள் இயக்கம் உச்ச நிலையை யடைந்துவிட்டது. இதுவரை நடைபெற்ற இயக்கங்களில் தீவிரமாகக் கலந்துகொள்ளாத எங்களில் பலர், இப்போராட்டத்தில், முழு வலிமையோடும், உற்சாகத்தோடும் கலந்துகொண்டோம். வயது சென்று மெலிந்துபோன என் தாயும் இதிற் கலந்துகொள்ளத் தயங்க வில்லை; நகரங்கள் கிராமங்களுக்குச் சென்று கூட்டங்களில் பேசலானுள். அவளுடைய செயல்கள் எங்களுக்கு எப்பொழுதும் வியப்பை அளித்தன. அவள், தன் ஆயுள் முழுதும் ஏறக்குறைய ஒரு நோயாளியாகவே யிருந்தவள்; எல்லோரையும்போல் சுறுசுறுப்புடன் இயல்பான வாழ்க்கை நடத்தமுடியாதவள்; எங்கோ ஓர் உயர்ந்த இடத்தி லிருந்து, திடீரென உடல் வலியையும், மன உறுதியையும் பெற்றுவிட்டதாக அவள் காணப் பட்டாள். எங்களைப் போன்றே—சில சமயங்களில், எங்களைவிட அதிகமாக—அவள் தீவிர முடையவளாக இருந்தாள்.

ஒரு மாதம் வரைக்கும், கூட்டங்களிலும், ஊர்வலங் களிலும், மறியல்கள் ஏற்பாடு செய்வதிலும் கலந்துகொள் வதைத் தடுத்து, எனக்கும், என் அக்காளுக்கும், எங்கள் தோழர் சிலருக்கும் அரசாங்கம் ஒரு கட்டளையிட்டது. இரண்டு வாரங்களில் சுதந்திர தின விழா நடைபெற இருந்தது. எனவே, அதுவரையில் அடக்கமா யிருப்ப தென்று நாங்கள் முடிவுசெய்தோம். அன்று வரை எங் கள் நகரத்தில் நடைபெற்றிராத அத்தனை பெரிய கூட் டத்தை 26-ம் தெய்தி யன்று நாங்கள் கூட்டினேம். அம்மா தலைமை வகித்து, எழுச்சி மிக்க தொரு பிரசங்கம் செய்தாள்; கூட்டம் முடிவதற்கு முன் தடியடிப் பிரயோ கம் நடைபெற்றது; கூட்டம் கலைய நேர்ந்தது. அந்த இடத்திலேயே பலர் கைதுசெய்யப்பட்டார்கள்; பலருக்குப் படுகாயங்கள் உண்டாயின. எங்களுக்கு இட்ட கட் டளையை மீறியதற்காக நாங்களும் கைதுசெய்யப்படு வோம் என எதிர்பார்த்தோம்; அப்படி யெதுவும் நடை பெருததால், மிகவும் ஏமாற்றத்துடன் வீடு திரும்பினேம். மறு நாட் காலை 9-30 மணிக்கு போலிஸ் வண்டி ஒன்று

எங்கள் வீட்டிற்கு வந்தது; வண்டியி லிருந்த இன்ஸ்பெக்டர், என்னையும், என் அக்காளையும் கைதுசெய்வதாகச் சொன்னார். நாங்கள் எங்கள் சாமான்களை எடுத்துக் கொண்டு, தாயிடத்தும் ஏனையோரிடத்தும் விடைபெற்று, எங்கள் சிறைவீட்டுக்குப் புறப்பட்டோம். அதுதான் எங்களது முதலாவது உண்மையான சிறை அனுபவம். முன்பு ஒரு முறை பன்னிரண்டு மணி நேரம் மட்டும் சிறையில் இருந்திருக்கிறேன். எங்களைப்பற்றியாவது. எங்களது எதிர்காலத்தைப் பற்றியாவது நாங்கள் சிந்திக்க வில்லை; ஆனால், இன்பமும், உற்சாகமும் தாண்டவமாடிக்கொண்டிருந்த ஒரு பெரிய மாளிகையில், இன்று, தனிமையும் துக்கமுமே குடிகொள்ள, மிகவும் நலிந்த எங்கள் தாய் மட்டும் தனிமையி லிருக்கும்படிவிட்டுப் போவதற்காகத் தான் வருந்தினோம். தன் சொந்த வேலைகளையும், குழந்தைகளின் வேலைகளையும் தானே செய்யும் நிலையில் தன்னைத் தனியாக விட்டுவிட்டு, தான் பெற்ற குழந்தைகள் ஒன்றன் பின் ஒன்றாய்ச் சிறை செல்லும் காட்சியைக்காண, தாயின் மனம் பதைத் திருக்கு மென்பது நிச்சயம். அவளுடைய உடல். வலியற் றிருந்தாலும், நெஞ்சம் ஒரு பெண் சிங்கத்தினது வலிமையையும் பெருமையையும் படைத் திருந்தது. வயது சென்ற மற்றொரு வீர மாதான தம் தமக்கையோடு தனியே யிருக்கும்படி ஏற்பட்டுங்கூட, போராட்டத்தை நடத்தும் உறுதியினின்றும் அவள் என்றும் தவறியதில்லை.

இவ்வாறாக நாங்கள் எங்கள் அன்புக் குரிய வீட்டி லிருந்து ஜில்லாச் சிறைக்கு அழைத்துச்செல்லப்பட்டோம். அங்கு சென்றதும், எங்களுடைய தோழிமார் பலர் ஏற்கெனவே அங்கு வந்திருப்பதையும், அவர்கள் எல்லோரும் எதற்கும் அஞ்சாத நெஞ்சத்தோடும், சந்தோஷத்தோடும், புன்சிரிப்போடும் இருப்பதையும் கண்டோம். நாங்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந் திருப்பது எங்களுக்கு மகிழ்ச்சி யளித்தது. எடை நிறுத்தல் முதலிய ஆரம்பச் சடங்குகளுக்குப் பின்னர், நாங்கள் சிறையின் உள்ளே அழைத்துச்செல்லப்பட்டோம். இந்தச் சிறையில் பெண்களுக் கென்று தனிப்பட்ட அறைகள் இல்லை. விசாரணை முடியும் வரையில் பெண் கைதிகளை இங்கு வைத்திருந்து பிறகு வேறு சிறைச்சாலைக்கு மாற்றிவிடுவது வழக்கம். இச்சிறையில் ஒரு பகுதி பெண்களுக்காக

ஒதுக்கப்பட்டு இருந்தது. அதில் கொடிய நோய்களால் பிடிக்கப்பெற்ற கேவலமான பெண்கள் பலர் இருந்தார்கள். எங்கள் விசாரணை ஆரம்பமாவதற்கு முன்பிருந்தே விசாரணை முடிந்து நான்கு நாட்கள் வரை நாங்கள் இவர்களோடு மூன்று வாரங்கள் இருந்தோம்; ஆனால், அறைக்கு நான்கு நான்கு பேர்களாக நாங்கள் தனித் தனி அறையில் வைக்கப்பட் டிருந்தோம். கடந்த மகாயுத்தத்தில் குண்டுபட்டுப் பெரிதும் அதிர்ச்சி யடைந்த ஓர் ஆங்கிலேயர், அச்சிறைச்சாலையின் மேற்பார்வை யதிகாரியாக இருந்தார். அவர் ஒவ்வொரு நாளும் காலையில் அறைகளைச் சுற்றிப்பார்க்க வருவார். எங்களில் யாரும் ஓடிவிட வில்லை யென்பதை அவர் நேரில் பார்க்கும் பொருட்டு, நாங்கள் எல்லோரும் அவர் முன் நிற்கவேண்டியதாய் இருந்தது. ஒரு நாள் நானும் என் தோழி ஒருவளும் அறையைவிட்டு வெளியே வரச் சிறிது நேரமாய்விட்டது. எங்களைப் பார்த்ததும் அவர், "விரைந்து வாருங்கள்; விரைந்து வாருங்கள்; உங்களுக்காக நான் நாள் முழுதும் இங்கே காத்திருக்க முடியாது; நான் டென்னிஸ் போட்டி விளையாட்டைக் காணச் செல்லவேண்டும்; வெறுப்பான இந்த இடத்தில் நிற்க வேண்டி யிருக்கிறது" என்று கத்தினர். எனக்கும் மிகத் தொல்லையாய் இருந்தது. "இங்கு இருக்க, உம்மைப் பார்க்கிலும் எங்களுக்கு இன்னும் அதிக வெறுப்பாகத் தான் இருக்கிறது. இந்த இடத்தைப் பாரும்; எவ்வளவு அசுத்தமாய் இருக்கிறது. டென்னிஸ் போட்டி விளையாட்டை நாங்கள் தினந்தோறும் பார்க்க முடியா திருக்கையில், நீர் ஒரு நாளைக்கு மட்டும் ஏன் பார்க்கா திருக்கக் கூடாது" என்று பதிலுக்குக் கேட்டேன். அவருக்கு முகம் வெளுத்துவிட்டது; நல்ல வேளையாய் அதற்குமேல் அவர் ஒன்றும் பேச வில்லை.

ஆரம்பத்தில், சில நாட்கள் வரை, எங்களுக்கு நேர்ந்த அனுபவங்கள் புதுமையாயும், எங்களில் யாரும் என்றும் மறக்க முடியாததாயும் இருந்தன. எங்கள் அறைகளில் பலவிதமான பூச்சிகள் ஊர்ந்துகொண் டிருந்தன. அவை எங்கள் படுக்கைகளுக்குள் நுழைந்துவிடுமோ என்று அஞ்சி, நாங்கள் பல இரவுகள் தூங்காம லிருந்தோம். எந்த நேரத்திலும் ஏதாவதோர் அருவருக்கத்தக்க பூச்சி

வழுவழு வென்று எங்கள் காலிலோ கையிலோ ஊர்ந்து வரக்கூடும் என்ற சகிக்க முடியாத அச்சம் எங்கள் மனத்தில் எந்நேரமும் குடிகொண் டிருந்தது. எங்களில் ஒவ்வொருவரும் இரண்டொரு தடவை அத்தகைய அனு பவத்தையும் பெற்ருேம். பின்னர், இரவு தூங்கப்போகும் முன் அறைகளை நாங்கள் நன்ருகப் பெருக்கிவைத்துக் கொள்ளத் தலைப்பட்டதும், விபத்தொன்றும் நிகழவில்லை. எங்கள் வழக்கை விசாரணைக்கு எடுத்துக்கொள்ளும் முன் நாள்தோறும், பிறர் எங்களைப் பார்ப்பதற்கு அநுமதித் தார்கள். அம்மா எங்களைப் பார்த்துப்போவதற்காகத் தினந்தோறும் வருவாள். கடைசியாக, விசாரணை நாள் வந்தது ; குறிப்பிட்ட நேரத்தை மிகவும் ஆர்வத்தோடு எதிர்பார்த்திருந்தோம். எங்களில் யாருக்குமே ஆறு மாதங்களுக்கு மேல் தண்டனை கிடைக்கா தென்றே எண்ணியிருந்தோம். இதை வரவேற்கத் தயாராய் இருந் தோம். சிறையில் வழக்கு விசாரணை நடைபெற்றது. நாங்கள் வரிசையாக உட்கார்ந்து இருந்தோம். ஒவ்வொரு வருடைய விசாரணையையும் எடுத்துக்கொண்டபொழுது அவரவருடைய பெயரைக் கூப்பிட்டார்கள். நாங்கள் எதிர்வழக்காட மறுத்துவிட்டோம். முதன்முதலாக அக்காள் பெயரைக் கூப்பிட்டார்கள். மாஜிஸ்ட்ரேட் தாழ்ந்த குரலில் அவளுக்கு ஒரு வருடக் கடுங்காவலும், அபராதமும் விதித் திருப்பதாகத் தமது தீர்ப்பைப் படித் ததும், நாங்கள் திடுக்கிட்டோம். பிறகு என் முறை வந்தது ; அபராதம் இல்லாமல் அதே தண்டனை எனக்கும் விதிக்கப்பட்டது. பிறகு, ஒருவர் பின் ஒருவராக மற்றெல் லாப் பெண்களுக்கும் தண்டனை விதிக்கப்பட்டது ; இவர்க ளுள் இருவருக்குமட்டுந்தான் ஒரு வருடத் தண்டனை கிடைத்தது. மற்றெல்லோருக்கும், பலவாருக, மூன்று மாதங்களி லிருந்து ஒன்பது மாதங்கள் வரைக்கும் தண் டனை அளிக்கப்பட்டது. நான்கு நாட்களுக்குப் பின்னர், ஒரு நாள் இரவு பதினெரு மணிக்கு எங்களை லட்சுமணபுரிச் சிறைக்கு அழைத்துச் சென்ருர்கள். அங்கே நாங்கள் பதினெரு மாதங்களும் பதினைந்து நாட் களும் சிறையிருந்தோம் - பதினைந்து நாட்கள் நன்னடத் தைக்காகக் கழித்துக்கொள்ளப்பட்டன !

மாரிக்காலக் கடும் குளிர் நிறைந்த ஒரு நாள், காலை நேரத்தில், நாங்கள் லட்சுமணபுரிச் சிறைச்சாலைக்குக் கொண்டுவரப்பட்டோம். இரக்கமற்ற, கொடுமையான, சிறைச்சாலை மதில்கள் உயர்ந்திருந்த தோற்றத்தைக் கண்டு, எங்கள் மனம் சிறிது குன்றிற்று. பன்னிரண்டு மாதங்கள் உலகத் தொடர்பு இன்றி அடைபட்டுக் கிடந்ததன் மூலம், சிறை வாசம் எப்படியிருக்கும் என்பதை முதன்முறையாக அறியலானோம். ஆனால், இது கண்டு நாங்கள் ஒவ்வொருவரும் உறுதியை இழந்துவிடக் கூடாதென்று திண்ணமாய் இருக்கலானோம்; பல துன்பங்களுக்கும் மனவேதனைகளுக்கும் இடையே, நாங்கள் எங்கள் லட்சியத்தின்மீது வைத்திருந்த நம்பிக்கையையும், எங்கள் தலைவர்மீது வைத்திருந்த பெரிய மதிப்பையும் தளரவிட வில்லை.

முதலில் சிறைச்சாலைக் காரியாலயத்திற்குள் எங்களை அழைத்துச்சென்றார்கள்; எங்கள் சாமான்களையெல்லாம் பரிசோதித்து முடிந்ததும், நாங்கள் உள்ளே அழைத்துச் செல்லப்பட்டோம். சிறைச்சாலையிலிருந்த பெண் அதிகாரி எங்கள் அறையைக் காண்பித்து, நாங்கள் என்ன செய்யவேண்டும் என்பதையும், எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதையும், பிறவற்றையும் விளக்கிச் சொன்னாள். பின்னர், நாங்கள் முற்றத்தில் சுயேச்சையாக உலாவலாம் என்றும், ஆனால், மாலை ஐந்து மணிக்கு அடைக்கப்படுவோம் என்றும் கூறியதும் அவள் சென்றுவிட்டாள். இது எங்களுக்குச் சிறிது அதிர்ச்சியை அளித்தது. எனினும், எங்கள் படுக்கைகளை விரித்துவிட்டு முகம் கழுவிக்கொண்டதும், எங்களிற் சிலர் சுற்றிப்பார்க்க விரும்பினார்கள்.

காலை நேரம்; கைதிகள் எல்லோரும் தங்கள் அறைகளைவிட்டு வெளியே வந்து, சிலர் துணிகளைத் துவைத்துக் கொண்டும், சிலர் வேறு வேலைகளைச் செய்துகொண்டும் இருந்தார்கள். நாங்கள் மெல்ல நடந்து அவர்களைக் கடந்து சென்றோம்; சிலர் எங்களை ஆவலோடு பார்த்தார்கள்; சிலர் நண்பர்களைப் போன்று புன்னகை புரிந்தார்கள்; வயதானவர்களாயும் மனம் இறுகினவர்களாயும் இருந்த சிலர் பகைமை கொண்டவர்களைப்போல் எங்களைக் கோபமாக நோக்கினார்கள். ஒரு கைதி, வெறுப்

போடு எங்களை ஏற இறங்கப் பார்த்தாள்; இவள் ஒரு காவற்காரக் கிழவி எனப் பின்னர் நாங்கள் அறிந்து கொண்டோம்.

சிறைச்சாலையில் திங்கட்கிழமைதோறும் அணி வகுப்பு நடைபெறும். அதாவது, சிறைச்சாலை மேற் பார்வை அதிகாரி பரிசிலனை செய்வதற்காக வருவார். அதனால், அந்நாட்களில் காலை ஐந்து மணி முதல் எங்கும் பரபரப்பாய் இருக்கும்; முற்றங்களையும் அறைகளையும் துப்புரவுசெய்துகொண் டிருப்பார்கள். எட்டு மணிக் கெல்லாம், தூய்மையான உடைகளை அணிந்தவர்களாய் எல்லாக் கைதிகளும் அணிவகுத்து நிற்பார்கள்; நன்றாகத் தேய்க்கப்பட்டு, பளிச்சென் றிருக்கும் இரும்புத் தட்டு கள் ஒவ்வொருவர் முன்னிலையிலும் இருக்கும்.

சிறைச்சாலை மேற்பார்வை அதிகாரி எங்களது அறை களுக்கு வரும்பொழுது நாங்கள் எவ்வாறு நடந்து கொள்வோமோ என்று எண்ணியவளாய், எங்களுடைய பெண் அதிகாரி எங்களது முதல் அணி வகுப்பு தினத்தில் கலக்கம்கொண் டிருந்தாள். அவ் அதிகாரியைக் கண்ட தும் எல்லாக் கைதிகளும் எழுந்து நிற்கவேண்டும் என்பது ஒரு பழக்கம். சில சிறைச்சாலைகளில், அரசியல் கைதிகள் இவ்வாறு நடந்துகொள்ள மறுத்துவிட்டார்கள்; இது தான் எங்கள் பெண் அதிகாரியின் கவலைக்குக் காரணம்.

எனினும், முதற் பரிசோதனை ஒழுங்காக முடிந்து விட்டது. அதிகாரி எங்களிடம் மரியாதையாக நடந்து கொண்டதோடு, எங்களுக்கு ஏதாயினும் குறை உண்டா என்றும், சாமான்கள் ஏதேனும் வேண்டுமா என்றும் கேட்டார். எங்களுடைய தோழிகளிற் சிலர் புத்தகங்கள் தேவை என்றார்கள்; சிலர் வேறு பொருள்கள் கேட் டார்கள். சிறைச்சாலையில் இருக்கும்போது சிலவற்றைக் கற்றுக்கொள்ள நான் விரும்பினேன்; எனவே, சில பிரெஞ்சு நூல்களையும், இத்தாலிய நூல்களையும், சுருக் கெழுத்தைப் பற்றிய சில நூல்களையும், மூன்று அகராதி களையும் தருவித்துக் கொடுக்குமாறு கூறினேன். இவை யெல்லாம் கல்வி வளர்ச்சி பற்றிய நூல்களாதலால், சில கதைப் புத்தகங்கள் கிடைத்தாலும் நலந்தான் என்று மேலும் அவ் அதிகாரியிடம் தெரிவித்துக்கொண்டேன்.

நான் கைதி என்பதையே மறந்தவளாய், இந்நூல் களைத் தருவித்துக் கொடுக்குமாறு, உண்மையிலேயே கேட்டேன். அகராதிகள் உட்பட ஆறு புத்தகங்களுக்கு மேல் ஒரே சமயத்தில் எங்களுக்கு அனுமதிக்கப்படுவ தில்லை.

சிறிது நேரம்தான் அதிகாரி தயங்கினர். பின்னர் என்னைப் பார்த்து, உண்மையோடு அவர், "சிறைக்குள் ஒரு சிறிய நூல் நிலையத்தை, உனக்காக அமைத்துத் தருமாறு மேலதிகாரிகளிடம் நான் அனுமதி கேட்பது நல்லதல்லவா? நீ அதிலிருந்து உனக்கு வேண்டிய பல வேறுபட்ட புத்தகங்களையும் பொறுக்கி எடுத்துக் கொள்ளலாமே" என்று சொன்னர். அவருக்குப் பதில் கூற நான் தயங்கி நின்ற சமயத்தில், அவர் முகத்தில் தோன்றிய புன்னகையைக் கண்டு, "உங்களுக்கு அதிகச் சிரமம் இல்லாதிருக்குமானுல் நீங்கள் தெரிவித்தது மகிழ்ச்சிக் குரியதே. இங்கு நூல் நூற்றுக்கொண்டு என் காலத்தை வீணக்க நான் விரும்பவில்லை யென்பதை நீங்கள் அறிவீர்கள். ஆகவே, புத்தகங்களை விரைவில் எனக்கு அனுப்பிவைப்பீர்களென நம்புகிறேன்" என்று தெரி வித்தேன். மேலதிகாரிகள் ஆழ்ந்து யோசித்து, இரண்டு மாதங்களுக்குப் பிறகு, புத்தகங்களைக் கொடுத்தார்கள்.

எங்களில் ஒவ்வொருவருக்கும் ஆறு சேலைகளும், மற்றும் சில துணிமணிகளுமே அனுமதிக்கப்பெற்றன. இவற்றை நாங்களே நாள்தோறும் துவைத்துக்கொள்ள வேண்டியவர்களாய் இருந்தோம். இது கடினமான வேலை யாகவே யிருந்தது. நாங்கள் அணிந் திருந்த கதராடை முரடாயும், கனமாயும் இருந்ததோடு, தண்ணீரில் நனைத்த வுடன் அதிகக் கனம் பெற்று, கைக்கடங்காமல் இருந்தது. சிறைச்சாலையில் ஏனைய பலவற்றைப் பழகிக்கொண்ட தைப்போல், இதிலும் பழக்கம் பெற்றுவிட்டோம். எங் களுக்குக் கொடுக்கப்பட்ட உணவு உண்ணுந்தரமாயில்லை; எப்படியும் அருந்துவதற்குச் செய்த முயற்சிகள் எல்லாம் வீணுயின. சாப்பாடு கீழ்த்தரமான தென்பதற்காக மட்டும் எங்களுக்கு அதன்மீது வெறுப்புண்டாகவில்லை; அசுத்தமாகப் பரிமாறினுர்கள்; அதைப் பார்த்ததுமே எங்களுக்குக் குமட்டல் உண்டாயிற்று. நாங்களே சமைத்துக்கொள்ள உத்தரவு கேட்டோம்; அதன்படி

உத்தரவு கிடைத்தது. எனவே, நான்கு பேர்களாகவும், ஆறு பேர்களாகவும் வகுத்துக்கொண்டு, ஒருவர் சமைப்பதும், ஒருவர் காய்கறிகளை அரிந்து கொடுப்பதும், ஒருவர் தட்டுகளை அலம்புவதுமாய் வேலை செய்துவந்தோம். இந்த ஏற்பாட்டிற்குப் பின் நாங்கள் சிறிது மகிழ்ச்சியை யுடையவர்களாய் இருந்தோம்.

ஒவ்வொரு அறையிலும், நாங்கள் பத்துப் பேர்களாகவும், சில சமயங்களில், பன்னிரண்டு பேர்களாகவும் இருந்துவந்தோம். பகல் முழுதும், முற்றத்தில் இஷ்டம் போல் உலாவ எங்களுக்கு உரிமையிருந்தது; ஆனால், மாலை ஐந்து மணிக்கெல்லாம் எங்களை அறைக்குள் போகச்செய்து, கதவுகளைப் பூட்டி, மறுநாட் காலை ஆறு மணிக்குத் திறந்துவிடுவார்கள். அப்படிப் பூட்டிவைக்கப் பட்ட நேரம் போவது எங்களுக்கு மிகுந்த தொல்லையாய் இருக்கும். ஒவ்வொருவரும் ஒவ்வொன்றைச் செய்ய விரும்புவோம்; சிலர் பேச விரும்புவார்கள்; சிலர் படிக்கவோ, வாதாடவோ விரும்புவார்கள்; சிலர் தங்களுடைய கஷ்டங்களை மறப்பதற்காக, பாட விரும்புவார்கள். சில வேளைகளில் எங்களுக்குள் மன வேறுபாடு உண்டாகும்; எனினும், பொதுவாய் நாங்கள் ஒற்றுமையாகவே வாழ்ந்துவரத் தொடங்கினோம்.

வெளியிலிருந்து மனத்திற்குச் சஞ்சலம் விளைக்கக் கூடிய செய்திகள் வந்துகொண்டிருந்தன. துக்க மிகுந்த ஒவ்வொரு செய்தியாலும் நாங்கள் சில நாட்கள் வரை வருத்தத்தோடு இருப்போம். தடியடியால் அம்மாவுக்குப் படுகாயம் உண்டாயிருக்கிறதென்று ஒரு சமயம் கேள்வியுற்றோம். உண்மையை முற்றிலும் தெரிந்துகொள்ள முடியாததனால், எனக்கும் என் தமக்கைக்கும் ஏற்பட்ட துயரம் அளவு கடந்ததாயிருந்தது. தந்தியடித்தாவது, கடிதம் எழுதியாவது தெரிந்துகொள்ள முயன்றோம்; ஆனால், பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை கடிதம் எழுதவுள்ள அனுமதிப்படி நாங்கள் இருவரும் ஏற்கெனவே கடிதங்கள் எழுதிவிட்டமையால், எங்கள் தந்திகளையோ, கடிதங்களையோ அனுப்ப அதிகாரிகள் மறுத்துவிட்டார்கள். அத்தகைய நேரங்களில்தான் ஒருவர் வெறுப்பு, கொடுமை, உதவியின்மை ஆகியவற்றை உணரக் கூடியதாய் இருக்கிறது.

பிறரைப் பார்த்துப் பேச அனுமதி கிடைக்கும் நாட்கள், நல்ல அதிர்ஷ்டமான நாட்களாகும். எங்கள் குடும்பத்தார் அனைவரும் சிறையில் இருந்தமையாலும், என் தாய்மட்டுமே வீட்டில் இருந்தமையாலும், சில நாட்களில் ஒருவருமே எங்களைக் காண வரமாட்டார்கள். என் சகோதரரையும், அக்காளின் கணவரையும், அக்காளையும், என்னையும் என் தாய் பேட்டிகாணவேண்டியிருந்தது. இந்நிலையில் அவள் அடிக்கடி நோய்வாய்ப்பட்டமையாலோ அல்லது வேலைகள் அதிகப்பட்டமையாலோ எங்களைப் பார்க்க வராவிட்டால், நாங்கள், எங்களைப் பேட்டிகாணும் நாட்களை இழக்கவேண்டிவருவதுடன் எங்கள் மனமும் ஏக்கமுறும்.

பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை எங்களை நிறுப்பது வழக்கம்; தற்செயலாக, யாருக்காவது இரண்டொரு இராத்தல் எடை குறைந்திருந்தால், நிலைமை பயங்கரமாய் இருக்கும்! தராசுகளும் வெறுக்கத்தக்க சிறைச்சாலை உணவுகளும் குறைகூறப்படும். எங்களை நிறுத்துப் பார்க்க வரும் சிறைச்சாலை மருத்துவருக்கு ஓயாத தொல்லைகொடுப்பார்கள். எங்கள் அறைகளுக்கு வரும் ஒவ்வொரு சமயத்திலும் அவருக்கே எடையில் சில இராத்தல்கள் குறைந்துவிடும், பாபம்! பெண்கள் சிறைக்குள் சிறைச்சாலை டாக்டரும், மேற்பார்வை அதிகாரியும் ஆகிய இரண்டு ஆண்களே செல்லக்கூடும். ஆண்களை எப்போதாவது காண்பதால் கேடொன்றுமில்லை யென்பதைக் கூட, வலிமையுடன் மறுக்கும் பெண்மைக் குணம் நிரம்பிய எங்களிற் சிலர், அவ்வதிகாரி, எங்கள் பகுதிக்கு வரும் சமயம், சிறையில் நடைபெறும் ஒவ்வொரு தவறுக்கும் அவரைக் குற்றஞ்சாட்டி, அவரிடம் நீண்டநேரம் பேசிக்கொண்டிருப்பார்கள்.

இவ்வாறாக நாட்கள் சென்றன; மாதங்கள் கடந்தன. வெளி உலகில் விட்டுப் பிரிந்து வந்திருக்கும் சிலரை நினைந்து, நாங்கள் சில வேளைகளில் உற்சாகமற்றும், தனிமையுணர்ச்சியுடனும் இருப்போம்; சில வேளைகளில், படித்துக்கொண்டும், வேலைசெய்துகொண்டும், பல விஷயங்களைப் பற்றி விவாதித்துக்கொண்டும் மன அமைதியோடும் சந்தோஷத்தோடும் இருப்போம்.

சிறையில் இருந்த சிறுமிகள் எல்லோரும் எங்களோடு நட்பாக இருந்தார்கள். சிலர் நல்ல அறிவுடையவர்களாகவும், பிறரை உல்லாசப்படுத்துபவர்களாகவும் இருந்தார்கள். ஆடவும் பாடவும் அவர்கட்குத் தெரியும். ஓர் ஆங்கிலோ - இந்தியப் பெண் இதில் அதிகத் திறமையுடையவளாய் இருந்தாள். அவள் ஓர் அரிய சிருஷ்டி; சிறு வயதில் நல்ல அழகியாய் இருந்திருக்க வேண்டும். அவளுடைய உண்மைப் பெயரை வெளியிட எனக்கு இஷ்ட மில்லை; எனவே, நான் மேரி என்றே அவளைக் குறிப்பிடுகிறேன். எப்பொழுதும் அவள் ஏதாவது விஷமம் செய்துகொண்டே யிருப்பாள்; ஆதலால், அவளைத் தனி அறையில்தான் அடைத்துவைத்திருப்பது வழக்கம். அவள் கபடம் நிறைந்தவள்; மேலும், பிடிவாதமும் உடையவள். ஒரு நாள் அறைக்கு வெளியே சிறிது நேரம் இருந்தபொழுது, அவள் நேராக என்னிடம் வந்து, "அம்மா! நான் ஒரு புகழ்பெற்ற ஆங்கில நடிகையின் உறவினள் என்பது தங்களுக்குத் தெரியுமா? நீங்கள் நம்பாமல் இருக்கலாம்; ஆனால், நான் அவளுடைய உறவினள்தான்" என்றாள். நான் மேரியைப் பார்த்து, "மேரி! நீ ஏன் சிறைக்கு வந்தாய்? நீ ஏன் சிறையில் நல்லவளாக நடந்து, உன் தண்டனைக் காலத்தைக் குறைத்துக்கொண்டு வீட்டிற்குச் செல்லக்கூடாது?" என்று கேட்டேன். "என் அருமை அம்மா! ஒரு கைதி என்ற முறையில் மற்றொரு கைதியாகிய உங்களிடம் ஓர் இரகசியத்தைச் சொல்லுகிறேன். சிறைப்படுவதும், விடுதலை யடைவதும் என் வழக்கமா யிருந்துவருகிறது. விடுதலை பெற்று வெளியிற் செல்லும் ஒவ்வொரு சமயமும், ஆண்கள் என்னைத் தொடர்கின்றார்கள். என்னை ஒரு பேரழகியாகக் கருதுவதோடு, பெரும்பாலும், என் உறவினளாகிய நடிகைதான் நான் என்று தவறாகவும் அவர்கள் எண்ணிக்கொண்டுவிடுகிறார்கள். அவர்கள் செய்யும் உபத்திரவங்கள் அதிகம். அவர்கள் பார்வையி லிருந்தும், தொந்தரவுகளி லிருந்தும் விடுபட எண்ணியே, மீண்டும் சிறைக்குள் வந்துவிடுவதற்காக ஏதாவது குற்றத்தைச் செய்யவேண்டி யிருக்கிறது" என்று விடையளித்தாள்.

ஒரு நாள் இரவு, அரவம் அடங்கி எல்லோரும் உறங்கிக்கொண் டிருக்கையில், எனக்குப் பக்கத்தில்

தூங்கிய பெண் என்னை எழுப்பி, "உற்றுக்கேள்; ஏதாவது உன் காதில் விழுகின்றதா?" என்றாள். நான் உற்றுக் கேட்டேன்; கொஞ்ச தூரத்தி லிருந்து மணிகளின் சல சலப்பு ஓசை போன்ற ஒன்று தெளிவற்று விட்டுவிட்டுக் கேட்டது. "அது என்ன?" என்றேன். "எனக்குத் தெரியாது; ஆனால், அவ்வோசை எனக்கு ஒருவிதமான நடுக்கத்தை உண்டாக்குகிறது; இங்கு ஒரு நாட்டியக்காரி இருந்தாள்; தூக்கிலிடப்பட்டு அவள் இறந்துபோனாள். ஒருக்கால், அவளுடைய ஆவிதான் இந்தச் சிறைச்சாலையில் நடமாடுகிறது போலும்" என்று அவள் சொன்னாள்.

எனக்கும் நடுக்கம் உண்டாயிற்று. சிறையிலோ அன்றி வேறெங்குமேயோ பேய் பிசாசுகளைச் சந்திக்க எனக்கு விருப்பம் இல்லை; ஆனால், நான் அதைப் பற்றிக் கவலைப்படாதவள்போல் பாசாங்குசெய்தேன். மனத்தில் எதைப் பற்றியும் கற்பனைசெய்துகொள்ளா திருக்கும்படியும், சிறைச்சாலையில் பேய் பிசாசுகள் நடமாட முடியாது என்றும் என் தோழியிடம் கூறினேன். பேய் பிசாசுகளுங் கூடச் சிறைச்சாலைகளைக் கண்டு அஞ்சும் என்றும் தெரிவித்தேன். இப்படியெல்லாம் வேடிக்கையாகப் பேசுவது தவறு என்று என் தோழி முகத்தில் அடித்தாற்போல் கூறினாள். ஓசை வரவரத் தூரத்தில் கேட்டது; விரைவிலேயே முற்றும் அடங்கிவிட்டது.

மறுநாள் இரவிலும் அதே ஓசையைக் கேட்டு எழுந்தோம்; மனத்தில் துன்பம் குடிகொண்டது. அது எதுவாய் இருக்கலாம் என்று விழித்தவண்ணமாய்ப் பலவாறு யூகித்துக்கொண் டிருந்தோம்; ஆனால், ஒன்றும் புலப்படவில்லை. மூன்று நாட்கள் இவ்வாறு கழிந்தன. நான்காம் நாள் இரவு, இந்த ஓசை எங்கள் அருகாமையிலேயே கேட்டது; மேலும், முன் எப்போதையும்விட உரத்தும் கேட்டது. நாங்கள் பல்லைக் கடித்துக்கொண் டிருந்தோம்; உடனே கரிய உடையை அணிந்திருந்த ஓர் உருவம் அறைகளில் ஒன்றின் மூலையில் சென்று திரும்பியதைக் கண்டோம். சப்தம் அவ்வுருவத்தினிடத்திலிருந்தே வந்தது. சில விநாடிகள் வரை, அவ்வுருவம் இன்னதென்று தெரியாது விழித்தோம்; பின்னர் பளிச் சென்று உண்மை புலனாயிற்று. இரவுதோறும் சிறையைச் சுற்றிக் காவல்புரிந்து வந்த பெண்ணின் உருவம் அது!

எங்கள் பயம் தீர்ந்ததும் சந்தோஷத்தால் சத்தமிட்டோம். ஒவ்வோர் இரவும் பெண்கள் சிறை முழுவதையும் சுற்றிப் பார்த்து வருவது அக்காவற்காரியின் வேலை; ஆனால், சோம்பலாலும், அரசியல் கைதிகளின் அறைகளைப் பார்வையிடுவது அவசியமில்லையென்று கருதினமையாலும், அவள் எங்கள் பக்கமே வராது, மற்ற இடங்களையே சுற்றி வந்துகொண்டிருந்தாள். அவளுடைய இடுப்பில் தொங்கிக்கொண்டிருந்த ஏராளமான சாவிகளுடன் கூடிய சாவிக்கொத்தி லிருந்தே மணிகளின் சலசலப்புச் சத்தம் எழுந்தது.

மறுநாட் காலை இதைப்பற்றி மற்றவர்களிடமும் தெரிவித்து எங்கள் ஏமாற்றத்திற்குச் சிரித்துத் தீரவேண்டும் என்று நாங்கள் முடிவுசெய்தோம். நாங்கள் எங்கள் கதையை ஆரம்பித்ததும், இதேபோன்ற அனுபவத்தைப் பெற்றவர்களைப்போல், அவர்கள் எல்லோரும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொள்வதைக் கண்டோம். நாங்கள் வற்புறுத்திக் கேட்டதன்பேரில், அவர்கள் எல்லோருமே அந்த ஓசையைக் கேட்டதாகவும், எங்களைப் போலவே அது ஒரு பேயின் செயல் என்று கருதி, அதை எங்களுக்குத் தெரிவித்தால், நாங்கள் பயந்துவிடுவோம் என்றெண்ணி எங்களிடம் தெரிவியாது இருந்து விட்டதாகவும் கூறினார்கள்.

ஆனால், சிறையில் நிகழ்வன எல்லாம் சிரித்தற்குரியன அல்ல. இளம் பெண் குற்றவாளிகளை நடத்திய முறை எங்கள் இரத்தத்தைக் கொதிக்கச் செய்தது. எனினும், அவர்களுக்கு எங்களால் எவ்வித உதவியும் செய்ய முடியாமல் இருந்தது. காவற்காரிகள் மிகவும் கீழ்த்தரமானவர்களாய் இருந்தார்கள்; அரசியல் கைதிகளிடத்துப் பொதுவாய் அவர்கள் முரட்டுத்தனமாயும், துன்புறுத்தக்கூடிய விதத்திலும் நடந்துகொண்டார்கள். எங்களிடம் மரியாதைக் குறைவாக அவர்கள் பேசிய போது, நாங்கள் கோபத்தை அடக்கிக்கொள்வது மிகவும் சிரமமாய் இருந்தது. ஆனால், மிகவும் அற்பமான விஷயங்களுக்காக மற்ற கைதிகளை, அவர்கள் தூஷிப்பதைக் கேட்பதோ, இந்நிலையில் அவர்களைக் காண்பதோ மிகமிகக் கஷ்டமாய் இருந்தது.

மெல்ல மெல்ல நாட்கள் கடந்தன. வடநாட்டார்கள் மட்டுமே உணரக்கூடிய அத்துணை கொடுமையான மாரிக் காலத்தின் குளிர் வாடைகளி லிருந்து ஒதுங்க, எந்தவிதப் பாதுகாப்புமற்ற - இரும்புக் கம்பிகளைக் கொண்ட - கதவுகளே யில்லாத அறைகளில் காலத்தைப் போக்கினேம். இதன் பின்னர் சில நாட்கள் சுகமாக இருந்தன. இந்நாட்களும் கடிதிற் கழிந்தன; தூசிகளை வீசும் புயலையும், உஷ்ணமான காற்றையும் கொண்ட கோடை பிறந்தது. மாரிக் காலத்தைவிட, இக்கோடை காலம் சகிக்க வொண்ணுததாய் இருந்தது; எனினும், நாங்கள் தாங்கிக்கொண்டோம். மக்கள் விரும்பும் மழையோடு மாரிக் காலம் மீண்டும் துவங்கிற்று. டிஸம்பர் இறுதியில், நானும் என் அக்காளும் விடுதலை யடைந்தோம். எங்களுடைய தோழிகளிற் சிலர், எங்களுக்கு முன்பே விடுதலை யடைந்து போய்விட்டார்கள்; எங்களுக்குப் பின்னுல் வர இருந்தவர்களை, நாங்கள் பிரிந்துவரும்படி நேர்ந்தது. வீட்டிற்குப் போகவேண்டும் என்ற அவா இருந்தாலும், அவர்களைவிட்டுப் பிரிய வருத்தப்பட்டோம்.

சிறை வாழ்க்கை மகிழ்ச்சி தரத்தக்கதாய் இல்லை; எனினும், அதனுல் அடைந்த அனுபவம் மிகவும் பெரியது. சில கைதிகளோடு நட்புப்பூண்டு பழகச் சந்தர்ப்பம் கிடைத்தது குறித்து மகிழ்ந்தோம். இவர்கள் சமூகத்திற்கு ஆபத்தானவர்கள் என்று கருதப்பட்டாலும், தினசரி வாழ்க்கையில் நாம் காணும் பல மனிதர்களைக்காட்டிலும் உயர்ந்தவர்களாகவே இருந்தார்கள். வீட்டுக்குப் போவதைப் பற்றி எனக்குச் சந்தோஷந்தான்; ஆயினும், பல ஆண்டுகள் சிறைவாசம்செய்து, விடுதலை பெற்றதும் இருக்க இடமும், வசிக்க வீடும், புதிய வாழ்க்கைக்கு உதவிசெய்யத் துணையும் இல்லாமல் தவிக்கவேண்டிய அவர்களை, இங்கே விட்டுச் செல்லவேண்டி யிருப்பதை நினைக்க வருத்தமாய் இருந்தது. அவர்கள், தங்கள் வாழ்க்கையை நடத்துவதற்குச் சிறையில் கற்றுக்கொண்ட தந்திரங்களை யன்றி வேறு பயிற்சி ஒன்றும் இல்லாதவர்களாய், சமூகத்தால் ஒதுக்கப்பட்டு, திண்டாடித் தெருக்கள் தோறும் அலைந்து, முடிவில் தன்னம்பிக்கை யிழந்து வேறு வகை யின்றி, ஏதாயினும் ஒரு குற்றத்தைச் செய்கிறுர்கள். பெரும்பாலும் பசிக் கொடுமையைத் தவிர்த்துக்

கொள்வதற்காக அவர்கள் குற்றம் செய்துதீர வேண்டியவர்களாகிருர்கள். எஞ்சிய தங்களுடைய ஆயுட்காலத்தையும் கழிக்க, மீண்டும் அவர்கள் சிறைக்குச் செல்லுகிருர்கள்.

மிகக் கொடிய குற்றம்செய்த காரணத்திற்காகச் சிறுமிகளும், யாரையாவது கொலே செய்த குற்றத்திற்காகப் பெண்களும் தண்டிக்கப்படுவது பற்றியும், மற்றும் பல பெண்கள் திரும்பத் திரும்பச் சிறை செல்லுவது பற்றியும் நாம் அடிக்கடி பத்திரிகைகளில் படிக்கும்போது இத்தகையசம்பவங்களும் நிகழுகின்றனவா என்று நடுக்கம் உண்டாகிறது. நமது அன்பிற் குரியவர்களின், பாதுகாப்பின் கீழ் இருந்துகொண்டு, சுக வாழ்க்கையை அனுபவித்துக்கொண்டுவரும் நமக்கு, நம்முடைய துரதிர்ஷ்டசாலிகளான சகோதரிகள் எவ்வாறு இக்குற்றங்கள் இழைக்கும்படியாகத் தூண்டப்படுகிருர்கள் என்பது தெரிவதில்லே. ஒரு பெரிய கொடுமையான குற்றத்தைப் பற்றி நாம் படித்தவுடனே, கேள்விப்பட்டவுடனே, நமது வெறுப்பை உடனே காட்டுவதுதான் நியாயம் என நாம் எண்ணுகிருேம். ஆனுல், இச்செயல்களேச் செய்யும்படி நிர்ப்பந்திக்கப் பெற்ற அவர்களது நிலேயில் இருந்தால் நாம் எவ்வாறு நடந்துகொள்வோம் என்பதை நினேப்பதில்லே. இளம் பெண்களே வைத்திருந்த ஒரு சிறையில் நாங்கள் இருந்தோம். தண்டிக்கப்பட்டு அங்கிருந்த பெண்கள் எல்லோரும் இருபத்தொரு வயதிற் குட்பட்டவர்களாகவே இருந்தார்கள். சமூகத்திற்குப் பேராபத்தானவர்கள் என்று கருதப்பட்ட இப்பெண்களிற் பெரும்பான்மையோர், அன்புடையவர்களாகவும், பிறர் சுகதுக்கங்களே அறிந்து ஒழுகக்கூடிய தன்மை உடையவர்களாகவும், அறிவுடையவர்களாகவும் இருந்தது விநோதமாக இருந்தது. அன்போடும், நட்போடும் பழகுபவர்களிடத்து, அவர்கள் திறந்த மனத்துடன் கபடமின்றி நடந்துகொண்டார்கள். ஆயினும், கோபம் மிகுந்த சில வேளேகளில், நம்மிற் பெரும்பாலோர் செய்ய விரும்பியும் நாகரிகப் பழக்கத்தினுல் செய்யத் துணியாத கொலே பாதகச் செயல்களே, இவ் ஏழைச் சிறுமிகள் அன்பைக் காணுத தம் வாழ்க்கையில், சினம் மிகுதியால் செய்தமைக்காகப் பல ஆண்டுகள் சிறைவாசம் புரியுமாறு தண்டிக்கப்

பட்டிருக்கின்றார்கள். இப்புதிய நண்பர்களைவிட்டுப் பிரிய எனக்குச் சிறிது வருத்தமா யிருந்தது. அவர்களுக்கு ஒன்றும் இல்லாம லிருக்க, நான் மட்டும் உலக வாழ்க்கை யில் அடைந்துவரும் ஏராளமான இன்பப் பொருட்களை எண்ணி வெட்கப்பட்டேன்.

அவர்களில், பாச்சூலி என்னும் பெயருள்ள பெண் ணிடம் எனக்குப் பிரியம் அதிகம்; அவள் நிறம் சிவப்பு; விழிகள் சாம்பல் வர்ணம்; பருத்த உடல்; ஐந்தடிக்குச் சிறிது குறைவான உயரம்; பிடரி வரை வளர்ந்து சடை விழுந்த முரடான கூந்தல். அவலட்சணமான சிறைச் சாலையின் சுவரில் சாய்ந்தவண்ணம், பின்னல் வேலையைக் கற்றுக்கொள்ள முயற்சித்துக்கொண் டிருந்த அவளை நான் முதன்முறையாகப் பார்த்தபொழுது, முரட்டுத் துணியை அணிந்து, பார்வைக்கு அசுத்தமாகத் தோன்றிய அவள், மிக அழகியாகவே காணப்பட்டாள். மேலும், மிக்க இளம் பருவமும், மாசற்ற நோக்கும் உடையவ ளாகத் தோற்றம் அளித்தாள். இவள் ஏன் சிறையில் இருக்கிருள்! - குழந்தையின் சுபாவத்தை யொத்த இவள் எத்தகைய கொடிய குற்றத்தைப் புரிந்திருக்கக்கூடும்! - என எனக்கு ஆச்சரியமாய் இருந்தது. நான் அவளை அணுகியபோது, அவள், வட இந்தியாவின் மலைகளில் வசிப்பவர்கள் பாடும், துயரமான பாட்டுக்களில் ஒன்றை முணங்கிக்கொண் டிருந்தாள்.

"உன் பெயரென்ன?" என்று கேட்டேன். அவள் என்னைச் சந்தேகத்தோடு பார்த்து, தயக்கத்துடன் மெது வாக, "தாங்கள் யார்? இங்கு எப்படி வந்தீர்கள்?" என்று திருப்பிக் கேட்டாள். "நானும் ஒரு கைதிதான்" என்று பதிலளித்தேன். இது கேட்டு, உரக்கச் சிரித்தாள். "நீங்கள் எந்தக் குற்றத்திற்காக உள்ளே வந்திருக்கிறீர் கள்" என்று மீண்டும் கேட்டாள். நான் ஓர் அரசியல் கைதி யென்று அவளுக்குச் சொன்னேன். அறிந்து கொண்டவள் போல் தலையை யசைத்தாளாயினும், அதன் பொருளைச் சரியாக விளங்கிக்கொண்டவளாகத் தெரிய வில்லை. நான் அவளுடன் நட்புக்கொள்ளவே முயலு கிறேன் என்று எப்படியோ தீர்மானித்து, நான் ஒரு சிறை யதிகாரி யல்ல என்பதைத் தெரிந்துகொண்டதும், மிகவும் திருப்தியடைந்தவளாய், தன் பெயரைச் சொன்னுள்.

அழகிய புன்னகையுடன் நாணத்தோடு என்னைப்பார்த்துப் பெருமூச்சுவிட்ட பின், தன் வேலையை மறுபடியும் செய்யத் தொடங்கினாள். "பாச்சூலி, நீ ஏன் இங்கு இருக்கிறாய்?" என்று நான் கேட்டேன். தன்னுடைய கபடமற்ற பெரிய விழிகளால் என்னைப் பார்த்த பின் சுருக்கமாய், "கொலைக் குற்றத்திற்காக" என்றாள்.

"கொலைக்காகவா?" என்று நான் நம்பாமல் கேட்டேன். ஆம் என்று தலையை அசைத்தாள். நான் கண்டதையும் கேட்டதையும் என்னால் நம்பவே முடியவில்லை. பால்யப் பருவத்தினளான - குழந்தை போன்ற - இவள் யாரையும் கொலைசெய்திருக்க முடியாது. இதில் ஏதோ தவறு இருக்க வேண்டும்.

"பாச்சூலி நீ ஏன் ஒருவரைக் கொலைசெய்தாய்? நீ மிகவும் இளமைப் பருவத்தினள். ஒரு வேளை நீ என்ன செய்தாய் என்பது உனக்குத் தெரியாமல் இருந்திருக்கலாம். அது ஒரு தற்செயலான சம்பவமாகவும் இருக்கலாம்" என்றேன். அவள் மெல்லத் தலையைத் தூக்கி மீண்டும் என்னைப் பார்த்தாள்; சிரிப்பு அகன்றது. அதற்குப் பதிலாக அச்சமும் வெறுப்பும் தோன்றின. இயற்கையில் சாந்தமான அவளது தோற்றம் கடுகடுத்து விட்டது.

இதுதான் அவளுடைய கதை: "என் கணவனையே நான் கொன்றேன். அவன் என்னைக் கொடுமையாக நடத்தினான்; அடித்தான்; அடிக்கடி அறைக்குள் போட்டுப் பூட்டிவைத்தான். வீட்டில் போதிய உணவு யிருந்தாலும் என்னைப் பட்டினிபோட்டான். என் பங்கு உணவையும் அவனே எடுத்துக்கொண்டு, வயிறு நிறைய உண்ண முடியாதபடி ஒரு சிறிதே தந்து, மிகுதியைத் தானே தின்று விடுவான் அல்லது எறிந்துவிடுவான். நான் அவனைத் திருப்திசெய்ய முயன்றாலும், அவன் அடிக்கடி என்னை வருத்துவதற்கு ஏதாவது ஒரு புது வழியைக் கண்டு பிடித்துக்கொண்டேயிருப்பான். அவன் நல்ல அழகன்; அவனை நான் மணந்துகொண்டபோது எனக்கு வயது பதினான்கு; அவனை மிகவும் நேசித்தேன். என் தாய் போதித்தபடி ஒரு நல்ல மனைவியாகவும், கீழ்ப்படிதல் உள்ளவளாகவும், சேவைசெய்பவளாகவும் இருக்கவேண்டுமென்று தெய்வங்கள் முன்னிலையில் பிரதிக்ஞை செய்து

கொண்டேன். அவனை நன்றாகப் போஷித்துவந்தேன். ஆனால், கல்யாணமான சில மாதங்களுக்குப் பிறகு, அவன் கொடுமைசெய்யத் தலைப்பட்டான். அவனைக் கண்டு நான் அஞ்சுவதைப் பார்ப்பதில் அவனுக்கு அதிக இன்பம் இருந்தது.என்னைத் தொந்தரவுசெய்வது அவனுக்கு அதிக மகிழ்ச்சி யளிப்பதாக அவன் என்னிடம் தெரிவித்தான்; நான் மிகவும் பயந்துபோனேன். சுமார் ஒரு வருடம் கஷ்டப் பட்டேன். என் பெற்றோரிடம் அனுப்பிவைக்குமாறு அவ னைக் கெஞ்சினேன்; மறுத்துவிட்டான். நாளுக்கு நாள் கஷ் டம் அதிகரித்தது. இத்தகைய கொடுமைகளுக்குப் பதிலாக அவன் என்மேல் பிரியங்கொள்ளும்படி செய்ய முயன் றேன்; நான் செய்தது ஒன்றும் அவனைத் திருப்திப்படுத்த வில்லை. அவன் அணிந்துகொள்ள விரும்பிய சட்டை ஒன்றை நான் துவைக்க வில்லையென்று ஒரு நாட் காலை என்னைப் பலமாக அடித்துத் தள்ளிவிட்டு, துடித்துக் கொண்டிருக்கும் நிலையில் விடுத்து வெளியே போய் விட்டான். சில மணி நேரத்தில் புதிய ஆடைகளை அணிந்து கொண்டு வந்தான்; பளபளப்பான சிவப்புப் பட்டுக் கைக்குட்டை ஒன்றைக் கழுத்தில் அணிந்திருந்தான். அவன் வந்தபோது நான் ஏதோ வேலைசெய்துகொண் டிருந்தமையால், அவனைத் திரும்பிப் பார்க்க வில்லை. எனவே, அவன் 'ஏ, சிறிய மூடமே! இங்கே வா; என் புதிய உடைகளைப் பார்; இவ்வுடைகளை அணிந் திருக்கும் போது நான் அழகாகத் தோன்றவில்லையா?' என்றான். நான் பதில் கூறவில்லை. ஆனால், கிழிந்தும் அழுக் கடைந் தும் இருந்த எனது உடைகளை நான் பார்த்தேன். 'பதில் சொல்கிறாயா, இல்லையா? என் புதிய உடைகளைக் கண்டு பொறாமைப்படுகிறாயோ?' என்று இறைந்தான். அதற்கும் நான் வாய்திறக்க வில்லை. அவன் என்னை யணுகி, என் கைகள் நோக இறுகப் பிடித்துக்கொண்டு, என் கன்னத் தில் இரண்டு முறை அறைந்தான். 'என்னை விட்டுவிடு; இல்லாவிடில் உன்னை ஒரு நாள் கொன்றுவிடுவேன். நாள் முழுதும் ஒழுங்காகத் தின்றுவிட்டு என்னைப் பட்டினி போடும் நீ அணிந்திருக்கும் உடைகளைக் கண்டு நான் ஏன் சந்தோஷப்பட வேண்டும்? ஏன்...?' என்று நான் கூறி முடிப்பதற்குள், அவன் என்னைத் திட்டிக்கொண்டும், சபித்துக்கொண்டும், தன்னுடைய தடியால் ஸ்மரணை

யற்றுப்போகும் வரையில் என்னை நையப் புடைத்துத் தூக்கி யெறிந்துவிட்டு, உன்னால் முடிந்தால் இப்பொழுது என்னைக் கொல்ல முயற்சி செய் பார்க்கலாம் என்று கூறி, தன் தடியைத் தூர எறிந்துவிட்டு அமைதியுடன் படுத்துத் தூங்கிவிட்டான். சில மணி நேரத்தில் நான் எழ முயன்றேன்; என் உடம்பு முழுதும் வலியாய் இருந்ததால், மீண்டும் படுத்துவிட்டேன். அப்போது ஒரு மூலையில் என் கணவன் அயர்ந்து தூங்கிக் கொண்டிருப்பதைக் கண்டேன். தன் புதிய உடைகளைக் கழற்றிக் கொடியில் போட்டிருந்தான்; ஆனால், புதிய சிவப்புப் பட்டுக் கைக்குட்டை மட்டும் அவன் கழுத்தில் இருந்தது. அவனைப் பார்த்ததும், எனக்கு அவன்மீது வெறுப்பு அதிக மாயிற்று; சிறிதும் தாமதியாது அவனைக் கொன்றுதீர்த்துவிட வேண்டு மென்று எண்ணினேன். ஆனால், எப்படி? சுற்றிப் பார்த்தேன்; அவனை அடிப் பதற்கு எதுவும் அகப்பட வில்லை. பின்னர், அவன் அணிந் திருந்த பளபளப்பான சிவப்புக் கைக்குட்டையின்மீது என் பார்வை விழுந்தது. எழுந்திருக்க என்னால் எப்படி முடிந்தது என்று தெரிய வில்லை; ஆனால், உடனே எழுந் தேன்; என் கணவன் கழுத்தி லிருந்த கைக்குட்டையை மேலும் மேலும் இறுக்கலானேன். கொஞ்சம் இறுகிய துமே அவன் விழித்துக்கொண்டான்; திமிறினான்; வாய் விட்டு அலற முயன்றான்; ஆனால், அவனது விழிகள் பிதுங் கும் வரை கைக்குட்டையை நான் தொடர்ந்து இறுக்கிக் கொண்டே யிருந்தேன்; முடிவில் அவன் துவண்டுவிட் டான். நானும் கைக்குட்டையை விட்டுவிட்டேன்; முற் றிலும் களைத்துப்போய், நிலை கலங்கியவளாய்க் கீழே விழுந்தேன்; கணவன் எழுந்து வந்து மீண்டும் என்னைப் புடைப்பானே என்றும் எண்ணினேன்; ஆனால், அவன் எழ வில்லை. அசைய ஆற்ற லற்று நானும் அவன் அருகா மையில் கிடந்தேன். இந்நிலையில் மறு நாட் காலை, எங்களை யாரோ ஒருவர் பார்த்துவிட்டார். என் கணவன் இறந்து விட்டான் என்பதை அறிந்துகொண்டு போலிசுக்குத் தெரிவித்ததோடு, அங்கும் இங்கும் ஓடி அக்கம் பக்கத் தாருக்கும் செய்தியைப் பரப்பினர். நான் அப்போதும் அறிவற்று மயங்கிக் கிடந்தேன்; என் கணவனை

நான்தான் உண்மையில் கொன்றுவிட்டேன் என்று நம்ப முடியவில்லை.

"போலிசார் வரும் வரையில் என் அருகில் ஒருவரும் வரவில்லை. நான் சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டேன். விசாரணைக்குப் பிறகு, இந்தச் சிறைக்கு என்னை அனுப்பினார்கள்; அதனால்தான் நான் இங்கு இருக்கிறேன். நான் மிகவும் இளமைப் பருவத்தினளாய் இருந்ததால் என்னைத் தூக்கிலிட வில்லை; மேலும் பொதுவாகப் பெண்களுக்குத் தூக்குத் தண்டனை விதிப்பதில்லை. ஆயுட் கால சிறைவாசம் எனக்கு அளிக்கப்பட்டது. இதுதான் எனது வரலாறு" என்று பாச்சூலி கூறி முடித்தாள்.

பாச்சூலியின் முகத்தைப் பார்த்தவண்ணமே, நான் இந்தப் புதுமையான கதையை மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தேன். அப்பொழுதும் அவள் சொன்னதை என்னால் நம்ப முடியவில்லை. ஆனால், அவள் சிறையில் இருப்பதால் கதை உண்மையாகத்தான் இருத்தல் வேண்டும்.

ஏதோ சாதாரணமான ஒரு கதையைச் சொல்லி முடித்தவள்போல், எவ்விதச் சிந்தனையு மின்றி, தன் வேலையில் மீண்டும் கவனம்செலுத்தலானாள். அவள் கதையைக் கேட்டதனால், நான் என்ன அபிப்பிராயம் கொண்டேன் என்பதை அறிந்துகொள்ளும் அவாவே அவளுக்கு இல்லை. அவளைப்பொறுத்த வரையில், அது ஒரு தற்செயலான நிகழ்ச்சி யென்று அவள் கருதினாள்; எளிமையும் பேதைமையும் நிரம்பிய அவளுடைய நினைவில், அது, விதியின் விளையாட்டு என்றே கருதினாள். எனவே, சிறை வாழ்க்கையை, தடுக்க முடியாத ஒன்றாக அவள் ஏற்றுக்கொண்டாள். கவலைப்பட்டுப் பய னில்லை யென்பதையும் உணர்ந்துகொண்டாள்.

குனிந்த அவளது தலையை நான் பார்த்துக்கொண் டிருந்தபோது, என் மனம் வருந்திற்று. அவள் அப் போதும் முதிரா இளமை யுடையவளாயும், இத்தகைய தீய செயல்களைச் செய்யக்கூடாதவளாயும் தோன்றினாள். விதி, அவளை ஏன் அத்துணை கொடுமைப்படுத்தியது? அவளுடைய வாழ்க்கை என்ன ஆகும்? ஏன் இத்தகைய வழக்குகளை வேறு விதமாக விசாரணைசெய்து, வேறு விதமான தண்டனை அளித்தல்கூடாது?-என்றெல்லாம்

எண்ணினேன். ஆயுட்காலத் தண்டனை யென்பது விளையாட்டல்ல. வெளியுலகச் செய்திகளை அறியாமலும், கொடிய குற்றவாளிகளை யன்றி, வேறு ஒருவர் சேர்க்கை யில்லாமலும், மிகவும் நாகரிகமற்ற பேச்சுக்களை யன்றி, வேறொன்றைக் கேளாமலும், கடவுள் சிருஷ்டியில் மிகத் தாழ்ந்த ஜீவன்களை யன்றி, வேறொருவரைக் காணாமலும், வெளியில் பல ஆண்டுகளிலுங்கூடக் கற்றுக்கொள்ள முடியாத கிழ்த்தர தந்திரங்களை யன்றி வேறெவற்றையும் கற்றுக்கொள்ளாமலும் இருபது ஆண்டுகள் வரை சிறை வாசம்புரிவதென்பதல்லவா அதன் பொருள்! பாச்சூலிக்கு வயது பதினைந்து; சிறையை விட்டு வெளியே வரும் பொழுது அவளுக்கு வயது முப்பத்தைந்து ஆகிவிடும். இளமைப் பருவம் முழுவதையும் சிறையில் கழித்த பின்னர், பிறரால் தீண்டப்பெறுமலும், இனிய தோற்றத் துடனும் இப்பொழு திருப்பதுபோல் அவள் இருக்க முடியுமா? அல்லது, மக்களால் ஒதுக்கப்பட்டு, தீச்செயல் கள் புரிந்து மனம் இறுகிய குற்றவாளியாக மாறி, மீண்டும் தீய வாழ்க்கையை மேற்கொண்டு மறுபடியும் சிறைக்குச் செல்லவேண்டியவ ளாகிவிடுவாளா?

என் எண்ணங்கள் குழப்பமடைந்தன. நான் பாச்சூலி யின் சிரத்தைத் தடவிக்கொடுத்து, “பாச்சூலி, உன்னை நான் மீண்டும் சந்திப்பேன். நீ நன்றாக வேலைசெய்து, உன் சிறைத் தண்டனைக் காலத்தைக் குறைத்துக்கொள்ள வேண்டும். அப்படியானால், ஒருவேளை நீ விரைவிலேயே வெளிவரலாம்” என்று கூறினேன். புன்னகை புரிந்தவ ளாய், “ஆம், ஆம், சிறை அதிகாரிகளுக்கு எத்தகைய தொந்தரவும் கொடுக்காது, நான் கஷ்டப்பட்டு வேலை செய்துவந்தால், தண்டனைக் காலம் முழுது மன்றி முன்ன தாகவே விடுதலை அடைந்துவிடலாம் என்று அவர்கள் என்னிடம் தெரிவித்திருக்கிறார்கள். நான் என் பெற்றோ ரிடம் செல்வேன். அது எனக்கு மிகவும் இன்பமா யிருக் கும். மலைகளின் மேல் அமைந் திருக்கும் ஊரில் என் வீடு இருக்கிறது; மலைகளிடத்து எனக்கு அதிகப் பிரியம் உண்டு” என்று பாச்சூலி தெரிவித்தாள். பல ஆண்டுகள் சிறையி லிருக்கவேண்டி யிருப்பினும், அவளது தைரியமும், தன்னம்பிக்கையும் சிதறமாட்டா என்ற நம்பிக்கையோடு மிகவும் வருத்தத்துடன் அவளிட மிருந்து பிரிந்தேன்.

மரங்க ளிடையே, மலர்க ளிடையே, மெல்லிய பூங்காற் றிடையே வளர்ந்த குழந்தை அவள். சமபூமியில் உள்ள சிறையில், தாங்க முடியாத கோடை காலத்து வெப்பத்தை அவள் எப்படித் தாங்குவாள்! இவ் ஐயங்கள் என்னை வருத்தின. ஆனால், அவள் மனத் திருப்தியோடும், யாவும் விதியின் செயல்களே என்ற அமைதியோடும் இருந்தாள். அவளுடைய மன வலிமையை நான் வியக்கா திருக்க முடியவில்லை.

மீண்டும் நான் அவளைத் திரும்பிப் பார்த்த பொழுது, அவள் தன் வேலையில் முற்றும் ஆழ்ந்திருக்கக் கண்டேன். நான் சின்னஞ் சிறு பாச்சூலியுடன் ஓராண்டு சிறையில் வாழ்ந்தேன். சிறையை விட்டு வெளியே செல்ல நான் பெரிதும் அவாக்கொண் டிருந்தேன்; ஆனால், என்னுடைய விடுதலை நாள் வந்ததும், எனக்கு வருத்தம் ஏற்பட்டது. பேசிக்கொண்டும், குறிஞ்சிப் பாட்டுகளைப் பாடிக்கொண்டும் பொழுது போக்க, ஒளி வீசும் கண்களை யுடைய அப் பாச்சூலி என் பக்கத்தி லிருக்கமாட்டாள். அவளைப் பிரிந்து செல்லும் நினைவு, என்னை மிகவும் வருத்திற்று. சிறையகத்தைவிட் டகலும் நாள் விடிந்தது; என் தோழிகளிடம் விடை பெற்றுக்கொள்ளும் பொருட்டு நான் அவர்களிடம் சென்றேன். திடீரென இரண்டு கரங்கள் என்னை அணைத்துக்கொண்டன; அகன்ற விழிகளில் நீர் ததும்ப அன்பே வடிவான பாச்சூலி மௌனமாக என் அருகில் நிற்பதைக் கண்டேன். அவளைத் தழுவிக்கொண்டு, அவள் முகத்தை என் எதிரே திருப்பி, "பாச்சூலி, நீ தைரியமாக இருக்க வேண்டும்; சந்தோஷமாக இருக்கவும் வேண்டும். நீ வெளியே வரும் சமயம் எனக்குத் தெரிவி. என்னிடம் வர விரும்பினால் நீ வரலாம்" என்றேன். "வெளியே சென்றதும் நீங்கள் என்னை மறந்துவிடமாட்டீர்களே? சிறையி லிருந்து விடுதலையாகிப் பரந்த வெளி உலகிற்குச் சென்றவர்கள், சிறையில் உள்ளவர்களைப் பற்றி நினைக்க விரும்பமாட்டார்கள் என்று இங்கே பேசிக்கொள்கிறார் கள்" என்றாள் பாச்சூலி. நான் அவள் தலையைத் தடவிக் கொடுத்து, அங்ஙனம் நிகழாது என்று உறுதி கூறினேன். பல ஆண்டுகள் ஆயின; எனினும், அவளது நினைவு

அப்படியே யிருக்கிறது; இன்னும் நெடுங் காலம் அப்படியே யிருக்கும்.

நானும், என்னோடு அன்று விடுதலை யடைந்த சில தோழிகளும் சிறை முற்றத்தைத் தாண்டி வாயிற் கதவுகளைக் கடந்ததும், பாச்சூலியும், அவளைப்போன்ற மற்றச் சிறுமிகளும், அவர்கள் வாழ்க்கையைச் சிறையில் கழிக்கக் கூடா தென்றும், விதியின் நற்செயலால், அவர்கள் மீண்டும் தம்தம் வீட்டை யடைதல் வேண்டும் என்றும், அமைதியோடும் அக மகிழ்ச்சியோடும் வாழ்க்கையை நடத்த வேண்டும் என்றும் இறைவனைப் பிரார்த்தித்துக் கொண்டேன்.

ஓராண்டுக் காலம் என் வாசஸ்தலமா யிருந்ததும், இளம் பெண் குற்றவாளிகள் பலரைத் தன்னுள் அடைத்துவைத் திருப்பதுமான பயங்கர மதில்களை யுடைய சிறைச்சாலையைக் கடைசியாக மீண்டும் ஒரு முறை நான் திரும்பிப் பார்த்தேன். சிறையின் பெரிய கதவுகள் மெதுவாக மூடிக்கொண்டு வந்தன; எங்களுக்கு விடை கொடுத் தனுப்ப, சிறை முற்றத்தில் கூடியிருந்த சிறுமிகளை அப்பொழுதும் நான் காண முடிந்தது. விடைபெற்றுக் கொள்வதற் கறிகுறியாகக், கையை அசைத்துவிட்டு, கண்களிலிருந்து நீர் வடிவதை என்னுடன் வெளிவந்த தோழிகள் காணுதிருக்கும் பொருட்டு நான், என் முகத்தை விரைவாகவே திருப்பிக்கொண்டேன். ஆனல், அவர்கள் அதைப் பார்த்துவிட்டார்கள். சிறையை வீட்டுச் செல்வது எனக்கு வருத்தத்தை அளிக்கிறதா என்று அவர்கள் சிரித்துக்கொண்டே என்னைக் கேட்டார்கள். யாருக்காக நான் கண்ணீர் வடித்தேன் என்பதை அவர்கள் அறியவில்லை. ஏனெனில், நானும், என் தமக்கையும் இந்த இளங் குற்றவாளிகளைப் பற்றி அறிந்துகொண் டிருந்ததைப்போல் அவர்கள் அறிந்திருக்க வில்லை. அவர்கள் அவ் இளம் கைதிகளிட மிருந்து மிகவும் ஒதுங்கியே இருந்தார்கள். எனவே, அவர்களிடத்து நாங்கள் கொண்டிருந்த உணர்ச்சிகளை இத்தோழிமார் அறிந்துகொள்ள வில்லை. சிறையை விட்டு வெளிவருவதற்காக நான் கண்ணீர் வடிக்க வில்லை. எங்களில் யாருக்கும் சிறை வாசம் சுக வாசமா யிருக்க வில்லை. வயதிற் சிறிய பெண்களை, திக்கற்ற நிலையில் நாம் விட்டுச் செல்கிறேமே

என்று என் கண்கள் கலங்கின; அறியாமையாலும், கொடுமைகளின் பயனாலும் குற்றம் புரிந்தமைக்காக நெடுங் காலச் சிறைவாசத்திற்குத் தண்டிக்கப்பெற்ற சிறுமிகளை நினைந்து என் கண்கள் கலங்கின; வறுமை, அன்பில்லாமை, கொடுமை முதலியவற்றிற்கு உட்படா திருப்பின், தங்களால் செய்தற் கியலாத செயல்களை, தவறான எண்ணத்தாலும் கொடுமையாலும் செய்ய நேர்ந் திருக்க முடியாத சிறுமிகளை நினைந்தே என் கண்கள் கலங்கின. மனிதத் தன்மையோடும், குழந்தைகளைப் போலும், அன்புடைமையோடும் இருந்த அவர்களுக்காக என் இருதயம் இரக்கப்பட்டது; அவர்களை விட்டுப் பிரிய மனம் ஒருப்பட வில்லை. நானோ, என்னை வரவேற்கக் காத்திருக்கும் என் அன்பிற் குரியவர்களையும், நண்பர் களையும் காண வீட்டிற்குச் செல்கிறேன்; ஆனால், அவர்களோ! அவர்கள் கதி என்ன ஆவது! என்று திகைத் தேன். அதை எண்ணிப்பார்க்கவே என் மனம் கூசிற்று.

காலைப் பறவையின் பாட்டொலியால் - உந்தன்
கண்ணுக் கினிய நகை சமைப்பேன் ;
மாலையிலே துள்ளு மீனொளியால் - பல
மாயப் பொய்மை உனக் காக்கிடுவேன்.
சோலைப் பசுமை நடுவினிலே - எழும்
சோதிப் பொழுதொடு நீள் கடலின்
நீலப் பொழுதைக் கலந்தவற்றால் - நீயும்
நானு மிருக்க மனை யமைப்பேன்.

— ஆர். எல். ஸ்டீவன்ஸன்.

எங்களை லட்சுமணபுரியில் விடுவிக்கவில்லை ; ஆனால், எங்கள் சிறையி லிருந்த பெண் அதிகாரியின் பாதுகாப்பில் நாங்கள் அலஹாபாத்துக்குக் கொண்டுவரப்பட்டோம். ஓராண்டு கடந்து வீடு வந்ததும், வீடு, வெறும் வீடா யிருந்தது. கமலா நோயுற்றுக் கல்கத்தாவி லிருந்தாள். என் தாயும் அவளுடன் தங்கியிருந்தாள். எங்கள் விடுதலையைப் பற்றி ஒருவருக்கும் தெரியாது. ஆனந்தபவனம் பூட்டப்பட் டிருந்தது. ரெயில்வே ஸ்டேஷனி லிருந்து நாங்கள் வந்துகொண் டிருந்தபோது, எங்களைப் பார்த்த ஒருவர் செய்தியைப் பரப்பிவிட, எங்கள் விடுதலைச் செய்தி மின்னல்போல் பரவிற்று. இரண்டு மணி நேரத்திற்குள் நண்பர்களும், உறவினர்களும் எங்கள் விட்டில் கூடிவிட்டார்கள். எங்கள் சிறை வாழ்க்கையைப் பற்றி அவர்கள் எண்ணிறந்த கேள்விகளைக் கேட்டார்கள். சிறையில் அமைதியோ டிருந்த எங்களுக்கு, இது களைப்பைத் தந்தது ; என்னைப் பற்றிய வரையில், ஒரே சமயத்தில் பெரும் கூட்டத்தைக் கண்டதும், என்ன செய்வ தென்று எனக்குத் தோன்ற வில்லை.

அலஹாபாத்தில் சில நாட்கள் தங்கியிருந்ததும், நானும் சுவரூபும் கல்கத்தாவிற்குச் சென்றோம். கமலா அனேகமாகக் குணம் அடைந் திருந்தாள். வீட்டிற்குத் திரும்பச் செல்ல வேண்டு மென்றும் விரும்பினாள். எனவே, ஒரு வாரம் கல்கத்தாவில் தங்கியிருந்த பின்னர், நாங்கள் அலஹாபாத்துக்குத் திரும்பிவிட்டோம்.

சிறைக்குச் செல்வதற்கு முன்னர், சுவரூப், தன் பெண் குழந்தைகள் மூவரையும் பூனுவி லுள்ள ஒரு பள்ளிக்கூடத்துக்கு அனுப்பியிருந்தாள். கடைசிக் குழந்தைக்கு வயது மூன்றுதான். நீண்ட காலமாகக் குழந்தைகளைக் காணு திருந்தமையால், பூனு சென்று தன் குழந்தைகளைப் பார்க்க வேண்டு மென சுவரூப் விரும்பினுள். அந்தப் பள்ளிக்கூடம் எங்கள் நண்பர்கள் சிலரால் நடத்தப்பட்டுவந்தது. அங்குதான் இந்திராவும் தங்கியிருந்து கல்வி பயின்றுவந்தாள். சிறையி லிருந்த பொழுது, விஷக் காய்ச்சலால் பிடிக்கப்பட்டு என் உடம்பு மிகவும் மெலிந் திருந்தது. இட மாற்றம் எனக்குச் சிறிது நல னளிக்கும் என்றும், ஆதலால், சுவரூபோடு பம்பாய், பூனு முதலிய நகரங்களுக்குச் சென்று வருமாறும் அம்மா தெரிவித்தாள். இதை நான் களிப்புடன் வரவேற்றேன். நாங்கள் நேராகப் பூனு சென்று, அங்கு சில நாட்கள் தங்கியிருந்த பின், குழந்தைகளை அழைத்துக்கொண்டு பம்பாய்க்கு வந்தோம். பூனுவி லிருந்தபொழுது எரவாடா சிறையி லிருந்த காந்திஜியைப் பல முறைகள் பேட்டி கண்டோம்; அவர் எப்பொழுதும் எங்களை அன்போடு வரவேற்ருர்; அனுமதி கிடைத்தபோ தெல்லாம் அவரோடு சிறிது நேரம் பொழுதுபோக்குவது எங்களுக்கு மிகவும் நலன் பயப்பதா யிருந்தது.

நானும், சுவரூபும், அவளுடைய குழந்தைகளும் பம்பாயில் சுமார் ஒரு வாரம் தங்கியிருந்தோம். அப்பொழுதுதான் நான் ராஜாவைச் சந்தித்தேன். முதன் முறையாக அவரை ஒரு விருந்துக் கூட்டத்தில் கண்டேன்; விருந்து நடைபெற்ற இடத்திற்குள் நுழைந்ததும், நான் அவரைக் காண நேர்ந்தது. அங்கிருந்த மற்ற எல்லோரையும்விட, அவர் ஒரு தனிப்பட்ட மனிதராகத் தோன்றினுர்; மற்றவர்களைவிடக் கம்பீரமான தோற்றமும், பிறரோடு கலந்துகொள்ளாத தன்மையும் உடையவராகவும் காட்சியளித்தார். இவ்விரண்டு தன்மைகளும் என்னை வருத்தி, அவர்பால் காதல்கொள்ளச் செய்தன. கூட்டத்தி லுள்ளவர்களில் ஒருவரா யிருந்தும், அவர், அதில் கலந்து கொண்டவராகவே தோன்ற வில்லை. தனியே மௌனமாக உட்கார்ந் திருந்தவாறு, வெண்மையான ஓர் அழகிய குழாயை வாயில் வைத்துப் புகைத்துக்கொண் டிருந்தார்.

அறிமுகம்செய்துகொண்டதைத் தவிர நாங்கள் ஒருவரோ டொருவர் வேறெதுவும் பேசவில்லை. நான் யாரையாவது முதன்முறையாகச் சந்தித்தால், அவர்கள் கைகளைப் பார்ப்பது வழக்கம். ஏனெனில், அவைகள் ஒருவருடைய குணங்களைக் குறிப்பாகக் காட்டுவனவாயும், அவை பற்றி விளக்குவனவாயும் எனக்குத் தோன்றுகின்றன. எனவே, ராஜாவைப் பற்றி நான் கவனித்த பலவற்றில், முதலாவது, அவர் கைகளைப் பார்த்ததே. அவரை, உணர்ச்சி மிக்க வராகவும், கலைப்பண்புடையவராகவும் காட்டிய அக்கரங் கள், வாய் திறவாமலிருந்த அவரைக் குறித்து விரிவுரை யாடுவனபோன்றிருந்தன. ராஜாவும் மற்றொரு நண்பரு மாகச் சேர்ந்து ஜுஹூ என்ற இடத்தில், திறந்த வெளி யில் நடத்திய விருந்தின்போது நாங்கள் மறுமுறை சந்தித் தோம். இம்முறை நானும் ராஜாவும் நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தோம். பெரும்பாலும், புத்தகங்களைப் பற்றியும், பொதுவுடைமைத் தத்துவத்தைப் பற்றியும் பேசினோம். என்னுடைய சகோதரரின் நூல் நிலையத்தி லிருந்து சில நூல்களை ராஜாவுக்கு அனுப்பிவைப்பதாக நான் வாக்களித்தேன். இதுதான் எங்கள் நட்பின் துவக்கம். இதன் பின்னர், நாங்கள் ஒருவருக் கொருவர் கடிதங்கள் எழுதிவந்தோம்.

மே மாதத்தில் நான் சுவரூபுடன் முஸோரிக்குச் சென்று இரண்டு மாதங்கள் தங்கியிருந்தேன். திரும்பும் போது, ஆகஸ்ட்டு மாதத்தில் அஹமதாபாத்தில் இறங்கி, ஆக்ஸ்போர்டு செல்ல விருந்த என் நட்பினளான பாரதி சாராபாயுடன் சிலகாலம் தங்கியிருக்கத் தீர்மானித்தேன். என்னுடைய திட்டத்தைப் பற்றி ராஜாவுக்கு எழுதி, பம்பாயிலாவது, அஹமதாபாத்திலாவது அவரைச் சந்திக்க விரும்புவதாகத் தெரிவித்தேன். என் பிரயாணத்தின் போது டில்லி வழியாகச் செல்ல வேண்டாமென்றும், பம்பாய் வழியாகச் செல்லும்படியும் எனக்கு அவர் எழுதி யிருந்தார். அதற்கு நான் இணங்கினேன். அப்பொழுது பம்பாயிலிருந்த எங்கள் குடும்பத்துப் பழைய நண்ப ரொருவர் என் வருகையைப் பற்றித் தெரிந்துகொண்டார். இது ஒரு நல்ல அதிர்ஷ்டமாகவே யிருந்தது. ஒருவரை ஒருவர் அறிந்துகொள்ளாதவர்களாய் ராஜாவும், அந்த நண்பரும் என்னைச் சந்திப்பதற்காக மிக்க மகிழ்ச்சியுடன்

ஸ்டேஷனுக்கு வந்திருந்தார்கள். நான் இருவரையும் சந்தித்தேன். நண்பர், ராஜாவை வரவேற்ற முறை எனக்கு அதிர்ச்சியை யளித்தது. ஆனால், நான் அவர்களை ஒருவருக் கொருவர் அறிமுகப்படுத்திவைத்த பின்னர், நண்பர், ராஜாவைச் சந்தேகத்தோடு பார்த்தா ரெனினும், கேள்வி யொன்றும் கேட்க வில்லை.

அன்று முதல் என் காலத்தில் பெரும் பகுதியை நான் ராஜாவோடு கழித்துவந்தேன். நாங்கள் சினிமாக் காட்சிகளுக்குச் செல்வோம். வண்டிகளில் நீண்ட தூரம் உலாவச் செல்வோம். ஆனால், ராஜா நெருங்கிப் பழகாம லிருந்தார். நாள்தோறும் பல மணி நேரத்தை என்னோடு கழிக்க எண்ணிய அவர், என்னை விரும்பினு ரென்பதை அறிவே னுயினும், தம் உணர்ச்சிகளை வெளிக்காட்டிக் கொள்ளாததால் என்னை அவர் நேசித்தாரா என்பது எனக்குத் தெரிய வில்லை. நான் அவரை விரும்பியதற்கு இதுவும் ஒரு காரணம்.

என்னை எல்லோரும் கொண்டாடுவது வழக்கம்; எனவே, எல்லோரும் என்னை விரும்புவார்கள் என்பது ஒப்புக்கொள்ளப்பட்ட உண்மை யென நான் எண்ணினேன். பிறர் வெறுக்கக்கூடிய குணங்கள் என்னிடம் இல்லாமையால், எல்லோரும் என்மீது பிரியமா யிருக்கிறுர்கள் என்று எண்ணினேனே யன்றி, நான் அதற்குத் தகுதி யுடையவ ளென்ற எண்ணத்தினு லல்ல. ராஜாவின் அலட்சியத் தோற்றம் என் மனத்தில் முதலில் சிறிது கோபத்தை விளைத்தது; எனவே, அவர் தம்மைச் சுற்றி அமைத்துக்கொண் டிருந்த இறுக்கத்தைத் தகர்த் தெறியும் எண்ணத்துடன் நான் என் வழக்கத்திற்கு மாருக நூதனமான வழியைப் பின்பற்றினேன். நாள் தோறும் பல மணி நேரம் நாங்கள் பிரியாமல் இருப்போம்; முடிவில்லாமல் பேசிக்கொண்டு மிருப்போம்; ஒருபோதும் அலுப்புத்தோன்றுவ தில்லை.

ஒரு நாள் மாலை நான் அஹமதாபாத்திற்குப் புறப்படுவதற்குச் சிறிது நேரத்திற்கு முன்னுல், ராஜா என்னைப் பார்த்து, எதிர்பாராதபடி, "அன்பிற் குரியாய், நாம் என்று விவாகம்செய்துகொள்வது?" என்ருர். ஒரு குழந்தையினதைப் போன்ற எளிமையும், தூய்மையும் உடைய

உள்ளத்தைக் கொண்ட ஒருவரால் எளிய முறையில் கேட்கப்பட்ட ஓர் எளிய கேள்வியே இது.

இக்கேள்வி என்னைத் திடுக்கிடச் செய்தது; ஆயினும், வழக்கமில்லாத முறையில் கேட்கப்பட்ட இக்கேள்வியால் எனக்கோர் உணர்ச்சியும் பிறந்தது. ஒரு வார காலமாய் நாங்கள் இருவரும் நாள்தோறும் சந்தித்துவந்தோம். ஆனால், இருவரில் யாரும் காதலைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேச வில்லை. ராஜாவுக்கு என்மீது பிரியம் இருந்தது என்பது எனக்குத் தெரியும்; ஆனால், அவர் என்மீது காதல்கொண் டிருந்தா ரென்று நான் எண்ணவே யில்லை. என்னளவில், அவரைப் பார்க்கப் பார்க்க எனக்கு அவர்மீது பிரியம் அதிகப்பட்டது. நான் அறிந்துள்ள பிற மனிதர்களைவிட அவர் பெரிதும் வேறுபட்டுக் காணப் பட்டார். எனினும், அவர்மீது எனக்குக் காதல் ஏற் பட்டதாக நான் நம்ப வில்லை; நான் இதை அவரிடம் தெரிவித்தேன். அதற்கு அவர் தமது இயல்பான அமைதி யுடன், நான் உண்மையில் அவரிடம் காதல்கொண் டிருப் பதாக உறுதியாகக் கூறியதுடன், அதைத் தெரிந்து கொள்ளா திருப்பினும் 'ஆம்' என்று சொல்லலாமா எனக் கேட்டார். நான் அதற்கு இணங்க வில்லை. அஹமதாபாத்தி லிருந்து திரும்பும்பொழுது என் முடி வைத் தெரிவிப்பதாக அவரிடம் கூறினேன்.

நான் அவரைப் பிரிந் திருந்த ஒரு வாரத்தில், ராஜா எனக்குத் தினந்தோறும் கடிதங்கள் எழுதிவந்தார். அக் கடிதங்கள் மிகவும் சிறப்பானவை. அவற்றின்மூலம் அவர் என்னை மிகவும் வற்புறுத்திவந்தார். அவரைப் பிரிந் திருந்தபொழுதுதான் அவரிடத்து எனக்கு எவ்வளவு பிரியம் இருந்தது என்பதையும், மீண்டும் அவரோ டிருக்க எவ்வளவு ஆசை இருந்த தென்பதையும் நான் அறிய லானேன். விரைவில் பம்பாய் திரும்ப வேண்டு மென்று நான் எண்ணினதால், அஹமதாபாத்தில் தங்கிய காலத் தைச் சுருக்கிக்கொள்ள வேண்டிய தாயிற்று.

ஆகவே, நான் திரும்பினேன். ராஜாவிடம் அவரை மணந்துகொள்வதாகக் கூறினேன். நான் ஒரு கனவுலகத் தில் வாழ்ந்துவந்தேன்; ஆனால், ஒரு நாட் காலையில் பேரி டியால் தாக்கப்பட்டு நனவுலகத்திற்கு வந்தேன். என் தாய் திடீரென்று நோய்வாய்ப்பட்டுள்ளாள் என்னும்

செய்தியைப் பத்திரிகைகளில் படித்தேன். ராஜாவுக்கு இதை அறிவித்தேன். அன்றிரவே அலஹாபாத்திற்குச் செல்ல முடிவுசெய்தேன். இனி, எப்பொழுது எங்ஙனம் அவரை மீண்டும் சந்திப்பது என்று அறியாதவளாய், மனத்தில் மிக்கக் கவலையுடன் நான் ராஜாவைப் பிரிந்தேன்.

அலஹாபாத் சென்றதும், சிகிச்சைக்காக அம்மாவை லட்சுமணபுரிக்கு அழைத்துச்சென்றுவிட்டார்களென அறிந்தேன். எனவே, நான் லட்சுமணபுரிக்குச் சென்றேன்.

ராஜாவைப் பற்றி நான் என் தமக்கையிடம் மட்டுமே சொல்லியிருந்தேன்; பம்பாயி லிருந்து வந்ததும், அவரை மணந்துகொள்வதாக வாக்களித் திருப்பதை அவளுக்குத் தெரிவித்தேன். அம்மா உடல் நலமற் றிருந்ததாலும், ஜவாஹர் சிறையி லிருந்ததாலும் இதைப் பற்றி எதுவும் வெளியிட வேண்டாமென்றும் என் அக்காளிடம் நான் கேட்டுக்கொண்டேன். எனவே, இந்த இரகசியம் எங்களுக்குள்ளேயே இருந்தது.

அம்மாவுடைய நிலைமை அதிகக் கவலைக் கிடமானதாய் இருந்தது; அவள் பக்கத்தில் இருந்துகொண்டு, அல்லும் பகலும் சஞ்சலமடைந்துவந்தோம். ஜவாஹரின் இரண்டாண்டுச் சிறைவாசம் முடியுந்தறுவாயில் இருந்தது. ஆனால், அம்மாவின் நிலைமை மிகவும் கவலைக் கிடமாய்விட்டபடியால், ஜவாஹரை, அவரது விடுதலை தினத்திற்கு இரண்டு மூன்று நாட்கள் முன்னதாகவே விடுதலை செய்துவிட்டார்கள். சில நாட்களுக்குப் பிறகு, அம்மா சிறிது சிறிதாகக் குணமடைந்தாள்.

ராஜாவைப் பற்றி ஜவாஹருக்குச் சொல்லுமாறு அப்பொழுது நான் சுவரூபைக் கேட்டுக்கொண்டேன். விரும்பியதைச் செய்ய எனக்கு எப்பொழுதும் சுதந்திரம் இருந்துவந்ததால், எனது உறவினர்களைக் கலந்துகொள்ளாமல் நானே என் கணவரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டது இயற்கைக்கு விரோதமானதாக எனக்குத் தோன்றவில்லை. என் தாய், சகோதரர், சகோதரி ஆகியோரின் விருப்பத்திற்கு மாறாகவோ அன்றி எதிராகவோ நான் எதையும் செய்துவிட்டதாகக் கனவில்கூட நினைக்கவில்லை. தக்க காரணங்களின்றி, என்னுடைய விருப்பத்திற்கு அவர்கள் தடை விதிக்கமாட்டார்கள்

என்பதை நான் நன்ருக அறிந்திருந்தேன். ராஜாவைப் பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரியாது; ஆனல், என் சந்தோஷத்தைக் கருதும் அவர்கள் அதை மறுக்கமாட்டார்களென்றும், ராஜாவை அவர்களும் விரும்புவார்களென்றும் நான் நம்பினேன். ஆனல், ராஜாவோடு எனக்கு நெடு நாட் பழக்கமில்லை என்று ஆட்சேபிப்பார்களோ என்றுதான் நான் சிறிது அஞ்சினேன். ராஜாவோடு நான் அதிகமாய்ப் பழகவில்லை என்பது உண்மையே. ஒருவரையொருவர் அறிந்துகொள்ள நெடுங்காலப் பழக்கம் அவசியம் என்று நான் எண்ணவில்லை.

ராஜாவைப் பற்றி ஜவாஹர் என்னிடம் பேசியபொழுது, அவருக்குரிய இயல்புடனேயே பேசினர். கண்ணைச் சிமிட்டிக்கொண்டு, "என் அன்பே, நீ விவாகத்தைப் பற்றி யோசிக்கிருயென்று கேள்விப்பட்டேன். அந்த வாலிபரைப் பற்றி எனக்குக் கொஞ்சம் தெரிவிக்க முடியுமா?" என்ருர். எனக்குச் சிறிது குழப்பம் ஏற்பட்டது; ஆயினும், தெரிவிப்பதாகச் சொன்னேன். ராஜா என்ன செய்துகொண்டிருக்கிருர் என்று ஜவாஹர் கேட்டார். அவர் பாரிஸ்டர் என்றும், தொழிலில் இப்பொழுதுதான் ஈடுபட்டிருக்கிருர் என்றும் சொன்னேன். பிறகு, ராஜாவின் உறவினர் யார் என ஜவாஹர் கேட்டார். எனக்கு ஒன்றும் சரியாகத் தெரியாது என்றேன். ராஜாவுக்குச் சகோதர-சகோதரிகள் எத்தனை பேர் என்று கேட்டார். அதுவும் எனக்குத் தெரியவில்லை. ஜவாஹருக்குக் கோபம் பிறக்க ஆரம்பித்தது. நான் நடுங்கினேன். இம்முக்கியமான கேள்விகளை ராஜாவைக் கேட்டுத் தெரிந்துகொள்ளாமற்போனமைக்கு நான் என்னை நொந்துகொண்டேன். "ஆக்ஸ்போர்டில் ராஜா எந்தக் கல்லூரியில் பயின்ருர்? அங்கு என்ன செய்தார்?" என்று சரமாரியாக ஜவாஹர் பல கேள்விகளைக் கேட்டார். எதற்கும் எனக்குப் பதில் தெரியவில்லை. ராஜாவுடைய தலைப்பு எழுத்துக்கள் 'ஜி. பி' என்று இருக்க, நான் 'ராஜா' என்று அழைப்பதற்குக் காரணம் என்ன என்றும், அவ்வெழுத்துக்கள் எப்பெயரைக் குறிப்பிடுகின்றன என்றும் ஜவாஹர் கடைசியாகக் கேட்டார். உண்மையில் நான் பயந்தேபோனேன். 'ஜி. பி' என்ற எழுத்துக்கள் என்ன பெயரைக் குறிப்பிடுகின்றன என்று

ராஜா கூறியது அரைகுறையாக நினைவிலிருந்தும், சமயத்தில், சரியாக ஞாபகத்திற்கு வரவில்லை. எனக்கு ஞாபகமில்லை என்று சிறிது அச்சத்தோடு என் சகோதரரிடம் நான் தெரிவித்தேன். அப்போது ஜவாஹர் நிலைகுலைந்தவராய், "இது மடத்தனமானது" என்று சொல்லிக்கொண்டே அறையை விட்டுப் போய்விட்டார். தனியே யிருந்த நான் மனம் குன்றி வருந்தினேன்.

மடத்தனமாக நடந்துகொண்டதை நான் உணர்ந்தேன். நான் ராஜாவோடு கழித்த பல நாட்களில், அவரது குடும்பத்தைப் பற்றியோ, அவரைப் பற்றியோ அறிந்துகொள்ள வேண்டுமென்பதே தோன்றுதபடி அவரால் கவரப்பட்டிருந்தேன். பல விஷயங்களைப் பற்றி நாங்கள் பேசினோம்; விவாதித்தோம். ஆனால், எங்களைப் பற்றி ஒன்றும் பேசவில்லை. ராஜாமீது எனக்குப் பிரியமிருந்தது; வேறு ஒன்றையும் நான் பொருட்படுத்தவில்லை.

அன்றிரவு, நான் ராஜாவிற்கு எழுதி, அவசியமான விவரங்களைத் தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டேன். அவருக்கு இது சிறிது வருத்தமா யிருந்தது; எனினும், கீழ்க்கண்டவற்றை அனுப்பினார்:

என்னுடைய உறுதிமொழிப் பத்திரம்.

பெயர்: குணோத்தம ஹத்தீஸிங்.

பள்ளிக்கூடம்: நேஷனல் பள்ளிக்கூடமும், குஜராத் வித்தியாபீடமும்.

கல்லூரி: ஸெண்ட் காத்தரீன் கல்லூரி, ஆக்ஸ்போர்டு.

* சட்டக் கல்லூரி: லின்கன் சட்டக் கல்லூரி.

பட்டம்: அரசியல், பொருளாதாரம், தத்துவம் — இவற்றில் பி. ஏ.

சங்கம்: ஒன்றுமில்லை — எதிலும் சேர்வதற்கு எண்ணமில்லை.

---

* ஆங்கில நீதிமன்றங்களில் ஆஜராகி விவாதிப்பதற்குரிய படிப்பை அளிக்கத் தனி உரிமை பெற்றுள்ள — சுயேச்சையான நான்கு சட்டக் கல்லூரிகளுக்கு 'இன்ஸ் ஆவ் கோர்ட்' என்று சொல்வதுண்டு. அவை, இன்னர் டெம்பிள், மிடில் டெம்பிள், லின்கன் சட்டக் கல்லூரி, க்ரே சட்டக் கல்லூரி என்பனவாம்.

தொழில் : வழக்கறிஞன். இவ்வேலையில் முழு மனத்தோடு ஈடுபட்டிருக்கிறேன். எதிலும் முனைந்து ஈடுபடுவதே எனது வழக்கமாகும். ஆனால், வேறொன்றிற்காக இத்தொழிலை விட்டுவிடமாட்டேன் என்பது பொருளல்ல. இன்னும் ஒன்றிரண்டாண்டுகளில் அரசியல் துறையில் ஈடுபடலாம்.

மனத்திற் கினிய தொழில் : புகைத்துக்கொண்டு சாய்மான நாற்காலியில் சாய்ந்திருப்பது. பெரும்பாலும் பிறரிடம் காணப்படாதவாறு - சிந்தனையிலாழ்வது.

விளையாட்டு : பல ஆண்டுகளுக்கு முன் கிரிக்கெட் பந்து விளையாடிக்கொண் டிருந்தேன் ; இப்போது எதுவும் விளையாடுவ தில்லை.

குணம் : அகம்பாவ முடையவன் என்றும், சுயநலப் பிரியன் என்றும் என்னைப் பிறர் கருதுகிறார்கள்.

திருமணத்தைப் பற்றிய கருத்துக்கள் : சுதந்திரத்தை விரும்பி, அதைக் காப்பாற்றிக்கொள்ளக் கூடிய நிலையி லுள்ள எவருக்கும் பரிபூரண சுதந்திரம் கொடுப்பதில் நம்பிக்கை யுண்டு.

சான்றுகள் : ஒன்று மில்லை.

எதிர்காலத்தில் பிரகாசத்துடன் முன்னேறும் அறிகுறி : ஒன்று மில்லை.

பொருளாதாரத் தன்மை : போதுமானது - சாதாரண சௌகரியத்தோடு வாழப் போதுமானது-பெருஞ் செல்வத்தில் வாழ இட மில்லை.

இறுதியாக : 1933, அக்டோபரில் திருமிகு கிருஷ்ண நேரு, மேற்குறித்த மனிதரை மணந்துகொள்ளச் சம்மதிக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளும் ஒரு விண்ணப்பம் இது - துணிவும், அதிக நம்பிக்கையும் கொண்டதாக இருக்கலாம்.

அவரிட மிருந்து எனக்குக் கிடைத்த குறிப்பு மேற்கண்டவாறு இருந்தது. இது எனக்கு வேடிக்கையாக இருந்தது ; ஏனெனில், அவரைப் பற்றிய விவரங்களை எனக்குத் தெரிவிக்குமாறு நான் ராஜாவிற்கு எழுதி

யிருந்த கடிதத்தைக் கண்டு, அவர் எவ்வளவு கோப மடைந் திருக்க வேண்டும் என்பதை அதிலிருந்து ஊகித்தேன்.

என் தாய் சிறிது குண மடைந்ததும், ஜவாஹர் பம்பாய்க்குச் சென்று ராஜாவைச் சந்தித்தார்; பின்னர் காந்திஜியைப் பார்த்து, நான் ராஜாவை மணந்துகொள்ள விரும்புவதைப் பற்றி அவரிடம் தெரிவித்தார். ராஜா வுடைய குடும்பத்தைப் பற்றிக் காந்திஜி மிக நன்ருக அறிந் திருந்தார்; ஆனுல், ராஜாவைப் பற்றி மிகக் குறைவாகவே அறிந்துகொண் டிருந்தார். அவர், ராஜாவைச் சந்திக்க விரும்புவதாக என் அண்ணுவிடம் தெரிவித்தார். எனவே, ராஜா காந்திஜியைப் பார்க்கச் சென்ருர்; காந்திஜியின் குறுக்கு விசாரணை, ராஜாவிற்குச் சந்தோஷத்தைக் கொடுக்க வில்லை. எனினும், ராஜா பின்வாங்கவோ, அன்றி நாக்குளறவோ இல்லை. (மிகவும் தைரியமுடைய மனிதர்களிலுங்கூடப் பலர் அதை எதிர்த்துத் தங்கள் நிலையினின்று பிறழா திருக்க முடியாது என்று நான் உறுதியாக நம்புகிறேன்.) லட்சுமணபுரிக்கு வந்து எங்கள் குடும்பத்தையும் என் தாயையும் சந்திக்கும்படி ஜவாஹர் கேட்டுக்கொண்டதற்கு ராஜா இணங்கினுர். சுமார் பதினைந்து நாட்களுக்குப் பின்னர் அவர் வந்தார். வலிமை குன்றி, ஆபத்தான நிலைமையில்தான் அம்மா அப்போதும் ஆஸ்பத்திரியில் இருந்தாள். ராஜாவைப் பார்த்ததும் அந்த க்ஷணத்திலேயே அம்மாவுக்கு அவரிடம் அன்பு ஏற்பட்டுவிட்டது; ராஜாவும் அவ்வாறே அம்மாமீது அன்புகொள்ளலானுர். இதன் பிறகு, எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் எங்கள் விவாகத்தை நடத்த அம்மா விரும்பினுள். அம்மா உடல் நலம் பெறும் முன்னர், திருமணம் நடைபெறுவதை நான் விரும்ப வில்லை. ஆனுல், காலம் தாழ்த்துவதை அவள் விரும்ப வில்லை. தான் இன்னும் நீண்ட நாட்கள் வரை உயிர்வாழப்போவ தில்லை யாதலால், தன் உயிருள்ளபோதே நான் கல் யாணம்செய்துகொண்டு இன்பமாக வாழ்வதைக் காண வேண்டுமென்று அவள் விரும்பினுள்.

1933, அக்டோபர் 20-ல், ஆனந்தபவனத்தில் எனக் கும் ராஜாவுக்கும் சீர்திருத்த விவாக நியமங்களின்படி விவாகம் நிகழ்ந்தது. எளிய சடங்கு; அரை மணி நேரத்

தில் முடிந்துவிட்டது; ஒரு வாரத்திற்கு மேற்கொண்டு நடைபெற்ற சுவரூபின் விவாகத்தோடு ஒப்பிட்டால், இது மிக மிக வித்தியாசமானது. கல்யாணத்திற்கு எங்கள் நண்பர்கள் உறவினர்களிற் சிலரும், ராஜாவின் சகோதரர்கள், சகோதரி, அவரது தந்தையின் உடன் பிறந்தாராகிய கஸ்தூரிபாய் லால்பாய் முதலானவர்கள் வந்திருந்தார்கள். அம்மா படுக்கையிலேயே இருந்தாள். அஹமதாபாத்தில் ராஜாவின் தாயாரும் மிகவும் நோயுற்றிருந்தாள். எனவே, விவாகத்தை ஆடம்பரமின்றி நடத்த முடிவு செய்தோம்.

அலஹாபாத்திற்கு, பாபு (காந்திஜி) வர இயலாதிருந்ததால் விவாகத்தை வார்தாவில் நடத்துமாறு யோசனை கூறினார். கல்யாணத்தின்போது பாபுவும் உடனிருந்து எங்களை ஆசிர்வதிக்க வேண்டுமென்று நான் பெரிதும் விரும்பினேனெனினும், அவரது யோசனைக்கு நான் இணங்கவில்லை. குழந்தைப் பருவ நினைவுகளையும், காலஞ்சென்ற என் தந்தையின் நினைவுகளையும் எனக்களிக்கும் என்னுடைய சொந்த வீட்டிலன்றி வேறு எந்த இடத்திலும் மணவினை நிகழ்வதை நான் விரும்பவில்லை. காந்திஜி இல்லாதது என் விவாகத்தில் ஒரு குறைதான். இது எனக்குப் பெருங் குறையாயிருந்தது. ஆயினும், காந்திஜி எனக்கு ஓர் ஆசிர்வாதக் கடிதத்தையும், திருமணப் பரிசாகத் தன் கையால் நூற்ற நூலாலாகிய மாலைகள் இரண்டையும் அனுப்பியிருந்தார். காந்திஜி, ஹிந்தியில் எழுதிய கடிதத்தில்,

"அருமைக் கிருஷ்ணா! நீ மறு பிறவி எடுக்கப் போகிறாய்; விவாகம் என்பது ஒரு வகையில் மறு பிறவிதான், அல்லவா? உன் அக்காள் சுவரூப் கத்தியவாட் பிரதேசத்திற்கு மணப்பெண்ணாய் வந்திருந்தாள். ஆனால், தன்னுடைய பழைய மாகாணத்திற்கே சென்று, அங்கேயே வாழ்ந்துவரத் தன் கணவனை இணங்கச்செய்து அவ்வாறே வாழலானாள். உனக்கும் சுவரூபுக்கும் அதிகமான வேற்றுமைகள் உண்டு. நீ ராஜாவை அழைத்துக் கொண்டு போக முயற்சிப்பாய் என்று நான் கருதவில்லை. மேலும், ராஜா ஒரு குஜராத்தி; குஜராத்திகள் தங்கள் ஊரைவிட்டு எளிதில் வேற்றூருக்குச் சென்று வசிக்க மாட்டார்கள். எனவே, நீ குஜராத்தையே உனது

சேர்ந்த ஊராகக் கொள்வாய் என்று நம்புகிறேன்; பம்பாயிலும் வாழலாம். நீ எங்கிருந்தாலும், சந்தோஷத்தோடு வாழ வேண்டும் என்பதும், கீர்த்தி மிக்க உனது பெற்றோர் பெயர்களுக்கு, மேலும் சோபிதத்தைத் தருமாறு வாழ வேண்டும் என்பதுமே என் பேரவா.

"உன் திருமணத்திற்கு வர முடியாதுபோனமைக்கு நான் பெரிதும் வருந்துகிறேன்; எனவே, என் ஆசியை உனக்கு அனுப்பித்தான் நான் திருப்தியடைய வேண்டும்.

உன்னுடைய பாபு"

என்று எழுதியிருந்தார்.

நாசிக் சிறைச்சாலையில் இருந்தபொழுது வல்லபாய் எங்கள் விவாகத்தைப் பற்றிக் கேள்வியுற்றார். அவரும் தம்முடைய ஆசியையும், மகிழ்ச்சியையும் தெரிவித்து ஒரு கடிதம் எழுதியிருந்தார். என் அக்காளின் கணவர் ரஞ்சித் பண்டிட், தாம் பிறந்த இடத்தைவிட்டு, ஐக்கிய மாகாணத்திலுள்ள எங்கள் வீட்டிற்கே வந்து குடியேறி விட்டபோதிலும். குஜராத் மக்கள் என்னைத் தங்கள் மாகாணத்திலேயே வைத்துக்கொள்வார்கள் என்றும், வெளியே செல்ல அனுமதிக்கவோ அன்றி ராஜாவைக் கூட்டிக்கொண்டு சென்று வடக்கே குடியேறவோ அனுமதிக்கமாட்டார்கள் என்றும் வல்லபாய் எழுதியிருந்தார். எனக்கு அந்த எண்ணமே யில்லை; எனவே, வல்லபாயின் சந்தேகங்களுக்கு ஆதாரம் ஒன்றும் இல்லை. என் புதிய வீட்டிற்கு என்னை வரவேற்பதற்குப் பலர் விருப்பமுற்றிருப்பதை யறிந்து நான் அகமகிழ்ந்தேன்.

எங்கள் குடும்பத்தின் பழைய நண்பராகிய சரோஜினி நாயுடுவும் ஒரு பாராட்டுக் கடிதம் அனுப்பியிருந்தார். அவருக்கே உரித்தான அவரது சொந்த நடையில் கடிதம் முழுதும் பாட்டும் இசையுமாய் இருந்தது. கடிதத்தில் அவர்,

"என் அருமைச் சிறிய பெட்டீ (எனது செல்லப் பெயர்), நம்முடைய தற்காலச் சந்தோஷமற்ற தேசிய வாழ்க்கையிலே, ஒரு காதல் மலர் நன்கு பூத்துப் பொலிவுற்றிருப்பதைக் காண நெஞ்சம் எவ்வளவு இன்பத்தை அடைகின்றது! இதுகாறும் இதை ஒளித்துவைத்துக் கொண்டிருந்த கூட்டாளிகளான நீங்கள் இருவரும்

எத்துணை அருமையான குறும்புக்காரர்கள்! பெண்ணே, உனக்குப் புதிதாய்க் கிடைத்துள்ள இன்ப வாழ்க்கையைக் கண்டு நான் களிப்பெய்துகின்றேன். தன் சின்னஞ்சிறு மகள், ஒரு மனைமகளாகித் தனது உள்ளத்தில் பூரணமாக நிறைந்துள்ள கடைசி விருப்பத்தை நிறைவேற்றி வைப்பதைக் கண்டு, நோய்ப்படுக்கையி லிருக்கும் மம்மாஜி (என் தாயை சரோஜினி நாயுடு அவ்வாறுதான் அழைப்பார்.) எவ்வளவு மனம் பூரிப்பாள் என்பதை நான் அறிவேனாதலின், இது எனக்கு இரு மடங்கு, மும் மடங்கு மகிழ்ச்சியை விளைக்கின்றது. தம் உள்ளக் கிளர்ச்சியை வெளிக்குக் காட்டாமல், தமக் கியல்பான கேலியாலும், சிரிப்பாலும் மறைத்துக்கொண்டு, உன் காதலை பப்பாஜி (தந்தை) மிகவும் பாராட்டித் தம் ஆசியை அளித்திருப்பார் என்பதையும் நான் அறிவேன். அவரும், முதிர்ந்த-மாட்சிமைதங்கிய தமது உள்ளத்தில் இவ்வாசையைக் கொண்டு இருந்தார்; இதைப் பற்றி அடிக்கடி சொல்லியுமுள்ளார்.

"உன்னிலும் அதிகமாக உன்னுடைய ராஜாவோடு எனக்கு நீண்ட காலப் பழக்கம் உண்டு. நான் உனக்கு அவரைப் பல தோற்றங்களில் சித்திரித்துக் காட்ட முடியும். மே (மாத) வாரம் ஒன்றில், ஆக்ஸ்போர்டில் உள்ள ஓர் ஆற்றில், படகில் சாய்ந்துகொண்டு, ராஜா, குருக்கள் கூட்டத்தையும், தீர்க்கதரிசிகள் குழாங்களையும் பற்றி வேடிக்கையாக வியாக்கியானம் செய்துகொண் டிருந்ததும், ஒரு நாடோடியைப் போன்று வாயில் புகைக்கும் குழாயும், கழுத்தில் பறந்துகொண் டிருக்கும் குட்டையுமாய் லண்டனில் ராயல் ஹோட்டலில் சுற்றிக் கொண் டிருந்ததும் எனக்குத் தெரியும். ஜவாஹரை வழியனுப்புவதற்காக விக்டோரியா டெர்மினஸில் கூடி யிருந்த, கதர் உடுத்தியவர்களைக்கொண்ட கூட்டத்தின் ஓர் ஓரத்தில் பொருத்தமற்ற நிலையிலும், தற்பெருமைத் தோற்றத்தோடும், இப்படிப்பட்ட கூட்டத்தில் இவர் யாரடா என்று ஒவ்வொருவரும் அதிசயிக்கும்படியும் நின்ற நிலையில் அவரைக் கண்டதுதான் எனது நினைவி லிருக்கும் அவரது கடைசித் தோற்றம். எனக்குந்தான் சிறிது வியப்பு உண்டாயிற்று. பிளாட்பாரத்தில் அவர் என்னோடு நடந்துவந்தா ரெனினும், தமக்கும் ஜவாஹருக்

கும் உள்ள நெருங்கிய தொடர்பையும், தமது காதலியின் சகோதரர் என்ற முறையில் ஏற்படவிருந்த நெருங்கிய உறவையும் தமது கண் ஜாடையால்கூட அவர் உணர்த்தவில்லை.

"அவசரமாக உனக்குத் தேவையாயுள்ள திருமண உடைகளை வாங்குவதற்கு, சுவரூபும் கமலாவும் இங்கு வந்திருக்கின்றார்கள். திருமண உடைகளுக்கு வேண்டிய அளவு தூய கதர் ஆடைகள் இல்லையென்று குறை கூறினார்கள். ஆனால், இன்பமும் கனவுமே ஆடைகளாகவும், இளமையும் காதலும் துணிவுமே ஆபரணங்களாகவும் உடைய உனக்கு இதைப் பற்றிக் கவலை ஏன்?

"உங்கள் திருமணத்தின் மூலம் நீங்கள் இருவரும் பரஸ்பர அன்பை மட்டுமன்றி, பரஸ்பர உணர்ச்சி, நம்பிக்கை, தினசரி வாழ்க்கைத் திட்டம் - வாழ்க்கைப் பிரச்சினைகளில் ஒற்றுமையான கருத்துக்கள் ஆகியவற்றை ஆதாரமாக உடைய, அழகிய, அழிவில்லாத தோழமையையும் கொள்ள வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

"நமது நாட்டிற்கு வழிகாட்டிகளாயும் உணர்ச்சியளிப்பவைகளாயுமுள்ள பழக்க வழக்கங்கள், குறிக்கோள்கள், அருஞ்செயல்கள் நிறைந்த உனது குடும்பத்தின் பரம்பரைச் செல்வத்தாலும், சிறப்பாலும் மேம்பட்ட உன்னுடைய சொந்தக் குணங்களை இந்தத் தோழமையில் நீ உன் பங்காக அளிக்கின்றாய்...உன்னுடைய விவாகத்தை உன் குடும்பத்திற்கும் நண்பர்களுக்கு மட்டுமே சொந்தமானதென்ற அளவில் கொள்ள முடியாது. மோதிலால் நேருவின் மகளாகவும், அன்பிற்குரிய ஜவாஹரின் தங்கையாகவும் நீ இருப்பதால், இதில் நாட்டுக்கும் ஒரு பங்கு - பெரும் பங்கு - இருக்கிறது.

"ஆனால், நீ என் சின்னஞ்சிறு தங்கையாகவும் இருக்கிறாய். ஆகையால், சிறிய மணப்பெண்ணே, எனது அன்பு மிகுந்த நல்லாசிகளை உனக்கு அனுப்பிவைப்பதோடு, ஒரு துணைவனை - நண்பனை - இளமைத் தோழனைத் தேர்ந்தெடுத்த உன்னுடன் நானும் சேர்ந்து மகிழ்ச்சி கொள்கின்றேன்" என்று வரைந்திருந்தார்.

அதிர்ஷ்டமும், இன்பமும் ஏற்பட வாழ்த்தி அனுப்பிய இக்கடிதமும், எண்ணிறந்த பிற கடிதங்களும் எனக்கு ஓர் ஆழ்ந்த இன்பவுணர்வை நல்கின. எனது புதிய வாழ்க்கையை வெற்றிகரமாக நடத்த முடியும் என நான் நம்பினேன்.

மணவினை நடந்த சில நாட்களில், என் பழைய இல்லத்திலிருந்து, புதிய இல்லத்திற்குச் சென்றேன். என் மனம் பெரிதும் சஞ்சலப்பட்டது. படுக்கையிற் கிடந்த என் தாயையும், குடும்பத்திலுள்ள மற்றவர்களையும் விட்டுப் பிரிய மனம் வரவில்லை. எதிர்காலத்தையும், புதிய வாழ்க்கையையும் எண்ணும்போது சிறிது அச்சமாயிருந்தது. ஆனால், என்மீது பேரன்புகொண்ட, என் நலனே கருத்தாய் உள்ள ராஜாவைப் பார்த்த ஒவ்வொரு தடவையும் எனக்குத் தெளிவு ஏற்படும்.

நாங்கள் அஹமதாபாத்திற்குப் புறப்பட்ட அன்று மாலை எங்களை வழியனுப்புவதற்கு என் உறவினர்கள், நண்பர்கள், மற்றும் அநேகமாக ஊரார் அனைவரும் வந்திருந்தனர். அதுகாறும் அறிந்திராத அளவில் என் மனம் அப்போது வருந்திற்று. நீர் நிறைந்த கண்களோடு ஒவ்வொருவரும் என்னைத் தழுவிக்கொண்டார்கள். ஆனால், நான் மட்டும் தைரியத்தை இழக்காதிருந்தேன். இறுதியாக, ரயில் ஊத ஆரம்பித்தபோது, நான் ஜவாஹரை இறுகத் தழுவிக்கொண்டேன். அவர், "அருமைத் தங்காய், சந்தோஷமாயிரு" என்று மெதுவாய்ச் சொன்னார். அம்மூன்று சிறிய வார்த்தைகளும், நான் பெரும் பாடுபட்டு அடக்க முயன்றும் முடியாது கண்ணீரை ஆறுகப் பெருகச் செய்தன. அன்னையைப் பிரிந்தது உள்ளத்தைப் பேரளவில் தாக்கிற்று; ஆனால், தாயின் நிலைமையைக் கருதி என் துக்கத்தை அடக்கிக் கொண்டேன். ரயில் மெதுவாக நகரத் தொடங்கியதும் வண்டியிலிருந்து குதித்து வீட்டிற்கு ஓடிவிடலாமா என்பது போன்ற உணர்வுகூடத் தோன்றலாயிற்று. காரியம் முடிந்துவிட்டது; திரும்புவதற்கு இனி இடமில்லை.

ராஜாவின் சொந்த ஊராகிய அஹமதாபாத்தை நாங்கள் சமீபித்துக்கொண்டிருந்தபோது, ராஜா, முதன் முறையாகத் தம் குடும்பத்தில் உள்ள ஒவ்வொருவரையும்

பற்றி எனக்குச் சொன்னர். ஒருதலைச் சார்பாகப் பேசாமல், அவர்களைப் பற்றிய உண்மையான விவரங்களைக் கூறியதுடன், என் முன் உள்ள வாழ்க்கையைப் பற்றியும் எடுத்துரைத்தார். அவ்வாழ்க்கையில் நான் அனுபவிக்கவேண்டிவரக்கூடிய இன்னல்களைப் பற்றியும், என் பழைய வீட்டைத் துறக்கும் நிலை எனக்கு ஏற்பட்டது கண்டு அவர் மனம் வருந்துவது பற்றியும் தெரிவித்தார். குறிப்பிட்ட ஒரு தரையில் பயிர்செய்யப்பட்டுச் செழித்து வளர்ந்து புஷ்பித்துக்கொண்டிருந்த ஓர் இளம் மரத்தைத் தான் பெயர்த்து எடுத்துச் செல்வதைப் போன்ற உணர்ச்சி ஏற்படுவதாகவும் அவர் கூறினர். இப்பொழுது வேறு இடத்தில் அதை ஊன்ற வேண்டும். பல ஐயங்கள் அவரை வருத்தின. பெயர்த்தெடுத்த நிலையில் அம்மரம் வளம் பெற்று, முன்னிலும் அழகாகச் செழித்துப் பழம் தருமா அல்லது புது நிலத்தில் வாடி அழிந்துபோமா? வீட்டைச் சமீபித்தபொழுது இத்தகைய கேள்விகள் ராஜாவை வருத்தின. என்னை மணம்புரிந்துகொண்டதற்கு அவர் அநேகமாய் வருந்துவது போலத் தோன்றினர்.

அதிகாலையிலேயே நாங்கள் அஹமதாபாத்தை அடைந்தோம். ராஜாவின் குடும்பத்தார்களும், நண்பர்களும் ஸ்டேஷனில் எங்களை வரவேற்றார்கள். அஹமதாபாத்தில் சில நாட்கள் தங்கியிருந்த பின் நாங்கள் பம்பாய்க்குச் சென்றுவிட்டோம். புதிய வாழ்க்கை இப்படி ஆரம்பமாயிற்று.

இளமையில் ராஜா அரசாங்கப் பள்ளிக்கூடத்தைப் பகிஷ்கரித்து தேசிய வித்தியாபீடத்தில் சேர்ந்து கல்வி கற்றார். பின்னர் இங்கிலாந்தில் படித்தபோது மற்ற மாணக்கரைப் போல் இவரும் அரசியலில் கலந்துகொண்டார். இங்கிலாந்திலிருந்து திரும்பியதும், பம்பாய் வழக்கறிஞர் கூட்டத்தில் தாமும் ஒரு நிலையான இடத்தைப் பெறும் வரையில் அரசியலில் தீவிரமாக ஈடுபடாதிருக்கத் தீர்மானித்தார். சிறிது காலம் வரை தமது வேலையைத் தொடர்ந்து நடத்திக்கொண்டிருந்தார். ஆனல், அரசியல் உணர்ச்சி மிக்க அவரால் விலகியிருந்து பார்த்துக்கொண்டிருக்க முடியவில்லை; அது அவருக்கு அதிகக் கஷ்டமாகயிருந்தது. நாளடைவில் அவர் அரசியலில் கலந்துகொண்டார். ராஜாவுக்கு அவரது தொழிலில் விருப்ப

மில்லையென்பதை நான் அறிய முடிந்தது. தம் நாட்டிற்குத் தம்மால் இயன்றதைச் செய்வதற்கும், அவசியமாயின், தேச விடுதலைக்காகத் தாம் அருமையாகக் கருதும் தம்மிட முள்ள யாவற்றையுமே தியாகம் செய்வதற்கும் அவர் துடித்தார். எந்தவிதமான சுயநலனும் ராஜாவின் அரசியல் வாழ்க்கையில் இதுகாறும் குறுக்கிடவில்லை; இனிமேலும் குறுக்கிடாது என்பது உறுதி. பிறர் காணுமல், பின்னணியில் இருந்துகொண்டு ஆடம்பரமில்லாமல் வேலை செய்வதிலேயே ராஜாவுக்கு எப்பொழுதும் விருப்பம். பலவிதமான இடையூறுகளுக்கு இடையே, ராஜா, இதுகாறும் பல ஆண்டுகளாக அசையாமல் தளராமல் இவ்வாறு வேலைசெய்திருக்கிறுர்.

வயது எவ்வளவு ஆனுலும், தாம்கொண்ட கொள்கையில் உள்ள நம்பிக்கையைக் கைவிடாதவராகவும், குழந்தையினதைப் போன்ற எளிய உள்ளத்தை இழக்காதவராகவுமுள்ள மனிதர் ராஜா. அவர் நேர்மை மிக்கவர்; திறந்த மனத்தினர்; மனித சமூகத்தின் அடிப்படையான நலனில் பெரிதும் நம்பிக்கைகொண்டவர்; தம்மைப் பற்றிய வரையில், விழுமிய ஒழுக்கத்தை மேற்கொண்டவர்; எனினும், தன்னில் வேறுபட்ட பிறருடைய ஒழுக்கங்களைப் பற்றிக் குற்றங் கூருதவர். உள்ளத்தில் உயர்ந்த லட்சியங்களையே கொண்டுள்ள இத்தகைய மக்கள், வெறுக்கத்தக்க நிகழ்ச்சிகள் நடைபெறும்பொழுது பெரிதும் துன்புறுவார்கள். ராஜாவை அகம்பாவமுடையவர் என்றும், செல்வத்தையும் ஆடம்பரத்தையும் விரும்புகிறவர்என்றும் பலர் நினைக்கின்றுர்கள். இது உண்மையல்ல. அவருடைய பெருங்குறை - அது ஒரு குறையாயின் - அவரிடம் காணப்படும் அபார உணர்ச்சிப் பெருக்கே. பிறரிலும் வேறுபட்டிருந்தமையாலும், பிறர் எளிதில் தவருக எண்ணக்கூடிய நிலையில் இருந்தமையாலும் ஒதுங்கி யிருப்பதைச் சிறுவயதி லிருந்தே அவர் மேற்கொண்டார். இவ்வாறு ஒதுங்கி இருப்பதுதான், செருக்குடையவர்என்று அவரைப் பிறர் தவருகக் கருதுமாறு செய்கின்றது. அவரை நன்கறிந்தவர்கள், அவருடைய சிறந்த குணங்களுக்காகவன்றி (சிற்சில உள), அவரை மனிதத்தன்மை உடையவராகச் செய்யும் அவரது குறைகள், பலவீனங்களுக்காகவே நேசிக்கிருர்கள்.

"நாங்கள் பிரயாணிகள்.

போதும் பாதையோடு பாதையாய் ஒன்றிவிடுகிறோம்.
கால வெள்ளத்தின் மேல் நாங்கள் அமைகிறோம்.
ஆனால், நாணல் தட்டையைப் போலே."

—செசில் டே லியூயிஸ்.

1920-ம் ஆண்டு முதல் என் வாழ்க்கை இடைவிடா மாறுதல்களையும், நிலை யற்ற தன்மையையும்கொண்டிருந்தது; அடுத்து என்ன நிகழுமோ என்றே அறியாதிருந்தேன். முதலில் இவ்வனுபவம் உள்ளக் கிளர்ச்சியை அளித்துவந்தது; ஆனால், நாட்கள் ஆண்டுகள் என இந்நிலையிலாத் தன்மை ஓயாது நீடிக்கவே, சிற்சில வேளைகளில் வேதனை ஏற்பட்டது. இதற்கு மாருக என் மண வாழ்க்கையின் ஆரம்ப காலம் மிக அமைதியாக இருந்தது; ஒருவாறு ஏற்பட்டாலும் சில சிறிய இடையூறுகளைத் தவிர இந்நிலைமை நீடிக்கும் என்றே நான் எண்ணினேன். ஆனல், இது, முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் பட்டதை ஒத்தது.

முதலிற் சில மாதங்கள் வாழ்க்கை அவ்வளவு சுலபமாக இல்லை. மிகப் புராதனமான பழக்க வழக்கங்களும், புதிய இயந்திர நாகரிக மாறுதலும் ஒன்ருேடொன்று மோதி ஒவ்வாத் தன்மையுடன் விளங்கும் பெரிய தொழிற்சாலை நகரமான அஹமதாபாத், நான் அறிந்தே யிராத ஒரு புதிய உலகமாக எனக்குத் தென் பட்டது. வாழ்க்கையைப் பற்றிய லட்சியத்தில், பழக்க வழக்கங்களில், வாழும் முறைகளில் - எல்லாவற்றிலுமே - அஹமதாபாத் நகரம் எனக்குப் பழக்கமான உலகினின்று வேறுபட்டிருந்தது. என் கணவர் வீட்டில் நான் சந்தித்த எல்லாருமே என்மீது பிரியமாக இருந்தார்கள்; எனினும், சில நேரங்களில் எனக்குத் தனிமை யுணர்வும், மனக் கலக்கமும் ஏற்பட்டன. ராஜாமீது நான் கொண்டிருந்ததைப் போன்ற ஆழ்ந்த பேரன்பைப் பெருதிருந்திருப்பேனுயின், புதிய வாழ்க்கை எனக்குக் கஷ்டமாகவே இருந்திருக்கும். நம்பிக்கை யிழந்து ஏக்கம் மிகுந்த காலங்களில் ராஜாவின் அன்பும் நல்லுணர்ச்சியும்;

கஷ்டமான சமயத்தில் அவரது குடும்பத்தாரின் அபிமான மும் எனக்குக் கைகொடுத் துதவின; எப்பொழுதும் உதவிவருகின்றன. ராஜாவுக்கு நான் பன் முறைகளில் குற்ற மிழைத்திருக்கலாம்; ஆனால், ராஜா எனக்குக் குற்ற மிழைத்ததே கிடையாது.

எனக்கு விவாகமான சில மாதங்களுக்குப் பின், ஜவாஹர் எனக் கொரு கடிதம் வரைந்தார்; புதிய வாழ்க் கையில் குறைவு நிறைவுகளைச் சரிப்படுத்திக்கொண்டு செல்ல அது உதவிற்று. அக்கடிதத்தில், "மண வாழ்க் கையைப் புதிதாக மேற்கொண்ட நீ, வாழ்க்கையைப் பல் வேறு நிலைகளில் நின்று நோக்கி, அதன்மூலம் நல் அறிவு பெற வேண்டும். ஆனால், பல பொருள்களும், நீண்ட கால மும் திரும்பப் பெற முடியாதபடி நஷ்டமான பிறகுதான் அறிவு உண்டாகின்றது. சிறை வாழ்க்கை அனுபவமாகிய பெரும் பயனைப் பெற்றவர்கள், பொறுமையின் உயர்வைப் பற்றிமட்டுமாவது அறிந்துகொண் டிருப்பார்கள். அவ் வனுபவங்களைப் பயன்படுத்திக்கொண்டவர்கள், இணங் கிப்போகுந் தன்மையைக் கற்றுக்கொண் டிருப்பார்கள், இது ஒரு பெரும் பேறு. என் செல்வத் தங்கையே, நீ சீக்கிரம் உன் வாழ்க்கையைத் தொடங்கி என்றும் மிகவும் சந்தோஷத்தோடு வாழ்வாயாக!" என்று வரைந் திருந்தார்.

மணமான பின் சில மாதங்கள் வரை உணவைப் பற்றிய பிரச்சினையே எனக்குப் பெரும் பிரச்சினையாய் இருந்தது என்று கூறினால், அது புதுமையாகத் தோன்ற லாம். உணவின் வகைகளில் நான் எப்பொழுதும் கவலைப் படுவ தில்லை; ஆனால், பெரும்பாலான காஷ்மீரிகளைப் போல் எனக்கு மீன்மீதும் இறைச்சிமீதும் பிரியம் உண்டு. அஹமதாபாத்தில் எல்லோரும் கடுமையான மரக்கறி உணவு கொள்வோராய் இருக்கக் கண்டேன். இறைச்சி, மீன், முட்டைகள் கிடைக்க வில்லை; போஜனசாலைகளுக் குச் சென்றுவது சிலவற்றைச் சாப்பிடலா மென்பதற் கும், அங்குள்ளோர் அத்தகைய பழக்க மில்லாதவராக விருந்ததால், உணவுச்சாலைகளில் மேற்கண்ட கறி வகை கள் செய்யப்படுவதே யில்லை. குஜராத்திகளுடைய உணவை நான் விரும்பினேன். ஆனால், காய்கறிகளை மட்டுமே சாப்பிடுவதில் எனக்குத் திருப்தி ஏற்பட வில்லை.

மூன்று மாத காலம் நான் புலால் அருந்தாமல் இருந்தேன். அக்கால முழுதும் நான் அரைகுறைப் பட்டினியாகவே இருந்தேன். பின்னர், புலால் உணவின்றிப் புசிக்கப் பழகிக்கொண்டேன். இப்பொழுது நீண்ட நாட்கள் வரை நான் இவ்வுண வின்றி இருத்தல் கூடும்.

மிகப் பெரும் அளவில் வாணிபத் துறையில் ஈடுபட்டுள்ள அஹமதாபாத் குடும்பங்களில், ராஜாவின் குடும்பமும் ஒன்று. பல ஆண்டுகளுக்கு முன்னர், குழந்தைகளெல்லாம் இளமைப் பருவத்தி லிருந்த காலத்திலேயே ராஜாவின் தந்தையார் இறந்துவிட்டார். மாபெரும் இடையூறுகளுக் கிடையே, ராஜாவின் தாய் தொழிலின் பொறுப்பைத் தாமே ஏற்று, வெற்றியுடன் நடத்தினர். தமது மகன்கள் பெரியவர்க ளாகித் தொழிலின் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் வரையில், அவரே யாவற்றையும் கவனித்துவந்தார். பல சிரமங்களுக் கிடையே, அவ்வம்மை தம் மக்களையும் கவனித்து, அன்பு பாராட்டி, அவர்களுடைய சிறிய தேவைகளையும் கவனித்துவந்தார். மற்ற எல்லா வணிகர்களது குடும்பங்களையும் போன்று, ராஜாவின் குடும்பமும் அடக்க முள்ளதாகவும், நெருங்கிப் பழகும் தன்மை யற்றதாகவும், தனியே ஒதுங்கி நிற்கும் சுபாவ முடையதாகவும் இருக்கிறது. அக்குடும்பத்தினர் தங்கள் மனக் கிளர்ச்சியை எளிதில் வெளியே காண்பிக்கமாட்டார்கள். முதலில் நான் இதை உணராமல் அன்பில்லாத காரணத்தால்தான் அவர்கள் ஒதுங்கியே இருக்கிறார்கள் என்று தவருக எண்ணிக்கொண்டேன்.

ராஜா ஒரு பிரிவினை யாகாத குடும்பத்தைச் சேர்ந்தவர். ஆனால், ஒருவர் விரும்பி மேற்கொள்ளும் வாழ்க்கையில் மற்ருெருவர் தலையிடுவ தில்லை. அக்குடும்பத்தினர் நெருங்கிப் பிணைக்கப்பட்டவர்களாய் இருக்கிறார்கள். வியாபாரத் தொடர்பால்மட்டு மன்றி, ஆழ்ந்த அன்பாலும் பிணைக்கப்பட்டிருக்கின்றார்கள். அஹமதாபாத்தில் உள்ள வணிகர் சமூகம் குறுகிய மனப்பான்மை உடையதாயும், பழமையை விடாப்பிடியாய்ப் பற்றியதாயும், தன்னலம் படைத்ததாயும் இருப்பதோடு, ஒருவரின் சொந்த வாழ்க்கையில் அநாவசியமாகத் தலையிட்டுப் புண்படுத்துவதா யுள்ள தனது கௌரவங்களுக்குப் பிறர் இசைந்து செல்ல வேண்டு மென எதிர்பார்ப்பதாயும்

இருக்கின்றது. மேற்கண்ட ஒருவர், ஒரு பொதுக் குடும்பத்தைச் சேர்ந்தவராக இருந்துவிட்டால், துன்பம் மிக மிக அதிகமாகும். எனவே, குறைவு நிறைவுகளைச் சரிப்படுத்திக்கொண்டு செல்வது எங்களுக்குச் சிரமமாகவும், நீண்ட காலம் பிடிப்பதாகவும் இருந்தது.

பண்டைக் காலத்தில் பொதுக் குடும்ப முறை உபயோகமாகவும், அக்காலத்திய சமூக அமைப்புக்குப் பொருத்தமாகவும் இருந்தது என்பதில் சந்தேக மில்லை. ஆனால், அவ்வமைப்பு இப்போது விரைவாகத் தகர்ந்து வருகின்றது; பழைய உருவத்தில் இனி அது நிலைத் திருக்க முடியாது. ஓயாத போராட்டம் ஒன்று இந்தியா முழுதும் நடைபெற்றுக்கொண் டிருப்பதாகத் தெரிகிறது. எல்லோரும் ஒரே மாதிரியான பழக்க வழக்கங்களைக் கைக்கொள்ள வேண்டு மெனப் பொதுக் குடும்பம் வற்புறுத்தியது; ஆனால், தனிப்பட்டவர்களோ, தாங்கள் விரும்பும் வாழ்க்கையை மேற்கொள்ளத் தங்களுக்குள்ள உரிமையை வற்புறுத்தினார்கள். இப்போராட்டத்திற் கிடையே, இயற்கையாகவே, குடும்பப் பிணைப்பு நாளுக்கு நாள் தளரத் துவங்கிற்று. இப்போராட்டம் தனிப்பட்ட மக்களின் வாழ்க்கையில்மட்டு மன்றி, நாட்டின் வாழ்க்கையிலும் நுழைந்துகொண்டது. இந்நிலைமை, இன்று உலகத்தை ஆட்டுவிக்கும் சக்திகளோடு பொருந்துவதாக இல்லை. பொதுக் குடும்ப முறை நாளடைவில் நசித்துப் போய்விடு மென்பதே என் துணிபு; ஆனால், பழமையில் ஆழ வேரூன்றிய ஒரு மாபெரும் நாடாக இந்தியா இருப்பதால் இதற்குச் சிறிது காலம் பிடிக்கும்.

குடும்பத்தில் - சிறப்பாகச் சிறிய குடும்பங்களில் - ஒன்றுபட் டிருத்தல் மிக முக்கியமானதே. ஆனந்த பவனத்தில், எனது பெற்றோர்களும், ஜவாஹரும், ஜவாஹர் குடும்பமும், என் தமக்கையும், நானும் ஒரே குடும்பமாகவே வாழ்ந்துவந்தோம். ஆனால், எங்களில் ஒருவரை மற்றவரோடு பிணைக்கும் கடுமையான விதி எதுவும் எப்போதுமே இருந்த தில்லை. நாங்கள் ஒரே வீட்டில் ஒன்றாக வாழ்ந்துவந்தோம். ஆனால், ஒவ்வொருவரும் அவ ரவருக்குப் பிடித்தமான வாழ்க்கையை நடத்திவந்தோம். ஒருவரோ டொருவர் பிணக்குக்கொள்வ தில்லை. அன்பின் தளையா லன்றி வேறெதனாலும்

நாங்கள் பிணைக்கப்பட் டிருக்க வில்லை. அது எல்லா வற்றிலும் வலிமை பொருந்திய தல்லவா? பொதுக் குடும்பங்களில் உள்ளவர்களுக் கிடையே யுள்ள பொருளா தாரப் பிணைப்பு, நாளடைவில் உண்மை விலங்காகவே மாறிவிடுகிறது. இதன் பயனாக, தனிப்பட்ட ஒருவரின் வளர்ச்சியும் முன்னேற்றமும் தடைப்படுகின்றன.

எனது இத்தகைய அபிப்பிராயங்கள் இயற்கையாகவே ராஜாவின் குடும்பத்தா ருடைய கொள்கைகளோடும், சில வேளைகளில், ராஜாவின் கொள்கையோடுமே முரண்பட லாயின. பல விஷயங்களில் எங்களுக்குள் ஒருமைப்பாடு இருக்க முடியாது என்பதை அறிந்தோம். சில சமயங் களில் எங்கள் அபிப்பிராயபேதங்களினால் இடைஞ்சல் விளைந்தது. இங்கிலையில், அன்றும் இன்றும் ராஜா காண்பித்துவரும் பொறுமையும், இணக்கமும் சாலச் சிறப் புடையவை; நிகரற்றவை. ஆரம்பத்தில் மிகக் கஷ்டமா யிருந்த சில மாதங்களில், அவை எனக்குப் பெரிதும் துணைசெய்தன.

விவாகமான பின் சில மாதங்கள் வரை நாங்கள் ராஜாவின் குடும்பத்தோடு வாழ்ந்துவந்தோம். பின்னர், எங்களுக் கென்றே சொந்தமாக அமைத்துக்கொண்ட ஒரு வீட்டில் வசிக்கலானோம். அது சிறியதே யாயினும், மிகவும் நவீனமான முறையில் அமைந் திருந்ததால், நான் அதை விரும்பினேன். குடும்பத்தை நடத்தும் பழக்கம் எனக்கு இல்லா திருந்ததால், சிறிது குழப்பமும், சில வேளைகளில் கஷ்டமும் ஏற்பட்டன. ஆயினும், பொது வாகத் தனிக் குடித்தனம் நடத்துவதில் ஏதோ ஒரு சந்தோஷந்தான் இருக்கிறது. என் வாழ்க்கையில் பெரும் பகுதியை எல்லாச் சௌகரியங்களும் நிறைந்த ஒரு பெரிய வீட்டில் கழித்துவிட்டு, இப்பொழுது ஒரு சிறிய வீட்டில் எளிய முறையில் வாழ்வது என்பது ஒரு புதிய அனுபவமாகவே இருந்தது.

என் கணவர் தொழிலில் ஈடுபட் டிருந்த காலத்தில் தனித் திருப்பது கொஞ்சம் கஷ்டமா யிருந்தது. பம்பாயி லுள்ளவர்க ளிடையே எனக்குப் போதிய பழக்கம் இல்லை. ராஜாவின் நண்பர்களைத் தவிர, பெரும்பாலும் எனக்குத் தெரிந்தவர்கள், என் தந்தையின் பழைய நண்பர்களும்,

அவர்களது குடும்பங்களுமே ஆகும். விரைவில் நட்புக் கொள்ளும் ஆற்றல் என்னிடம் இருந்ததால், விரைவிலேயே பலரோடு பழகினேன்; சிலர் எனக்கு நண்பரானார்கள். வாழ்க்கை திருப்தியாகவும், மகிழ்ச்சியாகவும் நடைபெற்றது.

1934-ம் ஆண்டு மாரிக்காலத்தில் ஜவாஹர் மீண்டும் சிறைப்பட்டார். ஒவ்வோராண்டிலும் பெரும் பகுதி சிறையில் கழிப்பது அவர் வழக்கமாகிவிட்டது. பல மாதங்களாக நாங்கள் ஜவாஹரைப் பார்க்கவில்லை. நானும், ராஜாவும் ஜவாஹரைப் பார்க்க விரும்புகிறோமா என்று கமலா எழுதிக்கேட்டாள். அவள் ஆலோசனையை மிகவும் ஆவலோடு ஒப்புக்கொண்டோம். ஜவாஹரைப் பேட்டிகாண ஏற்பாடு செய்யப்பட்டது. கமலாவைச் சந்தித்து, அவளுடன் டேராடுன் சிறைச்சாலைக்குச் செல்வதென முடிவுசெய்தோம். குறிப்பிட்ட நாளில் சிறைச்சாலையை அடைந்து சுமார் அரை மணி நேரம் காத்திருந்த பின்னர், ஜவாஹர் இருந்த அறைக்கு எங்களை அழைத்துச் சென்றார்கள். சிறையில் உள்ளவர்களை, சிறைச்சாலைக் காரியாலயத்தில் கண்டுபேசுவதுதான் வழக்கம். ஆனால், ஜவாஹர் இருந்த அறை வரிசை வெளியே இருந்ததால், அவர் இருந்த அறையிலேயே கண்டுபேச எங்களை அனுமதித்தார்கள். அதுவரை ராஜா சிறைச்சாலைகளின் அருகாமையிற்கூடச் சென்றவரல்லர்; முதன்முதலாக, அப்பொழுதுதான் அவர் சிறைச்சாலையைப் பார்த்தார். எனக்குத் தெரிந்த சில சிறைச்சாலைகளைப் போன்று அவ்வளவு பயங்கரமானதில்லை டேராடுன் சிறைச்சாலை; ஆனால், இந்தியச் சிறைகளின் அருகில்கூடச் சென்றிராத ஒருவருக்கு, டேராடுன் சிறையும் கொடுமை நிறைந்ததாகத்தான் தோன்றும். ஒரு நாற்காலி, ஒரு மேஜை, ஓர் இரும்புக் கட்டில் இவற்றைமட்டுமே கொண்ட ஜவாஹரின் அறையில் நாங்கள் உட்கார்ந்தோம். சில புத்தகங்கள் அங்குமிங்குமாகக் கிடந்தன; ஒரு மூலையில் ராட்டை ஒன்றிருந்தது. மப்பும், குளிரும், காற்றுமாக இருந்த அந்நாள் மனத்திற்கு உற்சாகத்தை அளிக்கக் கூடியதாக இல்லை; அறையும் சந்தோஷமற்றதாகக் காட்சியளித்தது. என்றும்போல், ஜவாஹர் எங்களைத் தம் ஒளி மிகுந்த

புன்முறுவலோடு வரவேற்ருர்; எனினும், அவர் உடல் நலம் குன்றியவராகவும், மெலிந்தும் காணப்பட்டார். எங்கள் அன்பிற் குரியவர்களைச் சிறைகளிற் சென்று பார்ப்பதிலும், அவர்களுடைய மாறுபட்ட தோற்றங் களைக் காண்பதிலும் எனக்கும், கமலாவுக்கும் பழக்கம் உண்டு. ஆனல், ராஜாவுக்கு எல்லாம் புதுமையாகவே இருந்தன; அந்த இடத்தையும் மற்றவற்றையும் கண்டு அவர் திகைத்துப்போனுர். நானும் கமலாவுமே ஜவாஹரோடு பேசிக்கொண் டிருந்தோம்; ராஜா கடைசி வரை வாய் திறவாது உட்கார்ந்துகொண் டிருந்தார். வீடு திரும்பினதும், ராஜா ஒருவரோடும் ஒன்றும் பேசாமல் தம் அறைக்குப் போய்விட்டார். சிறிது நேரமானதும், அறைக்குச் சென்றவர் திரும்பி வராததால், காரணத்தை அறிய நான் உள்ளே சென்றேன். ராஜா துக்கத்தில் ஆழ்ந்தவராய்த் தம் படுக்கையில் படுத்திருக்கக் கண்டேன். அதன் பிறகு என் கணவர் ஜவாஹரைச் சிறைச்சாலையில் பன்முறைகள் பேட்டிகண் டிருக்கிருர். ஆனல், சிறைச்சாலேக்குச் சென்று திரும்பும் ஒவ்வொரு தடவையும் சிறிது வருத்தமும், உற்சாக மின்மையும் அவரிடம் அப்போதும் காணப்பட்டன. நம் அன்பிற் குரியவர்களை ஒவ்வோர் ஆண்டும் சிறைச்சாலேகளில் பார்ப்பது என்பது மகிழ்ச்சி தரத்தக்கது அன்று; அது தவிர்க்க முடியாத விசனத்தையே அளிக்கின்றது; மேலும், சில சமயங்களில், சந்திக்கமுடியா திருப்பவர்களோடு கூடியிருப்பதற்கு ஏக்கத்தையும் உண்டாக்குகிறது. எனினும், இதனல், நாம் ஆதர வற்றவர்களாகவோ அன்றி மன முடைந்தவர்களாகவோ உணராது, மேன் மேலும் போராட்டத்தில் முனேந்து வேலே செய்யும் ஊக் கத்தையே பெறுகிருேம். இன்று, ஆயிரக்கணக்கான தோழர்களோடு ராஜாவே சிறையில் இருக்கிருர். நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்து ஆண்டு ஒன்றுக்கு மேற்பட்டு விட்டது. எனக்குத் தனிமை வருத்தம் மேலிட் டிருப்ப தையும், அவரைக் காணவேண்டும் என்ற ஏக்கம் உண்டா யிருப்பதையும், ராஜா, என் கடிதங்களின் போக்கி லிருந்து ஊகித்துக்கொண்டு, என்னேக் கண்டித்து என் பலவீனத்தைக் காண்பித்தமைக்காக நான் வெட்க முறும்படி செய்திருக்கிருர்.

பல ஆண்டுகள் ராஜா அரசியல் துறையில் நேர்முகமாய் ஈடுபடாமல் இருந்தார்; ஆனால், சம்பவங்கள் விரைந்து நிகழ்ந்தன; எனவே, பொது வேலையில் இறங்காமல், தனித்திருக்க முடியாதவராய், அவர் நாளடைவில் தீவிரமாக இறங்கிவிட்டார். இதற்கு நான்தான் காரணமென்றும், என்னால்தான் வழக்கறிஞர் வேலையை அவர் விட்டுவிட்டார் என்றும் பலர் நினைக்கிறார்கள். அவர்கள் அப்படி நினைப்பது முற்றிலும் தவறு. அரசியல் என்றால், நிலையின்மை, மாறுதல், சிறைவாசம், நீண்ட காலப் பிரிவு என்று பொருள்படும் என்பது எனக்கு மிக நன்றாகத் தெரியும். இவற்றை நான் பதின்மூன்று ஆண்டுகள் அனுபவித்திருக்கின்றேன்; ஆதலால், புதிதாய்ப் பெற்ற அமைதியையும், திருப்தியையும் இழக்க நான் விரும்பவில்லை. எனது ஆண் குழந்தைகள் மிகவும் சிறியவர்களாய் இருந்ததால், நான் அரசியலில் தீவிரமாக இறங்க ஆசைப்படவில்லை. குடும்ப வாழ்க்கை, நிலையான இருப்பிடம், காரியக்கிரமங்கள் இன்றி ஜவாஹர், சுவரூபுடைய குழந்தைகள், சிசுக்களாய் இருந்த காலத்தில் எவ்வாறு கஷ்டப்பட்டன என்பதை நான் கண்டிருக்கிறேன். எனினும், சுற்றி நடைபெற்ற நிகழ்ச்சிகளை என்னால் புறக்கணிக்க முடியவில்லை. எனவே, என்னால் இயன்ற சிறு பங்கை நான் செய்தேன். போராட்டத்தில் முழு மனத்தோடு ஈடுபட ராஜா முனைந்துவிட்டார்; அவரைத் தடைசெய்வது நேர்மை யல்ல என நான் எண்ணினேன். எனவே, சிறிது கால இன்ப வாழ்க்கைக்குப் பின் மீண்டும் சிறைவாசத்தால் ஏற்படக் கூடிய வழக்கமான பிரிவை ஏற்க நான் துணிவுகொண்டேன்.

நாங்கள் பம்பாயில் வசித்தோம்; இப்பெரிய பட்டினத்தின்மீது எனக்குப் பிரியம் உண்டு. அலஹாபாத் நகரத்தின்மீது எனக்குப் பிரியம் அதிகம்; அந்தப் பிரியத்துக்குக் காரணம், அது என் பிறப்பிடமாய் இருந்ததென்பதன்றி வேறல்ல. பெரும் நகரத்தின்மீது எனக்கு ஆசை உண்டு. இதற்கு என் வாழ்க்கையின் ஒரு பாதியை நான் ஒரு சிறு நகரத்தில் கழித்தமை காரணமாயிருக்கலாம். பம்பாய்ப் பட்டினம் எனக்குப் பற்றுதல், நட்பு ஆகியவற்றை அளித்ததால் அதன்மீது எனக்கு ஆசை ஏற்பட்டது. கவர்ச்சி மிக்க அப்பட்டினத்தினிடத்தில்,

ஆவலை அதிகப்படுத்தும் தோற்றம் இருந்தது. கடல் எனக்குப் புதுமையானது; அது என் உள்ளத்தைக் கவர்ந்துகொண்டது. கடலைப் பற்றி நான் அறிந்திருந்த தெல்லாம், ஐரோப்பாவுக்குச் சென்றபோது அதைப் பார்த்தது ஒன்றே. கடலுக்கு மிகவும் அருகில், முன் எப்போதும் நான் நீண்ட காலம் வசித்த தில்லை. ஆனால், பம்பாய்ப் பட்டினத்தில் மனமாரக் கடலைக் கண்டு களித் தேன்; அலைகள் ஒன்றோடொன்று மோதிப் புரளுவதை யும், சினங்கொண்டு அவை பாறைகளில் தாக்குவதையும் பார்த்துக்கொண் டிருப்பதில் நான் சலிப் படைந்த தில்லை.

எனக்குப் பொழுது போக வில்லை; எனவே, சமூகச் சீர்திருத்த வேலைகளில் ஈடுபடலானேன். பல்வேறு பெண் கள் சங்கங்களிலும் அங்கம் பெறலானேன். நாங்கள் தாழ்த்தப்பட்டவர்க ளிடையே வேலைசெய்தோம்; வேலை, மனத்திற்கு உற்சாக மளிக்கக் கூடியதாய் இருந்த தாயி னும், அவர்களின் கொடிய வறுமையையும், துன்பம் நிறைந்த வாழ்க்கையையும் கண்டு, அவற்றை முற்றிலும் அகற்ற முடியாமல் இருக்கும் நிலைமையை நினைந்து மனம் மிக வருந்தினேம்.

1935, ஜனவரி மாதத்தில் அம்மா எங்களைப் பார்க்க வந்தாள். ஜவாஹர் சிறையில் இருந்தார். கமலா கல்கத்தாவில் சிகிச்சை பெற்றுக்கொண் டிருந்தாள். வார்தாவுக்கு வந்து சில நாட்கள் தங்கிப் போகுமாறு அம்மாவைப் பாபு கேட்டுக்கொண் டிருந்தார்; அலஹா பாத்தில் அவள் தனிமையாக இருந்தமையால், வார்தா செல்ல முடிவுசெய்தாள். வார்தாவி லிருந்து அவள் பம்பாய்க்கு வந்தாள். என் புதிய வீட்டிற்கு அன்றுதான் அவள் முதன்முறையாக வந்தாள். இது எனக்கு அள வற்ற மகிழ்ச்சியை விளைத்தது. ஒரு மாதம் என்னுடன் தங்கியிருக்க அவள் திட்டம்போட் டிருந்தாள்; ஆனால், துரதிர்ஷ்டவசமாக மூன்று வாரத்திற்குப் பிறகு, அவ ளுக்குத் திமிர்வாத நோய் ஏற்பட்டது. இதனால் இரண்டு மாதங்கள் வரை அவள் மிகப் பயங்கரமான கஷ்டத்திற் குள்ளானாள். என் தமக்கையும் பெரிய தாயும் பம்பாய்க்கு வந்துவிட்டார்கள். அம்மா, சாவுக்கும் வாழ்வுக்கும் போராடிக்கொண் டிருந்த அந்தக் காலத்தில், நாங்கள்

எல்லோரும் இராப் பகலாய் ஏக்கத்தோடு இருந்து வந்தோம். நோயிலிருந்து அம்மா உடல் நலன் பெற்றுவந்த அந்தச் சமயத்தில், அதாவது, 1935, பிப்ரவரி முதல் தேதி, என் மகன் ஹர்ஷா பிறந்தான். அம்மாவுடைய சந்தோஷத்திற்கு அளவே இல்லை. அண்ணாவுக்கும் தமக்கைக்கும் பெண் குழந்தைகளே இருந்தமையால், அம்மாவுக்கு ஹர்ஷாதான் முதற் பேரன் ஆனான்.

சிறுகச் சிறுக, அம்மாவின் உடல், நல மடைந்துவந்தது. ஆனால், அது முடிவு காலத்தின் துவக்கமாகவே இருந்தது. தன் பழைய வலிமையை அவள் எப்போதுமே அடைய வில்லை.

சில காலமாய் நோய்வாய்ப்பட்டிருந்த கமலாவின் நிலைமை, 1935, ஏப்ரலில் கவலைக்கிடமாக மாறிற்று. பிரயாணம்செய்வதற் குரிய ஆற்றல் ஏற்பட்டதுமே, ஸ்விட்ஸர்லாண்டுக்குச் சென்று வசிக்குமாறு வைத்தியர்கள் கமலாவுக்கு யோசனை கூறினார்கள். ஐக்கிய மாகாணத்தில், பொவாலி என்னும் ஒரு சிறிய மலை வாசஸ்தலத்தி லுள்ள ஒரு சுகாதார விடுதியில் அப்போது கமலா வசித்துவந்தாள். அவள் அவ்வூரைவிட்டுப் புறப்படுவதற்கு முன்னர், அவளைக் கண்டு, அவளுடன் சில காலம் தங்கியிருக்க, நானும் ராஜாவும் முடிவுசெய்தோம். அதன்படி நாங்கள் எங்கள் இரண்டு மாதக் குழந்தையையும் எடுத்துக்கொண்டு பொவாலி சென்றோம். நாங்கள் அவளோடு ஒரு மாதம் தங்கியிருந்தோம். பின்பு, அவள் அவ்வூரைவிட்டுப் புறப்பட்டுவிட்டாள். அவளை மறுபடி சந்திக்க முடியாமலே போய்விடு மென்று அப்போது நாங்கள் சிறிதுகூட எண்ண வில்லை. ஓராண்டு சென்றதும் கமலா இறந்துவிட்டாள்.

கமலா இறந்த செய்தி கிடைத்து நான்கு நாட்களுக்குப் பிறகு, எங்கள் குழந்தை அஜித் பிறந்தான். அஜித் பிறந்தது எங்களுக்கு மிகுந்த சந்தோஷத்தை அளித்திருக்கும்; ஆனால், கமலாவின் மரணத்தால் எங்கள் வாழ்க்கையில் இருள் கவிந்தது; கமலாவின் இறப்பால் இடிந்த எங்கள் உள்ளங்கள், குழந்தையின் பிறப்புக்காக மலர்ச்சி யடைய மறுத்தன. எனினும், அவனுடைய தோற்றம் எங்களுடைய துக்கத்தை ஓரளவு குறைத்து ஆறுத லளித்தது என்றே நான் நினைக்கிறேன்.

*"அழகிற் சிறந்தனவே அழிவன விரைவில்
அழிவின் பின்னெழும் அவற்றின் வாசம்
ஆயினும் ரோஜா மலரின் அழகில்
நெஞ்ச மிழந்து நின்றவன் தனக்கு
ரோஜா மணத்தினும் கசப்பது முளதோ."*

— **பிரான்ஸிஸ் தாம்ப்ஸன்.**

ஆனந்தபவனத்தில் என் தந்தை அளித்த விருந்தின் போது நான் முதன்முதல் கமலாவைக் கண்டேன். அப்பொழுது நான் மிகவும் சிறியவளாய் இருந்தமையால், விருந்தில் கலந்துகொள்ள வில்லை. ஆனால், வெளி நடையில் இருந்தபடியே விருந்து நிகழ்ச்சியை நான் பார்த்துக் கொண் டிருந்தேன். என் அத்தை கமலாவைச் சுட்டிக் காண்பித்து, "அந்தப் பெண்ணைப் பார்த்தாயா? நீ அவளை விரும்புவாயா? அவள் தான் உன் அண்ணனை மணந்து கொள்ளப்போகிறாள்" என்றாள். என் அத்தை காண்பித்த பக்கம் நான் பார்த்தேன். மேஜையின் அருகில், சில பேர்களோடு, மெல்லிய, உயரமான ஒரு பேரழகி உட்கார்ந்திருந்தாள். அண்ணன் மனைவி என்பதன் பொருள் என்ன வென்பதை நான் முற்றிலும் தெரிந்துகொள்ள வில்லை யென்றாலும், நம்முடன் இருக்க அவள் வந்திருக்கிறாள் என்ற அளவில் எனக்குப் புரிந்துவிட்டது. இன்னும் வயதிற் குறைந்து, என் வயதினளாய் இருப்பின் நலமென்று நான் நினைத்தே னெனினும், மற்றொரு சகோதரியை அடைவதில் அக மகிழ்ந்தேன். அப்போது பதினேழு வயதையே பெற்றிருந்த கமலாவை, இளமையும், மதுரமும் நிறைந்த வடிவத்தில் கண்ட முதல் தோற்றம் என் நினைவி லிருந்து என்றும் அகன்றதில்லை.

சில மாதங்களுக்குப் பின் ஜவாஹரின் விவாகம் டில்லியில் நடைபெற்றது. கமலாவும் எங்களோடு வசிக்க வந்துசேர்ந்தாள். தங்களது அழகிய மருமகளை என் தாய்தந்தையர் மிகவும் பெருமையோடு பிறருக்குக் காண்பித்துவந்தது எனக்கு நன்றாக நினைவு இருக்கிறது. அழகே அன்றி, நல்ல உடல் வளமும் பெற்றிருந்தாள் அவள். அன்று அவளைக் கண்டவர்கள், அவள், தன் வாழ்க்கை

யின் பெரும் பகுதியை நோய்ப் படுக்கையிலேயே கழிப்பா ளெனக் கருதியிருக்கமாட்டார்கள். கமலா - ஜவாஹரின் இல்லற வாழ்க்கை இனிதாகவே ஆரம்பமாயிற்று. அவர் களின் எதிர்காலம் துன்பமாகிய இருட்டுக்கு இடமில்லா மல், இன்பமாகிய பேரொளியை அளிப்பதாகக் காணப் பட்டது. சில ஆண்டுகள் அவர்கள் இன்பம் துய்த்தார் கள். பிறகு, திடீரென மாறுதல்கள் உண்டாயின. அரைப் பட்டினி கிடந்த தோற்றத்தை யுடைய ஒரு மெலிந்த மனிதர், எங்கள் வாழ்க்கையில் தலையிட்டதோ டன்றி, மற்றும் பலருடைய வாழ்க்கைகளிலும் தலையிட்டு நிகழ்ச்சிகளின் போக்கிலேயே ஒரு பெரிய புரட்சியை விளைத்தார். இதன் பயனாய் ஜவாஹரும், என் தந்தையும் அரசியலில் ஈடுபடலானார்கள்; தொடர்ந்து எங்க ளிடையே தலைகீழ் மாறுதல்கள் உண்டாயின. மெலிந்த அம்மனிதர் காந்திஜிதான். எங்கள் குடும்பத்தைச் சேர்ந்த மற்ற எல்லோரையும் போன்று, கமலாவும் தன் சுகபோகங்களை எல்லாம் துறந்து, காந்திஜியின் உண்மை யான சிஷ்யை யானாள். அவளிடத்தில் அவர் அதிகப் பிரியம்கொண் டிருந்தார்; அவளும், அவரையும், மிகவும் அருமையான அவருடைய கொள்கைகளையும் அவ்வாறே நேசித்தாள்.

கஷ்டம், துக்கம் இவற்றைக் கமலா என்றும் அறி யாள். விவாகமாவதற்கு முன்னும், விவாகமான பின் னும் நாளை என்ன நிகழும் என்பதைப் பற்றிய கவலையே இல்லாதவளாய்ப் பாதுகாப்பும், சுகமும் நிறைந்தவளா கவே அவள் வாழ்ந்துவந்தாள். திடுமென இவை யாவும் மாறிவிட்டன; கமலாவின் வாழ்க்கையில் நிலையின்மை யும், பிரிவும், மனத்துயரும், உடற்கேடும் ஏற்படலாயின. அசையாத உறுதியோடும் புன்சிரிப்போடும் யாவற்றை யும் கமலா எதிர்த்துநின்றாள். நம்மிற் பெரும்பான்மை யோர், நாம் விரும்பியவாறு விஷயங்கள் நடைபெறாவிடில் விதியை நொந்துகொள்வது போல், கமலா தன் விதியை நொந்துகொள்ள வில்லை; ஒரு நாளும் அவள் தன் வாய் திறந்து குறை அல்லது அதிருப்தியைத் தெரிவித்ததை நான் கேட்டதில்லை. நாட்டிற்குத் தம் வாழ்க்கையைத் தாரைவார்த்துக்கொடுக்க ஜவாஹர் துணிந்ததும், கமலா ஒரு வினாடிக் காலம் தாழ்த்தினாளல்லள்; உடனே

கணவனோடு தானும் இறந்துவிட்டாள். தன்னைப் பற்றி எட்டுணையும் சிந்திக்காது, தன் நாட்டைப் பற்றியே சிந்தனைசெய்துவந்த, தளராத ஆற்றலைப் படைத்த, கண்டு கேட்டிராத அளவில் தீரம் பெற்ற, ஒரு வீராதி வீரரை நமது இந்தியத் தாய் என்றாவது பெற்றிருந்தாள் எனக் கூறுவதாயின் அவ் வீரர் கமலாதான். கமலாவைப் பற்றி மிகுதியாக யாரும் அறியமாட்டார்கள். என் நண்பர் ஒருவர் கமலாவைப் பற்றி எழுதியிருந்ததுபோல், 'அவளுடைய வாழ்க்கை ஒரு நெய் விளக்கின் பிரகாசமான சுவாலையை ஒத்தது. ஆடி ஆடிச் சுவாலைவிட்டெரிந்த அது, வாழ்க்கை முழுதும் மிகப் பெரிய அளவில் பிரகாசத்துடன் எரிந்துகொண்டிருந்தது; நெய் குறைந்து வறண்டதும், அவியத் தொடங்கி அமைதியுடன் மறைந்தது.' 'தன் அன்பர்களைக் கடவுள் இளமையிலேயே அழைத்துக் கொள்கிறார்' என்னும் சொல்லுக்கிணங்க, கமலா இளமையில் இறந்துவிட்டாள். அவளை ஒருவரும் விரும்பாமலிருக்க முடியாது; அவளுடைய திடத்தைப் பாராட்டாமலிருக்க முடியாது. பேராற்றலும் திருவும் படைத்த தன் கணவர், மாமனார் போன்றவர்களிடையே வாழ்ந்தும், அவர்களது புகழால் மறைந்துவிடாது, அரசியல் வாழ்வில் தனக்கென்று நிரந்தரப் புகழை நிறுவிக்கொண்டாள், இளமையிலேயே கூற்றுவன் இவ்வாறு கொடுமையுடன் அவள் உயிரைக் கொண்டுபோயிராவிட்டால், அவள் புகழ் எங்கும் பரவியிருக்கும். பார்வைக்கு அவள் வலிமையில்லாதவளைப் போலத் தோன்றினாளெனினும், வலிமையும் உண்மையும் நிறைந்த ஒழுக்கம் உடையவள். பெருமக்களுக் குரிய தோற்றப் பொலிவை வழங்கிய கண்களுக்கும், அமைதியான குணத்திற்கும் பின்னே அவளிடம் விளங்கிய வலிமையை, அவளை நன்கறிந்தவர்களன்றி, மற்றவரில் ஒரு சிலரே அறிந்திருந்தனர். நற்குணங்கள் பல நிறைந்தவள் அவள்; பல குறைகளும் உடையவள் தான். குறையென்னவெனில், அவள் ஒரு குழந்தையைப் போன்றவள். தன் கன்னிப் பருவத்தைக் கடந்த ஒரு பெண்ணாக அவள் தோன்றவில்லை. அநேக சமயங்களில் தன் உடல் நலத்தை ஒரு சிறிதும் பேணாது நடந்துகொண்டாள். இது குறித்து யார் என்ன சொல்லியும் அவள் தன் உடல் நலத்தைப் பேணவில்லை. உயிருக்கே ஆபத்தை

விளைவிக்கக் கூடிய பல நோய்களால் பீடிக்கப்பட்டும் தளர்ச்சியான தோற்றத்தை அவள் பெறவில்லை. கடைசி வரை, மணம்புரிந்துகொண்டபோது இருந்த இனிய இளமைத் தோற்றத்தை இழக்காதவளாகவே அவள் காணப்பட்டாள். நோய், அவள் உள் உறுப்புக்களைச் சீர்குலைத்தது. ஆனால், நான் அறிந்த வரை எப்போதுமே அவள் உடலின் வெளிப் பாகத்தில் மாறுதலே ஏற்படவில்லை.

கமலாவின் கலியாணத்திற்குப் பின் பல ஆண்டுகள் வரை அவளை நான் அதிகமாகப் பார்க்கவில்லை. புது மணப் பெண் என்ற முறையில் அவளுக்கு நாடோறும் விருந்துகள் அளிக்கப்பட்டன. பின்னர், தாய் உடல் நலமின்றி இருந்தமையால், அப்பாவின் விருந்தினர்களுக்கு அவளே உபசாரம் செய்யவேண்டியதாயிருந்தது. 1926ல் நாங்கள் ஐரோப்பாவில் இருந்தபொழுதுதான், நான் கமலாவைப் பற்றி நன்ருக அறிந்தேன்; நாங்கள் இருவரும் நெருங்கிய நண்பர்களும் ஆனேம். வாழ்க்கையில் எங்களுக்குச் சம்பந்தமுள்ள பல விஷயங்களைப் பற்றியோ, அன்றி, நாங்கள் படித்ததும் கேட்டதுமான பல விஷயங்களைப் பற்றியோ, சிறப்பாகப் பெண் ணுரிமையைப் பற்றியோ நாங்கள் நீண்ட - சில சமயங்களில், மிகக் கடுமையான - விவாதங்கள் செய்வதுண்டு. ஆனால், விவாதம் எப்போதும் சந்தோஷமாகவே முடியும். ஐரோப்பாவில் இருந்தபோது பெரும்பாலும் அவள் படுக்கையிலேயேயிருந்தாள். அவள் எங்களுடன் சுற்றுப் பிரயாணம் செய்யக் கூடிய நிலையிலிருந்த காலமான சில மாதங்களில், எங்களிடமிருந்த தோழமை மிக்க மகிழ்ச்சிகரமானது. புதியவற்றைப் பார்ப்பதிலும், புதிய விஷயங்களைப் பற்றி அறிந்துகொள்வதிலும் எப்பொழுதும் கமலாவுக்கு ஆவல் அதிகம். விருந்துகளிலும், நண்பர்களாகக் கூடி. வெளியே சென்று வேடிக்கையாகக் கூட்டுணவு கொள்வதிலும் அவள் மிக நன்ருக இன்பம் துய்த்தாள். எவ்வளவு களைத்திருந்த போதிலும் சந்தோஷத்தை யிழந்தவளாகக் காணப்படமாட்டாள். பிறர் எவ்வளவு கோபமூட்டினபோதிலும், அவள் குறை கூறமாட்டாள். ஐரோப்பாவிலிருந்து திரும்பியதும், நாங்கள் இருவரும் அரசியலில் தீவிரமாக ஈடுபட்டு

உழைக்கலானோம். இதன் பயனாய் எங்கள் நட்பு மேலும் முதிர்ச்சிபெற்றது. இந்தத் துறையிலும் கமலாவின் ஆற்றலைக் கண்டு நான் வியப்படைந்தேன். அவளைவிட நல்ல உடல் நலனுடன் இருந்த நான் அடிக்கடி சோர்ந்து களைத்துப்போவதும், வீட்டில் தங்கிவிடுவதும் உண்டு; ஆனால், அவள் அங்ஙனம் செய்யமாட்டாள். அதி காலையில் பெண் தொண்டர் படைகளுக்கு அணிவகுப்புப் பயிற்சி அளித்து, பின்னர், காலை எட்டு மணிக்குப் பரதேசத் துணிக் கடை மறியல் வேலையைச் செய்ய ஆரம்பிப்பதற்கு, குளிர் மிகுந்த மாரிக் காலத்தில் காலை ஐந்து மணிக்கே அவள் எழுந்து தயாராகிவிடுவாள். குளிர் மிகுந்த மாரிக் காலம் முழுதும், கமலா நாடோறும் தொடர்ந்து இவ்வாறு வேலை செய்துவந்தாள். பின்னர், கோடை காலம் பிறந்தது; கோடையிலும், கண்ணைப் பறிக்கும் வெய்யிலையும், கொடிய வெப்பத்தையும் பொருட்படுத்தாது கமலா தன் கடமையைச் செய்து கொண்டுதான் இருந்தாள். நாங்கள் பலர் இவ்வாறே வேலை செய்தோம்; எனினும், அடிக்கடி அதிருப்தியினால் நாங்கள் முணுமுணுப்போம்; களைத்துப்போவோம்; மனம் சலிப்போம். ஆனால், கமலா அப்படியல்ல; அவளுடைய உறுதியும் உற்சாகமும் ஒருகாலும் குன்றியதில்லை. இவ்வாறு அவள் உழைத்து, தன் இறுதிக் காலத்தை விரைவுபடுத்திக்கொண்டாள். அவளது ஆன்ம பலம் மிக்க வலிமை பொருந்தியதே யெனினும், நோய்க்கு இலக்கான அவளது உடல், அதிகப் பிரயாசையைத் தாங்க லாற்றாது, இறுதியில் இறப்புக்கு இடம் கொடுத்துவிட்டது.

சாந்தமும் அடக்கமும் உடையவளெனினும், கமலா, வாழ்க்கையைப் பற்றிச் சில தீர்மானமான கொள்கைகளைப் பற்றிநின்றாள். எண்ணித் துணிந்து ஒரு செயலில் உறுதியுடன் இறங்கிய பின், உடல் நோயும் அவளைப் பின்வாங்கச் செய்யாது. அவளுடைய சிறப்பை ஜவாஹரின் புகழ் ஓரளவு மறைத்ததென்றாலும், அவளே தனக்குச் சொந்தமாகத் தனிச் சிறப்புப் பெற்றிருந்தாளாதலால், முழுதும் மறைத்துவிட வில்லை.

கமலா, பெண் நலன் பேணுவதில் தீவிரம் மிக்கவள். தன் நண்பர்களோடும், கூட வேலைசெய்தவர்களோடும்

பெண் ணுரிமை குறித்து, அவள் பல வாதப் போர்கள் நடத்தி யிருக்கிருள். தங்கள் மனைவிமார், கமலாஜி சொல்வதைக் கேட்டுக்கொண்டும், அவள் கொள்கைகளைச் சார்ந்துகொண்டு மிருப்பது தங்களுக்குப் பொருத்தமா யில்லை என நினைத்த சில கணவன்மார்களால் அவள் அடிக்கடி சிரமம் பெற்றுவந்தாள். கஷ்டங்களாலும், நோய்களாலும் வெற்றிகொள்ள முடியாத சுதந்திர உணர்ச்சி அவளிட மிருந்தது. நாட்டின் விடுதலைப் போராட்டத்தில், தான் ஒரு சிறிய பங்காயினும் எடுத்துக் கொள்ள முடிந்தது பற்றி அவள் பெருமை யடைந்தாள். தன் கணவன் கோடிக்கணக்கான மக்களின் அன்பிற் குரியவராய் இருப்பதை நினைத்தும் அவள் உளம் பூரித்தாள். ஜவாஹரின் புகழ் ஓங்குவது கண்டோ அன்றி அவரைப் பாராட்டுகிறவர்களைக் கண்டோ அவள் என்றுமே பொருமைகொள்வ தில்லை.

1934-ம் ஆண்டி லிருந்து கமலாவின் உடல் நலம் விரைவில் குன்றத் துவங்கிற்று. பொவாலியில் உள்ள ஒரு சுகாதார விடுதிக்கு அவள் அனுப்பப்பட்டாள். எப்படியாவது அவள் குண மடைய வேண்டும் என்று நாங்கள் பிரார்த்தித்துக்கொண்டு கவலையி லாழ்ந் திருந்தோம். ஆனல், அவள் நாளுக்கு நாள் நலிவுற்ருள். ஜவாஹர் மீண்டும் சிறைப்பட்டார். இம்முறை அவர் அல்மோராவில் இருந்தார். அடிக்கடி குறிப்பிட்ட காலத்தில் கமலாவைப் பார்க்க ஜவாஹருக்கு அரசாங்கம் அனுமதி அளித் திருந்தது. அக்காலத்தை - ஜவாஹரைச் சந்தித்துப் பேசும் காலத்தை - எவ்வளவு அவாவோடு கமலா எதிர்பார்த் திருப்பாள்! அவ்விருவரும் கூடிப் பேசிக்கொண் டிருந்த அக்காலம் எவ்வளவு விரைவில் கழிந் திருக்கும்! கடைசியில் கமலா சுவிட்ஸர்லாண்ட் செல்ல வேண்டும் என்று டாக்டர்கள் யோசனை கூறினர் கள். அவள் சுவிட்ஸர்லாண்டுக்குப் புறப்படும் முன் அவளைச் சந்தித்துச் சில காலம் அவளுடன் தங்கியிருந்து வர விரும்பி, நானும் ராஜாவும் பொவாலிக்குச் சென்ருேம். பிறந்து இரண்டு மாதங்கள் கூட நிரம்பாத என்னுடைய ஆண் குழந்தையைக் கண்டு, கமலா, என் தாயைக்காட்டி லும் அதிக சந்தோஷங்கொண்டாள். நான் அவனை முறையோடு வளர்க்கத் தவறியதாகக் கண்டால்,

சுவிட்ஸர்லாண்டி லிருந்து திரும்பியதும், தானே அவனை என்னிட மிருந்து எடுத்துச் சென்று வளர்க்கப்போவதாக என்னைப் பயமுறுத்தினுள்.

புறப்படுவதற்கு ஏற்பாடு செய்யப்பட் டிருந்த தினத்தில், அவளைக் கண்டு விடை கொடுத் தனுப்ப, அல்மோரா சிறையி லிருந்து வர ஜவாஹர் அனுமதிக்கப் பட்டார். துக்க மிகுந்த அந்நாளில் ஜவாஹர் மனத்தில் என்ன என்ன எண்ணங்களெல்லாம் ஓடினவோ, என்னுல் சொல்ல முடியாது; ஆனால், அவரது முகத் தோற்றம் என் நெஞ்சைப் பிளந்தது. திடமாக முகத்தை வைத்துக்கொண்டு தன் மனத் துயரை மறைக்க அவர் முயன்றும், முயற்சி வீணுகி, அவரது விழிகள் துக்கத்தை விளக்கிக்காட்டின. ஒருவரை ஒருவர் பிரியும் சமயம் நெருங்கியதும், இருவரும் தைரியத்தை இழக்காதவர் களாய்ப் புன்னகை புரிந்துகொண்டார்கள். பிறகு, பம்பாய்க்குப் புறப்படும் ரயில் வண்டிக்குச் செல்வதற் காகக் கமலாவின் மோட்டார் மலையி லிருந்து கீழிறங் கிற்று. தளம்பும் கண்ணிருடன் என்னையும் அம்மாவையும் தழுவிக்கொண்டதும், ஜவாஹர், அவரை அல்மோராச் சிறைக்கு அழைத்துச் செல்லக் காத்துநின்ற காரினுள் ஏறிப் புறப்பட்டார். விடைபெற்றுத் திரும்பி நடந்த பொழுது, அவரது நடையில் அதுகாறும் இருந்துவந்த உறுதியும், என்றும் அவரைவிட் டகலா திருந்த ஊக்கமும் அவரைவிட் டகன்றனபோற் காணப்பட்டன. சில மணி நேரத்திற்கு முன் னிருந்ததைவிட, அவர் முற்றிலும் வலி யிழந்து, வயது முதிர்ந்தவராகக் காணப்பட்டார். சில மாதங்களுக்குப் பின்னர் ஜவாஹர் விடுதலை பெற்றதும், கமலாவின் நிலைமை மோசமாய் இருந்ததால், ஐரோப்பா வுக்கு ஆகாய விமானமூலம் சென்ருர். 1936, பிப்ரவரி 28-ம் நாள் சுவிட்ஸர்லாண்டை யடுத்த லௌசான் என்னும் சிற்றூரில், இந்திராவும், ஜவாஹரும் பக்கத்தில் இருக்கக் கமலா உயிர் நீத்தாள்.

"கொஞ்சம் இருட்டு, கொஞ்சம் வெயில்,
கொஞ்சம் வெற்றி, கொஞ்சம் கண்ணீர்;
இவற்றாலேயே
பறந்திடும் காலமாம் பாரம் ஏறிடும்."

— ஈடன் பில்பாட்.

கமலா இறந்த பின்னர், 1936, மார்ச் மாதத்தில், இந்திராவை, சுவிட்ஸர்லாண்டில் உள்ள ஒரு பள்ளிக் கூடத்தில் விட்டுவிட்டு ஜவாஹர் இந்தியா திரும்பினார். உடனே சென்று அவரைப் பார்க்க எனக்கு ஆவலா யிருந்தது. ஆனால், அப்போதே பிறந்த என் குழந்தைக்கு ஒரு மாதங்கூட ஆகா திருந்ததால், அவரைக் காணச் செல்ல முடியா திருந்தது. கமலாவின் கொடிய மரணத் திற்குப் பின்னர், என் அண்ணாவைப் பார்ப்பது அதிர்ச்சி தரத்தக்கதா யிருந்தது. பிரயாணம் என் மனத்தில் துன்பத்தை விளைத்தது. கமலாமீது எனக்கே அதிகப் பிரியம் உண்டு. அவள் மறைவு ஜவாஹருக்கு எவ்வளவு வருத்தத்தை இழைத் திருக்கும் என்பதை நான் உணர முடிந்தது.

நாங்கள் ஆனந்தபவனத்தை யடைந்ததும், ஜவாஹர் எங்களை வரவேற்க வெளியே வந்தார். சில மாதங்களுக்கு முன் வரை இளமையுடன் விளங்கிய அவர் முகம் முதுமைத் தோற்றத்துடனும், துக்கத்தால் திரை விழுந்தும் இருந்தது. அவர் மிகவும் களைத்துச் சளைத்துப் போனவராகக் காணப்பட்டார். தன் மனப் புண்ணை மறைத்துக்கொள்ள அவர் பெரிதும் முயன்றார்; எனினும், அவரோடு எப்பொழுதும் இருக்கக் கூடிய எங்களுக்கு அவர் விழிகளில் தேங்கிநின்ற துக்க வெள்ளத்தைக் காண வருத்தம் அதிகரித்தது. அலஹாபாத்தில் இரண்டு வாரங்கள் தங்கியிருந்த பின்னர், குடும்பத்தி லுள்ள மற்ற எல்லோருடனும் காங்கிரஸ் மகாநாட்டில் கலந்துகொள் வதற்காக நாங்கள் லட்சுமணபுரி சென்றோம்.

அவ்வாண்டு, காங்கிரஸின் தலைவராக ஜவாஹர் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். வழக்கம்போல், அரசியல் அவருடைய முழு மனத்தையும் கவர்ந்துகொண்டது;

சொந்த நஷ்டமும், துக்கமும் தூர விலகின. ஜவாஹர் விசனத்தோடும், தனிமை உணர்ச்சியோடும் இருந்தாரெனினும், மகாநாடுகள் பலவற்றில் கலந்துகொள்வதிலும், மற்ற வேலைகளைச் செய்வதிலும் ஈடுபட்டார். அடுத்த ஆண்டு பெய்ஸ்பூரில் கூடிய காங்கிரசுக்கும் அவரே மீண்டும் தலைவராய்த் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

பெய்ஸ்பூர் காங்கிரசுக்குப் பின்னர், இந்தியா முழுதும் மாகாணச் சட்ட சபைகளுக்குத் தேர்தல்கள் நடைபெற்றன. காங்கிரஸ் அங்கத்தினர்களுக்காக ஜவாஹர் சூறுவளிப் பிரசாரம் செய்யலானார். இமய முதற் குமரி வரையில், நகரங்கள், கிராமங்கள்தோறும் சென்று ஜவாஹர் நூற்றுக்கணக்கான கூட்டங்களில் பிரசங்கங்கள்செய்து, கடந்த போராட்டத்தில் களைத்துப்போய் மீண்டும் சுய நிலைக்கு வந்துகொண்டிருந்த மக்களுக்குப் புதிய ஊக்கத்தை ஊட்டுவதில் வெற்றி பெற்றார். ஏழு மாகாணங்களில் காங்கிரஸ் பெரும்பான்மையான ஸ்தானங்களுடன் வெற்றிபெற்றது. பதவி ஏற்றுக்கொள்வதைப் பற்றி மும்முரமாக வாதம் நிகழ்ந்தது; முடிவில் வைஸ்ராயோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு மாகாணங்களில் மந்திரி பதவிகள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. அநேகமாய் காங்கிரஸ் அமைச்சர்கள் எல்லோருமே பல ஆண்டுகள் சிறைவாசம் செய்தவர்களாய் இருந்தார்கள். என் அக்காள் சுவரூபும் ஒரு மந்திரியாகப் பதவி ஏற்றாள். இந்தியாவில் முதன்முதலாக மந்திரி பதவி ஏற்ற ஒரே பெண் அவள்தான்.

குழந்தைப் பருவம் முதற்கொண்டே, சுவரூப், நுட்பமும் சாமர்த்தியமும் பெற்றிருந்தாள்; மந்திரியாவதற்குப் பெரிதும் தகுதி யுடையவளா யிருந்தாள். எதைக் கண்டும் அவள் எளிதில் குழப்பம் அடையமாட்டாள். எவ்விதமான நிலைமைகளையும், அமைதியாகவும் பொறுமையாகவும் கையாளுந் திற னுடையவள். கவர்ச்சியும், தன்னடக்கமும், அழகும் ஒருங்கே நிறைந்த சுவரூப், பிறரை எளிதில் தன் வசப்படுத்திக்கொள்ளும் ஆற்ற லுடையவளாய் இருந்தாள். மந்திரிப் பதவியில் அவள் பெரிதும் வெற்றிபெற்றாள். மந்திரித் தொழில் மிகவும் கடினமானது; அதற்கான பயிற்சியைப் பெறாமல் இருந்தும், அவள் அதை ஏற்று, அதில் சிறப் படைந்து, பிறர் நன்

மதிப்பையும் பெற்ருள். சுவரூப் முதன்முதலாக அரசியல் துறையில் தீவிரமாக இறங்கியதும், பிரசங்கி என்ற முறையில் அவள் காட்டிய திறமை எங்களுக் கெல்லாம் வியப்பை விளைத்தது; அதற் கெனப் பிறந்தவள்போல் அவள் தோன்றினுள்; அவள் பேசவேண்டிய கூட்டம் எவ்வளவு பெரிதாய் இருந்தாலும், அவள் ஒருபோதும் அஞ்சுவ தில்லை. ஆங்கிலத்திலும், இந்துஸ்தானியிலும், கேட்போர் உள்ளத்தைத் தம் வசப்படுத்தக் கூடிய விதத் திலும், மிகச் சுலபமாகவும் பேசுவாள்.

இளமையிலேயே சுவரூபுக்கு நரை வந்துவிட்டது-(இது எங்கள் குடும்பத்திற்குப் பொதுவானது). வர வர, விரைவில் அவள் தலை முழுமையும் வெளுக்கத் துவங் கிற்று. இன்று அவள் தலைமயிர் முற்றும் வெள்ளியைப் போல் வெளுத்துவிட்டது. ஆனுல், அது அவள் அழகை மேலும் அதிகரிக்கத்தான் செய்திருக்கிறது.

அவள் ஒரு திறமை யுடைய தாய்; ஆற்றல் மிக்க மனைவி. தன் நேரத்தில் பெரும் பாகத்தை அரசியலி லேயே ஈடுபடுத்துகின்ருளெனினும், தன் குடும்பத்தையும், குழந்தைகளையும் நன்கு கவனித்துக்கொள்வதற் குரிய நேரத்தையும் அவள் பெற்றே வருகிருள்.

வருடத்தில் இரண்டு மூன்று முறை ஜவாஹர் பம்பாய்க்கு வந்து எங்களோடு தங்கிப் போவது வழக்கம். அவர் எங்களோடு இருப்பதை நாங்கள் பெரிதும் விரும் பினே மாயினும், எப்பொழுதும் அவர் எண்ணிறந்த அலுவல்களில் ஈடுபட் டிருப்பா ராதலால், நாங்கள் அதிகமாக அவரைக் காணமுடிவ தில்லை. எங்கள் வீட் டிற்கு அவர் வந்தால், அமைதியான எங்கள் குடும்பத் திட்டங்கள் அனைத்தும் மாறிவிடும். அதிகாலையி லிருந்து, நள்ளிரவு கழித்துங்கூட, சரமாரியாய், மக்கள் வந்து போய்க்கொண்டு இருப்பார்கள்; சிலர் முன்னதாகவே ஏற்பாடுசெய்யப்பட் டிருந்தபடி காரியமாகக் கண்டு செல் லவும், சிலர் ஜவாஹரைத் தரிசித்துவிட்டுப் போகவும் வரு வார்கள்; எப்பொழுதும் டெலிபோன் மணியும், கதவு மணியும் ஒலித்துக்கொண்டே யிருக்கும்; இவை இரண் டுக்கு மிடையே நான் என் காலத்தின் பெரும் பகுதியைச் செலவழித்தேன். காலப்படி சாப்பாடு நடைபெருது; தனித் திருக்க முடியாது; சிற்றுண்டிக்கோ, சாப்பாட்

டுக்கோ எத்தனைபேர் வருவார்கள் என்று தெரியாது. பத்துப் பேர் முதல் இருபது பேர் வரை யுள்ளவர்களுக்குச் சாப்பாடு தயார்ச் செய்யுமாறு, சாப்பாட்டிற்கு ஒரு நிமிஷத்துக்கு முன்னால் தெரிவித்தாலும், சாப்பாடு தயாராகக் கூடிய விதத்தில், சமையலறையை எப்போதும் தயாராக வைத்துக்கொண் டிருக்கவேண்டி யிருந்தது.

மூச்சுவிடக்கூட முடியாதவாறு எப்போதும் வாழ்க்கை முழு வேகத்தில் ஓடிக்கொண் டிருந்தது. மிக அபூர்வமாக நாங்கள் மட்டும் தனியே ஜவாஹரோடு இருக்க நேர்ந்தபோது, அவர், தாமே பங்கெடுத்துக் கொண்ட ருசிகரமான கதைகளைப் பற்றிக் கூறுவதைக் கேட்டுக்கொண்டும், பொதுவாகப் பல விஷயங்களையும் - சிறப்பாகச் சில சமயங்களில் - எங்கள் குடும்ப விஷயங்களையும் பற்றிப் பேசி, சிரித்து, விவாதித்துக்கொண்டும் ஆனந்தமாய்ப் பொழுது போக்குவோம். மாலை நேரத்தில் ஜவாஹர், வீட்டில் தனித் திருப்பா ராயின், சில கவிதைகளைப் படித்தோ அன்றி விரித்தோ எங்களுக்குக் கூறுவார். அவர் சொல்வதைக் கேட்க ஆனந்தமாக இருக்கும்; அழகாகச் சொல்வார்.

*1938*, ஜனவரியில் திமிர்வாத நோயால் திடீரென என் தாய் இறந்தாள். அவள் இறந்து இருபத்து நான்கு மணி நேரம் கழித்து, அவளுடைய தமக்கையான எங்கள் பெரிய தாயாரும் அதே நோயால் மாண்டுபோனாள். இந்த இரட்டைச் சாவு எங்க ளெல்லோரையும் பெரிதும் அதிர்ச்சிக்குள் ளாக்கியது. அதிர்ஷ்ட வசமாய் அந்தச் சமயம் நான் அலஹாபாத்திலேயே இருந்தேன். மிக்க கலக்கத்துடனும், துக்கத்துடனும் நான் பம்பாய் திரும்பினேன். தாயில்லாமல் இனி எங்கள் வீடு முன்போல் இருக்க முடியாது என்றும், முதிர்ந்த அதனுடைய ஜீவ சக்தி, மீண்டு வாரா வழியில் போய்விட்ட தென்றும் உணர்ந்தேன்.

அந்த ஆண்டின் இறுதியில் இந்திராவைப் பார்ப்பதற்காக ஜவாஹர் ஐரோப்பாவுக்குச் சென்றார். ராஜாவும் நானும் கூடப்போக விரும்பினோம். ஆனால், கடைசி நிமிஷத்தில் சில வேலைகளால் ராஜா வர முடியாதுபோயிற்று. என்னை ஜவாஹரோடு போகுமாறு ராஜா சொன்னார். ராஜா உடன்வராத நிலையிலும், இளமைப் பருவத்தி

லிருந்த என் இரு மகன்களையும் விட்டுவிட்டும் ஐரோப்பா செல்ல நான் விரும்ப வில்லை. மேலும், ராஜாவோடு ஐரோப்பா செல்லவே நான் பல நாட்களாகத் திட்டம் போட்டிருந்தேன். ஸ்பெயினில் புரட்சிப் போர் நடைபெற்றுக்கொண்டிருந்த காலத்தில், என் அண்ணு ஸ்பெயினுக்குச் சென்றிருந்தார். மேலும், கவனத்தை ஈர்க்கக் கூடியதும், மன வெழுச்சி தரக் கூடியதுமான ஒரு சுற்றுப் பிரயாணத்தை அவர் மேற்கொண்டிருந்தார். அவருடன் சென்று இவற்றையெல்லாம் காண முடியாதுபோனமைக்காக நான் வருந்ினேன். திரும்புகையில், விடுமுறையில் சிறிது காலம் தங்கிச் செல்லத் தம்முடன் இந்திராவையும் அழைத்துவந்தார் ஜவாஹர்.

1939, ஏப்ரலில், தனது கல்வியைத் தொடர்ந்து பயில்வதற்காக இங்கிலாந்துக்குத் திரும்பிச் செல்ல இந்திரா முடிவு செய்தாள். உலகத்தைச் சுற்றிப் பார்த்து வர, ராஜாவும், நானும் மீண்டும் திட்டம் போட்டோம்; யாத்திரையின் ஒரு பகுதியை இந்திராவோடு செலவிடலாம் என்றும் எண்ணினேம். ஆனல், அப்போது நடைபெற்றுக்கொண்டிருந்த தேசியத் தொழில் திட்டச் சபையில், தமக்கிருந்த வேலையை விட்டு விட்டு வர ராஜா விரும்ப வில்லையாதலால், எங்கள் திட்டப்படி புறப்பட முடியாது, கடைசி நேரத்தில் பிரயாணத்தை நிறுத்திவிட்டோம். ஐரோப்பிய அரசியல் வானத்தில் போர் மேகங்கள் கவிந்து பயமுறுத்திக்கொண்டிருந்தன வெனினும், விரைவிலேயே எங்களால் ஐரோப்பாவுக்குச் செல்ல முடியும் என்று நாங்கள் நம்பினேம். போர் மூண்டுவிட்டதால், ஐரோப்பாவுக்குச் செல்லும் சந்தர்ப்பம் எங்களுக்குக் கிடைக்காதுபோய் விட்டது; புறப்படவும் இயல வில்லை.

1940-ம் ஆண்டின் முடிவில், இந்திரா முடிவாகவே இந்தியாவுக்குத் திரும்பிவிடுவதாகத் தீர்மானித்தாள். கடுமையான நோயால் பிடிக்கப்பெற்று, இந்திரா, சுவிட்ஸர்லாண்டில் சிறிது காலம் தங்கியிருந்தாள். புறப்படுவதற்கு எந்த விமானம் முதலில் கிடைக்குமோ அதிலேயே திரும்பிவிட இந்திரா எண்ணியுள்ளாள் எனக் கேள்விப்பட்டதும், என் மனம் சந்தோஷமும், சிறிது சஞ்சலமும் அடைந்தது. என் அங்கலாய்ப்பப் டோரடுன்

சிறையில் இருந்த ஜவாஹருக்குத் தெரிவித்தேன். அவருக்கே இயல்பான போக்குடன், சிறிதும் தாமதியாது, மூப்பும், அதைரியமும் உடைய பெண்களைப்போல் நான் நடந்துகொண்டதற்காக ஜவாஹர் எனக்கு நல்ல பாடம் கற்பித்தார். "இந்து, திரும்பிவிட முடிவுசெய்தமை கண்டு நான் மகிழ்கிறேன். வரும்வழியில் பல ஆபத்துக்களும், இடையூறுகளும் இருக்கவேசெய்கின்றன. எனினும், தனித்திருந்து ஏங்குவதைப்பார்க்கினும், இடுக்கண்களை எதிர்த்து நிற்பதுதான் மேன்மையானது. அவள் வர விரும்பினல் வரட்டும்; அதனுல் ஏற்படும் விளைவுகளையும் அனுபவித்துக்கொள்ளட்டும்" என்று ஜவாஹர் எனக்கு எழுதினர்.

"இரவு முழுதும் அவள் மூச்சு விடுவதைப் பார்த்து நின்றோம்.
தணிந்து, மிருதுவாக அவள் மூச்சு இழைவதை
வாழ்க்கை அலை அவள் இதயத்திலே
இந்த மிந்துமாய் விம்மி நின்றது.
எங்கள் பயத்தை எள்ளிப் பொய்யாக்கியது எங்கள் நம்பிக்கை
எங்கள் நம்பிக்கையைப் பொய்யாக்கியது பயம்.
அவள் தூங்கும்போது துஞ்சியதாக நினைத்தோம்.
துஞ்சிய துணராமல் தூங்குவதாக எண்ணினோம்.
பொழுது புலர்ந்தது
மங்கலாய், சோகமாய், காலை மழையுடன்.
அவள் விழிகள் மூடின
பொழுது அவளுக்கு இங்கே யில்லை
வேறெங்கேயோ புலர்ந்தது."

— தாமஸ் ஹூட்.

என் தாய் ஒரு பேரழகி; ஐந்தடி உயரத்துக்கு மேற்படாத, சிறிய இனிய உருவத்தினள்; நேர்த்தியான ஒரு பதுமையைப் போன்று, உருவமும் அவயவங்களும் பரிபூரண அழகுடன் அமையப் பெற்ற ஒரு காஷ்மீர் நாட்டு மங்கை அவள். ஆனல், பிற் காலத்தில் தன் அழகை ஓரளவு இழந்தவளாகக் காணப்பட்டாள்.

அவளுடைய குடும்பத்தில் அவள்தான் கடைசியாய்ப் பிறந்தவள். அவளுக்கு இரண்டு தமக்கைகளும், ஓர் அண்ணனும் இருந்தார்கள். தனக்குப் பத்து வயது மூத்த தன்னுடைய பெரிய தமக்கையால் அவள் வளர்க்கப் பட்டுவந்தாள். இவ்விருவரும் ஒருவருக் கொருவர் மிக்க அன்பு பூண்டவர்களாய் இருந்தார்கள்.

கடைசிப் பெண்ணாய் இருந்தமையாலும், சகோதரிகள் மூவரிலும் அவளே அழகிற் சிறந்தவளாய் இருந்தமையாலும், அம்மாவை அவள் குடும்பத்தார்கள், அவள் வயதுக் கேற்ற ஒரு பெண்ணைப்போல் கருதாமல், ஒரு மெல்லிய பதுமையைப் போன்றே செல்வமாய்ப் பாராட்டிச் சீராட்டி வளர்த்துவந்தார்கள். இளமையிலேயே

அவளுக்கு விவாகமாயிற்று. புதிய மனிதர்கள் நிறைந்த தன் கணவன் வீட்டிற்குச் சென்றதும், அங்குள்ளவர்களில் சிலர் அன்புடையவர்களாகவும், சிலர் கடுமையானவர்களாகவும் இருக்கக் கண்டாள். என் தந்தையைப் பெற்ற பாட்டி பலவகைகளிலும் சிறப்புப் பெற்ற ஒரு கிழவி; ஆனால், மாமிகளின் பரம்பரைக் குணத்தோடு தான் வாழ்ந்துவந்தாள். பொதுக் குடும்பம் பிரிந்து, தன் வீட்டில் தனக்கு அதிகாரம் ஏற்படும் வரைக்கும் என் தாய்க்கு வாழ்க்கை இன்பமாயில்லை. ஆனால், பிறகு அவள் தன் சொந்த வீட்டிலும், ஒரு விலையில்லா மாணிக்கம் போன்றே நடத்தப்பட்டுவந்தாள். ஒரு பெண்ணின் உள்ளம் விரும்பக் கூடிய எல்லாச் சுக போகங்களையும் அவளுக்கு அளிக்க என் தந்தை உலோபப் படவில்லை. உலகில் ஒருவர் விரும்பக் கூடிய எல்லாப் பொருள்களும் இருந்தும், மனிதர்களுக்கு இன்றியமையாது வேண்டிய நோயற்ற வாழ்வு மட்டும் அவளிடம் இல்லை.

ஜவாஹர் பிறந்ததற்குப் பிறகு என் தாயின் உடல் சீர்கேடடைந்துவிட்டது; அடிக்கடி கொடிய நோயால் பிடிக்கப்பட்டாள். வியாதியால் பீடிக்கப்பட்ட ஒவ்வொரு தடவைக்கும் பின்னர், அவள் மேலும் மேலும் பலவீனம் அடைந்துகொண்டே வந்தாள். எந்தவிதமான சிகித்சையாலும் அவள் உடல் சுகமடைந்ததாகக் காணப்படவில்லை. அம்மாவை ஐரோப்பாவுக்கு அழைத்துச் சென்று அங்குள்ள மிகச் சிறந்த வைத்தியர்களின் மூலம் சிகித்சை செய்தும், யாவும் பயனற்றுப்போயின. செம்மையான உடல் நலத்தோடு, திடமாய் வயிறார உண்டு எங்கள் எல்லோரையும்போல் இயற்கையான நிலையில் அவள் வாழ்ந்ததைப் பார்த்ததாகவே எனக்கு நினைவில்லை. அவள் எப்பொழுதும் பிறரால் கவனிக்கப்படவேண்டிய நிலையிலிருந்ததால், தாயின் இடையறுப் பாதுகாப்பு என்பது என்னவென்பதையே நான் அறியமாட்டேன்.

இவ்வாறு பல ஆண்டுகள் சென்றன. எத்தகைய தீங்குகளினின்றும், மிகச் சிறிய வாழ்க்கைக் கவலைகளினின்றும், பாதுகாத்துப் போற்றி, அன்பு பாராட்டத்தக்க, கிடைத்தற்கரிய ஓர் அழகிய மலராகவே எனக்கு அம்மா தோன்றினள். 1920-ம் ஆண்டு வரை அம்மா, அன்பார

லும், செல்வச் சாதனங்களாலும், பாராட்டுதலாலும் சூழப்பட்டும், புகழ்மிக்க கணவனுலும், அறிவிற் சிறந்த மகனுலும், பிரசித்த மடைந்த குடும்பத்தாலும் பூரிப்படைந்தும் தன் வீட்டின் அரசியாக விருந்து ஆட்சி செய்துவந்தாள். ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பமாகும் வரைக்கும் துக்கமோ, தொந்தரவுகளோ அவளை அண்டினதே யில்லை. அதன் பின்னர் மிகக் குறைந்த சில வாரங்களிலேயே, பிறந்தது முதல் கையாண்டுவந்த பழக்க வழக்கங்கள் எல்லாம் ஒதுக்கித் தள்ளப்பட்டன; எங்கள் குடும்பத்தில் ஒரு சிறிய புரட்சி ஏற்பட்டது.

புதிய நிலைமைகளோ டியைந்து வாழ என் பெற்றோரைத் தவிர, மற்ற எங்கள் எல்லோருக்கும் அவ்வளவு கஷ்டமாக இல்லை. ஆனால், என் தாய்க்கும் தந்தைக்கும், அவர்கள் அநுகாறும் கொண்டிருந்த வாழ்க்கை லட்சியத்தையும், பழக்க வழக்கங்களையும் முற்றும் மாற்றிக்கொள்வதாகவே இருந்தது. ஐம்பது வயதுக்கு மேற்பட்ட அன்னைக்கும், அறுபதாவது வயதைச் சமீபித்துக்கொண்டிருந்த தந்தைக்கும் அது ஓர் எளிய காரியம் அன்று. ஆயினும், சிறிதும் தாமதியாது பழைய வாழ்க்கை முறைகளை உதறித் தள்ளிப் புதிய வாழ்க்கை முறைகளை என் பெற்றோர்கள் ஏற்றுக்கொண்டது எல்லோரையுமே வியக்கச்செய்தது. அழகிய ஆடை, உயர்ந்த உணவு, செல்வ போகத்துடன் கூடிய வாழ்க்கை ஆகியவற்றைத் தந்தை விரும்பிவந்தார். என் தாயோ, உயர்வான புடவைகளைத் தவிர மற்றெதனையும் உடுத்தி யறியாள்; தான் விரும்பியவற்றைப் பெறுதிருந் தறியாள்; கஷ்ட மென்பதன் பொருள் என்ன வென்றே தெரியா திருந்தாள்; எனினும், சிறிதும் தயங்காது, கதருடையை அணியத் துணிந்து, தன்னல் சுமக்கக் கூட முடியாத - அழகற்ற - முரட்டுச் சேலைகளை உடுத்த அவள் முற்பட்டாள்.

தன் அருமையினும் அருமையானவர்களிட மிருந்து கொடிய சிறையால் பிரிக்கப்பட்டு, சஞ்சலம், தியாகம், முடிவற்ற துக்கம் முதலியவற்றையே, எஞ்சிய தன் ஆயுட் கால முழுதும் அவள் அனுபவிக்கலானாள். எந்தக் காரியத்தையும் செய்வதற் கியலாத மென்மை வாய்ந்தவள் என்று எங்களால் கருதப்பட்டுவந்த உருவிற் சிறிய எங்கள் அன்னை, வலிமையற்ற தனது உடல், எவ்வளவு பெரிய

துக்கத்தாலும், கொடுமையாலும் அழிக்க முடியாத தைரியத்தையும், உறுதியையும் பெற்றது என்பதை எங்களுக்கு நிரூபித்தாள்.

அடுத்து வந்த ஆண்டுகள் அவளுக்கு அதிகக் கஷ்டத்தையே விளைவித்தன. அமைதியாய், நிலவரமாய், திட்டமாய் நடைபெற்று வந்த வாழ்க்கையைக் கைவிட்டு, நிலையின்மையும், கஷ்டங்களுமே நிறைந்த வாழ்க்கையை முதுமைப் பருவத்திலே அவள் மேற்கொள்ள நேர்ந்ததைப் பற்றி, ஒருபோதும் குறையாக ஒரு வார்த்தைகூடச் சொல்லி நாங்கள் கேட்டதில்லை; அவள் அது பற்றி வருந்தவு மில்லை. இவ்வளவு கஷ்டங்களுக் கிடையே வாழ்க்கையை அவள் மிக நன்றாக ஆக்கிக்கொண்டது வியக்கத் தக்கதா யிருந்தது. அப்பா இறந்ததும், அவள் முற்றிலும் மனம் உடைந்துபோனாள். மிகுந்த வைதிக மனப்பான்மை கொண்ட அவள், தான் முற் பிறப்பில் செய்த மிகக் கொடிய பாபத்தாலேயே, தன் கணவனைத் தான் உயிருட னிருக்கும்போது இழக்க நேர்ந்தது என்று நம்பினாள். மேலும் மிக்க பலவீனமுற்றுத் தளர்ந் திருந்ததுடன், ஹிந்துவா யுள்ள ஒரு மனைவி, கணவனுக்கு முன்னதாகவே இறப்பதுதான் பொருத்தமானதும், கடமையானது மென அவள் எப்போதும் சிந்தித்துக்கொண்டிருந்தாள். அப்பா ஒரு நாளேனும் நோயுற்று அறியார். சிறை வாழ்க்கையும், அதன் வசதிக் குறைவுமே அப்பாவை, காலத்திற்கு முன்னதாகவே இறக்கச் செய்தன.

அம்மாவும் அப்பாவும் ஏறக்குறைய ஐம்பதாண்டுகள் இன்ப துன்பங்களில் பங்குகொண்டவர்களாய் ஒன்றாக வாழ்ந்துவந்தார்கள். தனக்கு நேர்ந்த மனத் துயரம், உடல் நோய்களை எல்லாம் நீக்குவதற்கு, என் தந்தையின் உதவியையே அவள் எப்போதும் நம்பி யிருந்தாள். அவர்க ளிருவரும் அநுபவிக்க நேர்ந்த இன்ப துன்ப காலமனைத்திலும், என் தந்தை, தமது அன்பாலும், பராமரிப்பாலும் அன்னையை ஆதரித்துவந்தார். அப்பா இல்லாமல், அவள் யாவற்றையுமே இழந்துவிட்டவளைப் போல் கலங்கி நின்றாள். நெடு நாட்கள் வரை, சந்தர்ப்பங்களுக் கேற்பத் தனது வாழ்க்கையைச் சரிப்படுத்திக்கொண்டு செல்ல முடியாதவளாகவே இருந்தாள். அந்தக் காலத்தில் ஜவாஹர் ஒரு தலை சிறந்த மகன் செய்யவேண்டிய

கடமையைச் செய்துவந்தார். தான் பெற்ற துக்கம், தன் மனத்தையே முறித்துவிடக் கூடியவாறு தன்னை ஆழ்த்தி வந்துங்கூட, தன் தாயின் துக்கத்தை ஆற்றுவதற்குத் தன்னால் இயன்றதை யெல்லாம் ஜவாஹர் செய்தார். அப்பொழுது அன்னையின் பணிக்கு அவர் தம்மை அர்ப்பணித்துக்கொண்ட பெருமையை வருணிக்கவே முடியாது; வாக்கால் வருணிக்க முடியாத அவ்வளவு புனிதத்தன்மை வாய்ந்தது அது. அம்மா தன் குழந்தைகளுக்காகவே—சிறப்பாக, ஜவாஹருக்காகவே உயிர்வாழ்ந்தாள். கமலாவின் மரணம் அவளுக்கு மற்றொரு பேரிடியா யிருந்தது; வாழ்க்கைப் பிரச்சினைகளை எதிர்க்கச் சக்தி யற்றவளாகவும் செய்துவிட்டது. நாளுக்கு நாள் அவள் மேலும் மேலும் பலவீன மடைந்துகொண்டேவந்தாள்.

ஆண்டுதோறும் தாய் வீட்டுக்குச் செல்லும் வழக்கப்படி, 1938-ம் ஆண்டில் என் குழந்தைகளோடு நான் அங்கு சென்று ஒரு மாதம் தங்கியிருந்தேன். பம்பாய்க்குத் திரும்ப நான் எண்ணியபோது, அம்மா, நாளைப் போகலாம், நாளைப் போகலா மென்று பயணத்தைத் தள்ளிவைத்துக் கொண்டேவந்தாள். ஒரு நாள் மாலை, ஜவாஹர், சுவரூப், அவள் கணவர், அவர்களின் குழந்தைகள், நான்—எல்லோருமாக ஒன்றாகக் கூடியிருந்தோம். சில நாட்களாகவே உடல் வலிமையோடும், உற்சாகத்தோடும் இருந்துவந்த என் தாய், அன்று மாலை மிகவும் உற்சாகத்துடன் காணப்பட்டாள்.

நாங்கள் சாப்பிட்டுக்கொண் டிருந்தபோது, அவள் எங்களுடன் இருந்தாள்; அவளுக்குப் பழைய நினைவுகள் உண்டாயின. வழக்கத்திற்கு அதிகமாகவே பேசினாள்; அவள் அப்படிப் பேசியதைக் கண்டு நாங்கள் எல்லோரும் மகிழ்ச்சி யடைந்தோம். சாப்பாடு முடிந்ததும், இரவு பத்தரை மணி வரையில் நாங்கள் பேசிக்கொண் டிருந்தோம். அன்று நள்ளிரவில் சுவரூப் லட்சுமணபுரிக்குப் புறப்படுவதாக யிருந்தாள்; தனக்குத் தூக்கம் வரவில்லை யென்றும், சுவரூப் புறப்படும் வரைக்கும் தான் விழித்துக்கொண் டிருப்பதாகவும் அம்மா கூறினாள். நாங்கள் தடுத்துப்பார்த்தும் அவள் கேட்கவில்லை. ஆகவே, நாங்களும் கூடவே யிருந்து பேசிக்கொண் டிருந்தோம். அவள் அதிகமாகப் பேசாது, படிப்படியாக அமைதி பெறலானாள்.

இரவு பதினொரு மணிக்கு சுவரூப் புறப்பட ஆயத்தமாகி, அம்மாவிடம் விடைபெற்றுக்கொள்ளச் சென்றாள். அவளைத் தழுவிக்கொள்ள அம்மா எழுந்ததும், திடீரெனச் சுருண்டு கீழே சாயத் தொடங்கினாள்; ஜவாஹரும், நானும் உடனே சுவரூபுக்கு உதவியாகச் சென்று, அம்மாவைத் தாங்கியிராவிட்டால், அவள் கீழே விழுந்திருப்பாள். பிறகு, அவளைப் படுக்கைக்கு நாங்கள் தூக்கிச் சென்றோம்; ஆனால், அவளை நாங்கள் படுக்கையில் கிடத்தும் முன்னரே, அவள், தன் உணர்வை இழந்து விட்டாள். அதற்கு முன்னர், அவள் இரண்டு முறைகள் திமிர்வாத நோயால் பீடிக்கப்பட்டிருந்திருக்கிறாள்; இது மூன்றாம் முறை. வைத்தியருக்குச் சொல்லியனுப்பினோம். வைத்தியர் வந்ததும், இனி நம்பிக்கைக்கு இடமில்லை என்று தலையை அசைத்துவிட்டார். சில மணி நேரத்திற்குள் அவள் ஆவி பிரிந்துவிடும் என்றும் கூறினார்.

அம்மா இவ்வாறு இறந்துவிடுவாள் என்று நான் எண்ணவேயில்லை; ஒன்றுமே தெரியாதவளாய்க் கலங்கித் திகைத்து நின்றேன். எங்களுக்கு முத்தமிடாமலும், எங்களிடம் விடைபெற்றுக்கொள்ளாமலும் அவ்வளவு விரைவில் அவள் எவ்வாறு எங்களைவிட்டுப் பிரிய முடியும்? வீட்டைவிட்டு நாங்கள் ஒரு மணி நேரத்துக்கு வெளியே செல்லும்பொழுதும், எங்களுக்கு முத்தமிட்டு விடைதந்தே அனுப்புவாள். அம்மா இறப்பதென்பது முடியாத செயல் என்று எனக்குத் தோன்றிற்று. வைத்தியரின் முடிவை நான் ஏற்றுக்கொள்ளவில்லை; அவர் எதுவுமே செய்யாமல், சூழ்ந்து நின்ற எங்களைப் போல் பார்த்துக்கொண்டு நின்றது, எனக்குக் கோபத்தை உண்டுபண்ணியது.

ஜவாஹர், சுவரூப், நான், எங்கள் பெரிய தாய் பீபி அம்மா ஆகிய எல்லோரும் அம்மாவின் படுக்கை அருகேயேயிருந்து, இரவு முழுதும் அவளைக் கவனித்துக் கொண்டிருந்தோம். காலை ஐந்து மணிக்கு அவள் மூச்சுத் திடீரென நின்றுவிட்டது; தூங்குபவளைப் போல் அவள் உடல் அமைதியுடன் காணப்பட்டது. கண்களில் நீர் ததும்ப, ஜவாஹர் தாழ்ந்த குரலில் மெதுவாக, "அம்மாவும் போய்விட்டாள்" என்றார். அப்பொழுதுதான் என் அருமைத் தாய், என்றும் எழாத தூக்கத்தில் ஆழ்ந்து

விட்டாள் என்பதை அறிந்தவளாய், வீணில் அடக்கிவைத் திருந்த துக்கத்தால் வாடினேன். மூச்சுவிடக்கூட முடியாதவளாய் மற்றவர்களோடு அன்னையின் படுக்கை அருகே நின்றுகொண் டிருந்தேன். என் கண்களி னின்று நீர் வடியவில்லை. என் தாய் இறந்தபொழுது, பெரிய தாய், அம்மாவின் அறையில் இல்லை; எனவே, ஐவானும், சுவருடம் அவளுக்குச் செய்தியைத் தெரிவிக்கச் சென்றார்கள். நான்மட்டும் அம்மா அருகில் இருந்தேன்; திடீரென்று என்னை மீறி என் கண்களி லிருந்து வெள்ளம் புரண்டது. மெதுவாக அவள் அருகில் சென்று மண்டியிட்டு, மனத்திற்குள்ளாகவே அவளிடம் விடைபெற்றுக்கொண்டேன். பின்பு, நான் அழுவது அவளுக்கு இடையூறாக விருக்குமென நினைத்து அவ்வறையைவிட்டு அகன்றேன்.

அம்மா தகனக் கிரியைக்கு ஆயிரக்கணக்கில் மக்கள் திரண்டு வந்தார்கள். நாங்கள் அவளை மலர்களால் அலங்கரித்தோம்; எவ்வளவு அழகாய்க் காணப்பட்டாள் அவள்! திரைகளும் கோடுகளும் மறைந்து, அவளது முகம் மென்மையாயும், உயிருடையது போன்றும் விளங்கிற்று. அவள் இறந்துவிட்டாளென்று யாருமே நம்ப மாட்டார்கள்.

மீண்டும் ஆனந்தபவனத்தில் துக்கமும், கவலையும் குடிகொண்டன. தலைவியை இழந்த ஆனந்தபவனம், பொலிவு இழந்து துன்பமயமாகக் காணப்பட்டது.

"பேரும் புகழும் பதவியும் சிலர் பெற்றனர்.
அவர்கள் படித்தவர்கள், அறிவுடையவர்கள், பலசாலிகள்.
வேறு சிலர் பேரும் புகழு மின்றி
இருந்த இடம் தெரியாமல் இருந்தனர்.
இவர்கள் எழுத்து வாசனை யற்றவர்கள்.
அவர்கள் அனுபவித்த துக்கமும்
சகித்த அநீதியும் தவிர
அவர்களிடம் வேறு பலம் இல்லை."

— வில்லியம் மாரிஸ்.

'பீபி அம்மா' என்று நாங்கள் அழைத்துவந்த எங்கள் அன்னையின் மூத்த சகோதரி, ஒரு பால்ய விதவை. வாழ்க்கையில் வேறு பற்றுதல் இல்லாததால், என் தாய் மீது அவள் பேரன்பு செலுத்திவந்தாள். இவ்விரு சகோதரிகளும் ஒருவருக் கொருவர் பல வேறுபாடுகளை யுடையவர்கள். மூத்தவள் இளமையில் கஷ்டப்பட்டு, அமைதியும் ஆற்றலும் மிக்க மங்கையாக வளர்ந்து, வாழ்க்கை சுலபமான தன்று என்றும், தன் கையே தனக்கு உதவி என்றும், பிறரை எதிர்பார்ப்பது நல்ல தல்ல என்றும் அறிந்தவள். இத்தகைய அபிப்பிராயத்தை யுடையவளான அவள் அன்பற்ற, குரூரமான உலகத்தில், அதன் தயவை எதிர்பாராது வாழ்வதற்குத் தன் மனத்தைத் தயார்ப்படுத்தினாள். சாமர்த்தியமும், அறிவுக் கூர்மையும் மிக்க அவள், அதில் வெற்றி பெற்றாள். அவளுக்கு ஆங்கிலம் ஓர் எழுத்துக்கூடத் தெரியாது; ஆனால், சம்ஸ்கிருதம் பயின்று, அதில் பெரிய பண்டிதை யாக இருந்தாள். எவ்விஷயத்தையும் உடனே கிரகித்துக் கொள்ளும் சக்தி அவளிட மிருந்தது. தக்க கல்வியும், சந்தர்ப்பங்களும் அளிக்கப்பட் டிருந்தால், பீபி அம்மா ஒரு சிறந்த வழக்கறிஞராக ஆகியிருக்கக் கூடும் என்று என் தந்தை அடிக்கடி கூறுவது வழக்கம். மிகுந்த அறிவுக்கூர்மையும், சுறுசுறுப்பும், உயர்ந்த நகைச் சுவையும் உடையவள் அவள்.

விதவையாக இருந்தமையால் அவளுக்குச் சொந்த மாக வீடு இல்லை; உறவினர்களது இல்லங்களிலேயே

வாழ்ந்துவந்தாள். ஒவ்வோர் ஆண்டிலும் பெரும் பகுதியை எங்கள் வீட்டிலேயே அவள் கழித்துவந்தாள்; அவள் எங்களுடைய விருப்பதில் எங்களுக்குப் பிரியம் அதிகம். எங்கள் வீட்டில் இருக்கும்போது வீட்டு வேலைகளில் அவள் அம்மாவுக்கு உதவி செய்வாள்; அம்மா நோயுற்றிருந்தால், தன்னைப்பற்றிச் சிறிதும் சிந்திக்காமல் இராப் பகலாய் அம்மாவுக்கு வேண்டியவற்றைச் செய்துவருவாள். அவள் தங்கை, உடன்பிறந்தவர்களின் புதல்வர்கள், புதல்விகள் ஆகியோரைக் கொண்டதே அவளது உலகம். அவள் மிக்க அன்புசெலுத்திவந்த அவளது சகோதரர், பல ஆண்டுகளுக்கு முன்னரே இறந்துபோனார். அவளது முக்கியமான பற்றுக்கோடு என் தாய்தான். அவள் மீது பிபி அம்மா கொண்டிருந்த அளவிலா அன்பை நான் வேறெங்கும் கண்டதில்லை.

நான்தான் அவளுக்குச் செல்வ மகள். நான் சிறு பெண்ணாய் இருந்தபோது, அவள் அருகில் அமர்ந்து, அவள் கூறும் பலவிதமான கதைகளையும் கேட்டு ஆனந்திப்பேன். சில சமயங்களில், கற்பனைக் கதைகள், பண்டைய இந்தியாவின் பெருமையை எடுத்துக்காட்டும் கதைகள், இந்திய வீரர்களையும், வீராங்கனைகளையும் பற்றிய கதைகள் இவற்றைக் கூறுவாள். நான் படித்தும் கேட்டுமுள்ள அழியாப் புகழ்பெற்ற வீர மங்கையரி லொருவரைப் போன்று பிபி அம்மாவும் வீரச் செயல்கள் புரிந்திருக்கக்கூடுமென்று எவ்வாறோ நான் எண்ணலானேன். அபூர்வமாகச் சில பெண்களிடமே காணப்படும் அஞ்சா நெஞ்சமும், துணிவும் படைத்தவள் அவள். அவளை நான் மிக அருமையாய் நேசித்தேன்.

என் தாயைவிடப் பத்து வயது மூத்தவளாயும், வைதிக வாழ்க்கையைக் கடைப்பிடித்தவளாயும் இருந்தும், பிபி அம்மா, என் தாயினும் மிகவும் பரந்த மனப்பான்மையுடையவள். அம்மாவைப்போலவே, எங்கள் நவீன முறைகளையும், கொள்கைகளையும் கண்டு அவள் அதிர்ச்சி யடைவாள்; ஆனால், எங்கள் செயல்களைப் பற்றி அபிப்பிராயம் கூறாமல் புத்திசாலித்தனமாக ஒதுங்கிக்கொள்வாள். கூந்தலை வெட்டிக்கொள்வதும், கை யில்லா ரவிக்கைகளை அணிவதும் அவளுக்கு அருவருப்பை விளைவிக்கும். அவள் வாயைப் பிடுங்குவதற்காக, நாங்கள் இதைப் பற்றி வம்

பிழைத்தோ மாயின், அவள் எங்களைப் புறக்கணிப்பவள் போல இருந்துவிடுவாள். இதற்கு மாறாக அம்மா தன் ஆட்சேபணைகளையும், வெறுப்பையும் பலவிதங்களில் தெரிவித்துக்கொள்வாள்; இதனால் எவ்விதப் பலனும் ஏற்படுவதில்லை. எங்கள் விருப்பத்திற்கு மாறாக எதையும் செய்யும்படி பிபி அம்மா ஒருபோதும் எங்களை வற்புறுத்த மாட்டாள்; ஆனால், தீவிரமாக நவீனத்தைப் பின்பற்றாது, வைதிகமாயும் இருந்தால் நல்லது என்பது அவள் விருப்பம்.

என்னளவில் சிறப்பாகப் பிபி அம்மா, அருமைப் பெரிய தாயார் என்ற அளவுக்கு மேல், எல்லை யற்ற அன்புசெலுத்தற் குரியவளா யிருந்தாள். அவள் எனக்கு மிகவும் அந்தரங்கமானவள். என் அன்னை யிடம் செல்வதற்கு விரும்பாத சில சமயங்களில், என் பெரிய தாய், அவளால் புரிந்துகொள்வதற்கு எவ்வளவு கடினமான விஷயத்திலும், என் மனப்போக்கை அறிந்து கொள்ளக்கூடியவள் என்ற துணிவுடன் நான் நேராக அவளிடம் செல்வேன்.

அம்மா எதற்கும் பிறர் உதவியை நாடிநின்றாள். தானாகவே எந்த விஷயத்தையும் பற்றி ஒரு முடிவுகட்டும் சந்தர்ப்பத்தை அம்மா பெற்ற தில்லை. ஆகவே, எங்களுக்குத் தீர்மானமான புத்திமதியைக் கூறுவது அவளுக்குக் கஷ்டமா யிருந்தது. மேலும், நாங்களும், அவளை ஒரு மெல்லியல் என்றும், எங்கள் ஆதரவிற் குரியவள் என்றும் கருதிவந்தோமே யன்றி, எங்களைக் காத்து, எங்களுக்கு வழிகாட்டக்கூடியவள் என்று நினைக்கவே யில்லை. எனவே, மிகச் சிறிய இடையூறுகள், கவலைகள் ஏற்பட்டாலும் பிபி அம்மா விடமே நான் செல்வது வழக்கம்; அவள் ஒருபோதும் என்னைக் கைவிட்ட தில்லை.

அம்மா இறந்த செய்தியைத் தெரிவித்ததும், நாங்கள் கூறியதை நம்பாதவளாய் அவளும் ஸ்தம்பித்துப்போனாள். தான் நன்றாய் உடல் உறுதியோடு இருக்க, தன் தங்கை எங்ஙனம் சில மணி நேரத்தில் இறத்தல்கூடும் என்றெண்ணினாள். சிறிது சிறிதாக அக்கொடிய உண்மையை அவள் மனம் கிரகிக்கத் தொடங்கிற்று. பலவிதமான துக்கங்களையும், கவலைகளையும் எதிர்த்துநின்ற-பேராற்றல்

படைத்த அவளது நெஞ்சு, மனித சக்தியால் தேற்றற்கரிய ஒரு பேரதிர்ச்சியால் தாக்கப்பெற்றுத் துன்புற்றது. அவள் இதயம் இரத்தம் வடித்தது; புலன்கள் கலங்கின. இத்தகைய துக்கத்திலும், அவள் எங்களை நினைந்து, எங்கள் துக்கத்தைக் குறைப்பதற்காகத் தன் துக்கத்தை மறைக்க முயன்றாள். இறுதிச் சடங்குகளுக்கு உரியவற்றைச் செய்ய எங்களுக் கொன்றும் தெரியாது என்பதை அவள் அறிந்துகொண்டு, எல்லாவற்றையும் தானே முன்னின்று நடத்த அவள் துணிந்தாள். ஆயுள் மட்டும் தானே வளர்த்துக் காப்பாற்றிய தன் சிறிய தங்கையின் ஈமக்கடன்களை நிறைவேற்ற அவள் தன் கையாலேயே யாவற்றையும் தயார்ச்செய்தாள்.

வீட்டைவிட்டுப் பிரேத ஊர்வலம் புறப்பட்டதும், புஷ்பங்களால் அலங்கரிக்கப்பெற்ற தன் அருமைத் தங்கையின் பாடை, தன் பார்வையி லிருந்து மறையும் வரை பார்த்துக்கொண்டே, கண்களி லிருந்து ஒரு சொட்டுக் கண்ணீர்கூடச் சிந்தாமலும், ஒரு சிலையைப் போல் சிறிதுகூட அசையாமலும் நடைமுற்றத்தில் அவள் நின்றுகொண் டிருந்தாள். பின்னர், விரைவாகத் திரும்பித் தன் தங்கையின் அறைக்குச் சென்றாள். நானும் கூடச் சென்றேன். தன் தங்கைக்குப் பிரியமா யிருந்த எல்லாப் பொருள்களையும் கடைசி முறையாகப் பார்ப்பவள் போன்று பார்த்துக்கொண்டு நின்றாள். நான் அவளைக் கட்டிப்பிடித்துக்கொண்டு, "பீபி அம்மா, நீங்கள் சிறிது படுத்து, ஓய்வெடுத்துக்கொள்ள லாகாதா?" என்றேன். என் கேள்வியைப் பொருட்படுத்தாதவளாய், அப்போதும் கண்ணீர் சிந்தாதிருந்த தன் கண்களால் என்னைப் பார்த்து, "போய்க் குளித்துவிட்டு வா; உனக்குச் சிறிது தேநீர் தருகிறேன்" என்று கூறினாள். அப்போது பிற்பகல் இரண்டு மணிக்கு மேல் ஆய்விட்டது; அவளோடு வாதாட நான் இஷ்டப்பட வில்லை. என் அறைக்குச் சென்று, குளித்துத் திரும்பினேன்; தேநீர் தயாரா யிருந்தது. என்றால் அதைக் குடிக்க முடிய வில்லை. பொறி கலங்கிச் சித்தப்பிரமை கொண்டவள் போல் காணப்பட்ட பீபி அம்மாவின் தோற்றம் என் நினைவுக்குவரக் கவலை அதிகரித்தது. எனவே, அவளைப் பார்க்க எண்ணி, உள்ளே தேடிச் சென்றேன். அம்மா

வுடைய அறையில், அம்மா படுத்திருந்த இடத்தில் அவளும் படுத்திருப்பதைக் கண்டேன்; குனிந்து அவளைக் கூப்பிட்டேன். அவள், தன் கண்களைத் திறந்தாள். "பீபி அம்மா, கொஞ்சம் தேநீர் குடியுங்கள்; சற்று தெம்பா யிருக்கும்" என்றேன். பதில் இல்லை. "பீபி அம்மா, எங்கள் எல்லோருக்கும் தாங்கள் எப்போதும் ஒரு தாயாகவே இருந்துவந் திருக்கிறீர்கள்; இன்று, தாங்கள்தான் எங்கள் அன்னை. இப்பொழுது தங்களைத் தவிர, எங்களுக்கு வேறு ஒருவரும் இல்லை. உங்கள் துணை எனக்கு அவசியம் வேண்டும்" என்று சொன்னேன். அவள் என்னைத் தழுவிக்கொண்டவளாய், முதன்முறை யாகக் கண்களில் நீர் ததும்ப, "மகளே, நீ எப்போதுமே என் செல்வ மகளாய் இருந்திருக்கிறாய்; ஆனால், ஒருவருக்கு ஒரு தாய்தான் இருக்கமுடியும்; உன் தாயோ இனித் திரும்பாதவளாய்ப் போய்விட்டாள்; நான் அவள் ஸ்தானத்தை ஒருபோதும் வகிக்க முடியாது. மேலும், நான் அவளுக்காகவே உயிர்வாழ்ந்தேன்; இனி, நான் உயிர் வாழ்வதற்கு என்ன இருக்கிறது? என் வேலை முடிந்துவிட்டது. நானும் போகவேண்டியவள் தான்" என்றாள். எனக்குப் பேச நா எழ வில்லை. வீணே அடக்க முயன்ற கண்ணீர் என்னைத் திக்கு முக்காடச் செய்தது. அவள் பக்கத்தில் அமர்ந்து, சிறிது நேரம், அவள் தலையைத் தடவிக்கொடுத்துக்கொண் டிருந்தேன். பின்னர், அவள் தூங்கிவிட்டாள் என்று எண்ணி, மெதுவாக அங்கிருந்து வெளிவந்தேன். பின்னர், பன் முறைகள் அவளைப் பார்க்கச் சென்றேன்; சென்ற போதெல்லாம் அவள் தூங்கியவண்ணமே இருக்கக் கண்டேன். இறுதியாய், எனக்குத் திகில் ஏற்பட்டு விட்டது. எனவே, அருகிற் சென்று, அவளை அசைத்துப் பார்த்தேன்; அவள் விழித்துக்கொள்ள வில்லை. மீண்டும் மீண்டும் கூப்பிட்டேன்; அவள் அசைய வில்லை. தகனக் கிரியைக்காகச் சென்ற என் அண்ணா அதுவரையும் வீடு திரும்ப வில்லை யாதலால், நான் இச்செய்தியை அக்கா ளிடம் தெரிவித்தேன். அவளும் பயந்துபோனாள். வைத்தியருக்கு ஆள் அனுப்பினோம். ஏழு மணிக்கு ஜவாஹர் திரும்பி வந்தார். வைத்தியரும் வந்துசேர்ந்தார். வைத்தியர், பீபி அம்மாவைப் பார்த்துவிட்டு, அம்மாவுக்கு

ஏற்பட்டதைப்போல் அதே நோய் அவளுக்கும் ஏற்பட்டிருப்பதாகக் கூறினர். வைத்தியர் கூறியதை எங்களால் நம்பமுடியவில்லை. பிபி அம்மா, எந்தக் காலத்திலும் கொடிய நோயால் பிடிக்கப்பட்டுப் படுக்கையில் கிடந்தவளே அல்லள்; மேலும், நிமிர்வாதம் அவள் வாழ்நாளில் என்றுமே அவளைப் பிடித்தது கிடையாது. என்றும் நல்ல வலிமையோடு இருந்தவளான அவள் உணர்வற்றுக் கிடந்தாள்; அவளைக் காப்பாற்ற எங்களால் எதுவும் செய்ய முடியாமற் போயிற்று. நாங்கள் ஒவ்வொருவரும் நிலை கலங்கி நின்றோம். முக்கியமாக, நானே மிகவும் கலங்கினேன். மற்றவருக்கு இருந்ததைவிட எனக்கு அவள் அளவற்ற அன்பும், அருமையும் உடையவளாய் இருந்தாள். மீண்டும், முந்தின இரவேபோல், அவள் பக்கத்தில் இருந்து, இரவு முழுதும் விழித்து, மற்றொரு இரவைக் கழிப்பது ஒன்றே எங்களால் செய்யக்கூடியதாய் இருந்தது. துக்கத்தால் அசைவதற்கும் முடியாதவளாய் நான் அவள் அருகில் உட்கார்ந்திருந்தேன். அவள் எங்களோடு இருந்த நாட்களையும், அந்நாட்களில் அவள் என்பால் செலுத்திய அன்பையும் ஆதரவையும், என் தாய்க்கும் எங்கள் குடும்பத்துக்கும் அவள் ஆற்றிய தளராத சேவையையும் பற்றிய சிந்தனைகள் என் உள்ளத்தில் வெள்ளம்போல் பெருகின. என் மனம் சுக்கல் சுக்கலாய், ஆயிரம் துண்டுகளாய் உடைபடுவதைப் போன்ற ஓர் உணர்ச்சி உண்டாயிற்று; அவ்வாறு உடைந்துபோயிருந்தாலும், நான் ஆறுதல் பெற்றிருப்பேன்; அதுவும் வாய்க்கவில்லை. அவளுடைய சாந்தமான முகத்தைப் பார்த்துக்கொண்டும், ஏன் இத்தகைய சம்பவங்கள் எல்லாம் நிகழ்கின்றன என்று சிந்தித்துக்கொண்டும் நான் உட்கார்ந்திருந்தேன்.

இரவு முழுதும் அவளைக் கவனித்துக்கொண்டிருந்தோம். மறு நாட் காலை ஐந்து மணிக்கு, என் தாய் இறந்து சரியாய் இருபத்து நான்கு மணி நேரத்தில் பிபி அம்மாவும் உயிர் துறந்தாள். யாவற்றையும் முற்றும் இழந்தவர்களாக எங்களைத் தவிக்கவிட்டு, எங்கள் தாயும், பெரிய அன்னையும் இருபத்து நான்கு மணி நேரத்திற்குள்ளாக இறந்துபோவதென்பது முடியாததாய்த் தோன்றிற்று.

மற்ருெரு உத்தரக் கிரியை நடைபெற லாயிற்று; அது முதல் நாள் நடந்ததி னின்றும் முற்றும் மாறு பட்டது. பீபி அம்மா துறவுபூண் டிருந்தமையால், சடங்கு எதுவும் செய்ய வில்லை. அவள் அழகையே அவளுக்கு அணிகலனுய் அணிவித்து, ஒரு மஞ்சள் நிறப் புடவையை மட்டும் அவளுக்கு உடுத்தினேம். கிழத்தன்மையுடனும், திரை விழுந்துமிருந்த அவள் முகம், திடீரெனச் சுருக்கங்க ளெல்லாம் மறைந்து, இளமையுடன் துலங்கிற்று. ஒரு வேளை கூற்றுவனும்கூடத் தன்னிட மிருந்து பிரிக்க முடியாத தன் தங்கையுடன், அவள் சந்தோஷமாகவும், அமைதியோடும் இருக்கிருளோ என யாரும் எண்ணும் படியாக, அவள் முகம் அவ்வளவு சாந்தத்தோடு விளங்கிற்று.

தாயின் தகனக் கிரியைக்கு ஆயிரக்கலக்கான மக்கள் வந்து கூடிவிட்டார்கள். ஓர் அரசியைப்போல் அதிக ஆடம்பரத்தோடும், அலங்காரத்தோடும் அவள் சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்லப்பட்டாள். பீபி அம்மாவுடைய சவ அடக்கத்திற்கும் பெருந்திரளான மக்கள் கூடியிருந்தார்கள். ஆனல், தாங்கள் 'தேவி' எனக் கருதும் அவளுக்குத் தங்கள் கடைசி வணக்கத்தைச் செலுத்துவதற்காக, கந்தைத் துணி யணிந்தவர்களும், வயது முதிர்ந்தவர்களும், மெலிந்துள்ளவர்களுமான ஏழை மக்கள் கணக்கிலடங்கா எண்ணிக்கையினராய், மேலும் மேலும் பெருகி வந்து கூடினமை குறிப்பிடத்தக்கதாய் இருந்தது. எல்லோரும் பீபி அம்மாவைப் பேரளவில் நேசித்தார்கள். ஏழை யாயினும் தாழ்ந்தோ ராயினும், ஆணே பெண்ணே யாரும், பீபி அம்மா விடம் சென்று புத்திமதியையோ, வேறு உதவிகளையோ நாடுவது வழக்கம்; வேண்டியதைப் பெருது யாரும் திரும்பிய தில்லை. எளிய முறையில் அவள் வாழ்ந்தாள்; தன் அன்பிற் குரியவர்களின் இன்ப துன்பங்களில் அவளும் பங்குகொண்டு வாழ்ந்தாள். ஏழைகட்கும், தேவையுடையவர்கட்கும் தாராளமாகக் கொடுத்தாள். அவள் மரணத்தால் ஓர் அநாதரட்சகரை இழந்துவிட்டதாக அம்மக்கள் கருதினர்கள். எல்லாவிதங்களாலும் உடல் நலத்தோடு நன்ருய் இருந்தவள், தன் தங்கை இறந்த இருபத்து நான்கு மணி நேரத்தில் இறந்துவிட்டதைக் கண்டதும், அவள், பெரிய மகான்களுக்கு

ஒப்பானவள் என்று மக்கள் எண்ணினர்கள். வேறு யார் இவ்வாறு தன் உயிரைக்கொடுக்க முடியும்?

தங்கள் அன்பிற் குரிய பீபி அம்மாவுடைய முகத்தைப் பார்ப்பதற்காக, எங்கள் வீட்டுத் தோட்டத்தில் ஒருவரை ஒருவர் தள்ளிக்கொண்டு முன்வந்துகொண்டிருந்த கூட்டம், எங்கள் தோட்டம் முழுதும் நிறைந்திருந்ததைக் கண்டு நான் வியப்புற்றேன். அன்று, எளிய முறையில், அலங்காரம் ஏதுமின்றி, அவள் பிரேதத்தை மௌனமாக ஊர்வலத்தில் எடுத்துச் சென்றதைக் கண்டு, நீர் வடிக்காத கண்களில்லை; வருந்தாத நெஞ்சம் இல்லை.

என் அருமைப் பெரிய அன்னைக்கு நான் என் இறுதி வணக்கத்தை மௌனமாய்ச் செலுத்திக்கொண்டேன். தன் தங்கையின்றித் தனித்து வாழ இயலாத அவளுக்கு, இறந்ததே நல்லது என அறிந்தேன்; எனினும், பல ஆண்டுகள் சென்றாலும் ஆறாத துக்கத்தைத் தருவதாகிய இவ்விரட்டைச் சாவை அவ்வளவு விரைவில் உண்டு பண்ணாமல், அவள், சிறிது காலமாவது வாழ்ந்திருக்கலாகாதா என்றே என் மனம் ஆசைப்பட்டது.

“யாரடா அது! உன் சோதிட மூட்டையைக் கட்டு.
போதும் நிறுத்து! வெறுப்பும் சாவும் மறுபடி வருவதா?
போதும்! மறுபடியும் மனிதர் ஒருவரை ஒருவர் கொன்று
போதும், போனதெல்லாம் போதும் [முடிவதா?
இனி இந்த உலகம், ஒன்று உடனே அழிந்துபோகட்டும்
இல்லாவிட்டால் முழுதும் உய்ந்து சாந்தி பெறட்டும்.

— ஷெல்லி.

1939, ஜுலையில் இலங்கைக்குச் செல்ல ஜவாஹர் முடிவுசெய்தபோது, என்னையும் உடன் வருமாறு அழைத்தார்; நானும் ஆவலுடன் ஒப்புக்கொண்டேன். இலங்கை செல்லவேண்டும் என்று நான் நெடுநாட்களாய் நினைத்தேன்; ஆனால், அதற்கு முன் எனக்குச் சமயம் வாய்க்கவில்லை.

ஜவாஹர் ஒரு சமரசத் தூதராக அங்கு சென்றார். இலங்கையிலுள்ள இந்தியர்களுக்கும், சிங்களவர்களுக்குமிடையே இருந்த மனத்தாங்கல் இந்தியாவிலுள்ளவர்களுக்கு அதிகத் துக்கத்தை உண்டாக்கியது. எனவே, ஜவாஹர் நேரில் சென்று, விஷயங்களை அறிந்து, இயன்றால், இவ்விரு சாராரிடையேயும் ஒற்றுமையை ஏற்படுத்த வேண்டுமென்று முடிவுசெய்யப்பட்டது.

மப்பும் பனியும் நிறைந்த ஒரு நாட் காலை, புனா ஆகாய விமான நிலயத்திலிருந்து ஒரு சிறிய விமானத்தில் ஜவாஹரும் நானும் பிரயாணமானோம். அவ்வதி காலையிலும் எங்களுக்கு விடைகொடுத்தனுப்ப, காங்கிரஸ் அதிகாரிகளும், ஜவாஹரின் நண்பர்களும், அவரிடத்தில் மிக்க மதிப்பு வைத்திருந்தவர்களுமான பலர் ஒரு பெருங் கூட்டமாக வந்திருந்தார்கள். தக்ஷிணத்திலுள்ள ஹைதராபாத், சென்னை, திருச்சினாப்பள்ளி ஆகிய நகரங்களின் வழியாக மறு நாள் கொழும்புக்குப் போய்ச் சேர்ந்தோம். வழியில் ஹைதராபாத் நகரத்தில் சரோஜினி நாயுடுவோடும், அவரது குடும்பத்தாரோடும் மிக இனிய சிற்றுண்டி அருந்தினோம். லவினியா மலைச் சிகர விமான நிலயத்தின் மேல் எங்கள் விமானம் பறந்து சென்றபோது, அந்நிலயத்தில் மக்கள் பெருங் கூட்டமாகக் கூடியிருந்

ததைக் கண்டோம். எங்கள் விமானத்தைச் செலுத்தி வந்தவர் அறிவும் திருவும் உடைய இளைஞர். அவர், விமான நிலையத்தில் உடனே இறங்காது, கூட்டத்தைச் சுற்றிச் சுற்றி, வரவரத் தாழ்ந்து விமானத்தைச் செலுத்தினார். பிறகு, வணக்கம் செலுத்துவதைப் போல் விமானத்தை உயரச் செலுத்தி, மீண்டும் கீழ் நோக்கிப் பாய்ந்து இறங்கினார். எங்கள் விமானம் கீழே இறங்கியதும், மக்கள் கூட்டம் விமானத்தை நோக்கி விரைந்து வந்தது. மிகவும் கஷ்டப்பட்டுக் கூட்டத்தை அடக்க வேண்டியதாயிற்று. ஜவாஹரை வரவேற்க மக்கள் திரண்டு வந்தார்கள். அன்புடன் கைகளைக் குலுக்கி, புன்சிரிப்போடு எங்களை வரவேற்றதைக் கண்டு, நண்பர்களோடு வீட்டி லிருப்பதைப் போன்ற உணர்ச்சி எங்களுக்கு உண்டாயிற்று.

சிங்களவரும், இந்தியரும் தோளோடு தோள் உராய்ந்துகொண்டு எங்களை அன்புடன் வரவேற்ற காட்சி, ஜவாஹரின் தூதுக்கு ஒரு நற் சகுனமாகத் தோன்றியது. பரவிவந்த சமூகப் பூசலை ஜவாஹர் ஓரளவு நீக்கிவிட்டார் என்றும், தன் வேலையில் வெற்றியடைந்தா ரென்றும் நாம் அப்பொழுது நினைத்தோ மெனினும், பிற்கால நிகழ்ச்சிகள், நாம் நினைத்தது தவறு என்பதை நிதர்சனமாகக் காட்டின. எங்கள் இலங்கைப் பிரயாணம் முடிந்து, ஒரு மாதத்திற்குப் பின் எண்ணூறு இந்தியத் தொழிலாளர்களை இலங்கை அரசாங்கம் வேலையி லின்றும் நீக்கி, இந்தியாவுக்கு அனுப்பிவிட்டது.

இலங்கையும், அங்கு நான் கண்ட காட்சிகளும் எனக்கு இன்பத்தை அளித்தன. நிறைந்த - விரைவாக ஆற்றவேண்டிய - நிகழ்ச்சித் திட்டங்களுக் கிடையே, ஜவாஹர், அங்குள்ள காட்சிகளைக் கண்டு களிக்கவும் எப்போதும் நேரத்தைப் பெற முடிந்தது. அழகிய கோயில்கள் சிலவற்றையும், தோட்டங்கள் சிலவற்றையும் நாங்கள் பார்த்தோம். எங்கு சென்றாலும் எங்களுக்கு மிகப் பெரிய அளவில் உபசாரங்கள் நடைபெற்றன. ஒருவருக் கொருவர் போட்டிபோட்டுக்கொண்டு சிங்களவரும், இந்தியரும் அன்பினால் எங்களைக் கொன்று விடுவார்கள்போ லிருந்தது. இத்தகைய அன்பும், நற் குணமும் வாய்ந்த மக்களுக் கிடையே மிகத் துன்பத்தை

விளக்கத் தக்க சச்சரவு எப்படி நிகழக்கூடும் என்று நான் ஆச்சரியப்பட்டேன்.

இலங்கையில் 'பர்தா' முறையோ அல்லது பெண்களைத் தனித்துவைக்கும் முறையோ கிடையாது; எனினும், பெரும்பாலும் விருந்துக் கூட்டங்களில் நாங்கள் வந்து சேர்ந்து மாலை அணிவிக்கப்பெற்றதும், விருந்தளிப்பவர் ஜவாஹரிடம் சென்று, அவரை அழைத்துக்கொண்டு ஆண்கள் இருக்கும் பகுதிக்கும், அவர் மனைவி என்னை அழைத்துக்கொண்டு பெண்கள் இருக்கும் பகுதிக்கும் சென்றார்கள். சாப்பிடும் வேளையில் கொஞ்ச நேரம் இருபாலாரும் கலந் திருந்த பின்னர், மீண்டும் ஆண்களும் பெண்களும் தனித்தனியாய்ப் பிரிந்து போய்விட்டார்கள்.

இந்தியாவில் பெண்ணுரிமை இயக்கம் இல்லா திருக்கிறது. பெரும்பாலும் சமூக சீர்திருத்த விஷயங்களிலேயே கவனஞ் செலுத்தும் பெண்கள் ஸ்தாபனங்கள் சில இருக்கின்றன. ஆனால், தேசிய இயக்கத்தின் மூலமாகவே, ஆண்களுடன் சமத்துவமாயும், சுதந்திரமாயும் வாழ வேண்டு மென்ற பெருங் கிளர்ச்சி நம் நாட்டுப் பெண்களுக்கு உண்டாயிற்று. ஆண்களோடு பெண்களும், தோளோடு தோள் நின்று பொருதலா மென்பது அஹிம்சைப் போர் முறையின் தத்துவமாகும். காந்திஜியின் தத்துவம், அவர்களுக்கு மிகவும் பிடித்தமா யிருந்தது. அவர்களுக்கு, தங்கள் தாய்நாட்டுக்கு உழைக்கும் வழியைக் காட்டியதோடு, அது, பழைய பழக்க வழக்கங்களை உடைத் தெறிவதற்கும் வழிகாட்டியது. கஷ்டங்களையும், ஆபத்துக்களையும், சிறைவாசத்தையும், மரணத்தையும் ஏற்க, ஆயிரக்கணக்கான பெண்மணிகள், தனித்து வாழ்ந்த தங்கள் வீட்டு வாழ்க்கையைவிட்டு வெளியேறினார்கள்; சமூக, அரசியல் விடுதலைகளையும் ஸ்தாபித்தார்கள்.

இலங்கையில், நாங்கள் சென்ற இடங்களி லெல்லாம், ஜவாஹரைப் பார்க்கவும், அவரது பேச்சைக் கேட்கவும், பல்லாயிரக்கணக்கில் மக்கள் திரண்டு வந்தார்கள்; அவர்களிற் பெரும்பான்மையோர், தேயிலைத் தோட்டங்களிலும், ரப்பர்த் தோட்டங்களிலும் வேலை செய்த தமிழ்நாட்டைச் சேர்ந்த தொழிலாளர்களான ஆண்களும், பெண்களுமே யாகும். பாதை எங்கும்,

ஜவாஹரை ஒரு பிறிதாவது தரிசிப்பதற்காக அவர்கள் யாவரும், பல மணி நேரம் வரை பொறுமையாய்க் காத்துக்கொண்டிருந்தார்கள். தங்கள் தாய்நாட்டிலிருந்து நம்பிக்கையையும் மகிழ்ச்சியையும் புகட்டத் தூதுவந்த அவர்பால், அவர்களுக்கிருந்த அன்பும், நம்பிக்கையும் அவர்கள் முகத்தில் ஜொலித்தன; இக்காட்சியைக் காரில் சென்றுகொண்டிருந்தபோதும், சில சமயங்களில் என் அண்ணனுடன் காரிலிருந்து இறங்கி நின்றுகொண்டிருந்தபோதும் கண்டேன். தாய்நாட்டை விட்டுத் தொலை தூரத்தில் இருப்பினும், தாய்நாடு தங்களை மறக்கவில்லை என்பதை ஜவாஹரின் வருகை அவர்களுக்கு உறுதிப்படுத்துவதுபோன்றிருந்தது.

நாள் முழுதும் வேலைசெய்து, ஜவாஹர் முற்றிலும் ஓய்ந்து காணப்பட்டபோது, இவ்வளவு சிரமமும் பிரயோஜனமுடையதுதானா என நான் அடிக்கடி ஐயுற்றேன். ஆனால், என்னைச் சுற்றி நின்ற மக்களின் முகங்களைக் கண்டதும் என் ஐயங்கள் நீங்கின. கோடிக் கணக்கான மக்களின் அன்பையும் நம்பிக்கையையும் இதுபோல் உடன் கொண்டுவருமாயின், எவ்வளவு சிரமமும் ஏற்றுக்கொள்ளத்தக்கதே.

எண்ணிறந்த கூட்டங்கள், வரவேற்புகள், காட்சிகளைக் காணல் முதலியன இடைவிடாது பத்து நாட்கள் நிகழ்ந்த பின்னர், ஜவாஹரின் இலங்கைப் பிரயாணம் முடிந்துவிட்டது. நான் மட்டும் மேற்கொண்டு ஒரு வாரம் அங்கு தங்கிப் பின்னர்தான் பம்பாய்க்குத் திரும்பினேன்.

இலங்கையிலிருந்து திரும்பியதும், ஜவாஹர் சீனுவுக்குச் செல்ல முடிவுசெய்தார். பிரயாணத்தில் பரிபூரண வெற்றி பெறவேண்டும் என்ற எங்கள் உள்ளம் நிறைந்த ஆசையைத் தெரிவித்து, அவரை வழியனுப்ப ராஜாவும், நானும், குழந்தைகளும் அலஹாபாத்துக்குச் சென்றோம். சீனுவுக்குச் செல்லவேண்டும் என்ற ஆசை ஜவாஹருக்கு எப்போதும் இருந்துகொண்டிருந்தது. ஏனெனில், பழம்பெரும் நாடுகள்மீது ஜவாஹருக்கு ஒரு பெரிய மோகம் உண்டு. கடைசியில் அவர் தமது ஆசையைப் பூர்த்திசெய்துகொள்ள முடிந்தது பற்றி நான் சந்தோஷமடைந்தேன். சீனுவில் சொற்ப காலமே

அவர் தங்கினர். யுத்தம் மூண்டுவிட்டமையால், அவர் தமது பிரயாணத்தைத் திடீரென முடித்துக்கொள்ள வேண்டிய தாயிற்று. சின மக்களும், அம்மக்களின் மாபெருந் தலைவரான ஜெனரலிஸிமோ சியாங்கை ஷேக்கும் எவ்விதத் துன்பத்தையும் ஏற்றுத் தங்கள் நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்கக் கொண்டுள்ள திரத்தையும், உறுதியையும் அறிந்து, அவர்கள்பால் தம் உள்ளத்தில் பெரு மதிப்புக் கொண்டவராய் அவர் தாய் நாட்டுக்குத் திரும்பினர்.

*1939*, செப்டம்பரில், இங்கிலாந்தும், ஜெர்மனியும் யுத்தப் பிரகடனம் செய்தன. ஜெர்மனியோடு இந்தியா வும், மக்களின் சம்மதத்தைப் பெருமலேயே, போர் தொடுத்துவிட்டது எனப் பிரகடனம் செய்யப்பட்டது. இறுதியில் ஏகாதிபத்தியம் ஒழியும் என்றும், கட்டுக்கடங் காத கொந்தளிப்பின் விளைவாய்ப் புதிய சுதந்திர இந்தியா உதய மாகும் என்றும் நம்பி, ஆரம்பத்தில் நாங்கள் நிலைமையை ஆவலுடன் கவனித்துக்கொண் டிருந்தோம். காந்திஜியின் அனுதாபமும், காங்கிரஸின் அனுதாபமும் பரிபூரணமாகப் பிரிட்டிஷார் பக்கமே யிருந்தன; உதவி யும், ஆதரவும் அளிப்பதாக உண்மையோடு கூறினர்கள். யுத்த லட்சியத்தைப் பற்றி, ஓர் அறிக்கை வெளியிட வேண்டும் என்று நாங்கள் விரும்பினோம்; ஆனல், அப்படி எதுவும் வெளிவர வில்லை. தன்னுடைய சரித் திரத்தின் நெருக்கடியான அங்கிலையில், பிரிட்டிஷ் அரசாங்கம் தனது மனப்பான்மையை மாற்றிக்கொள்ளும் என்று நம்பிய கோடிக்கணக்கான இந்திய மக்களின் மனத்தில் படிப்படியாக மயக்கம் நீங்கி, ஏகாதிபத்தியத்தை முறியடிக்க வேண்டு மென்னும் உணர்ச்சி பலமாக வேரூன்றியது.

*1940*-ல் தனிப்பட்ட சத்யாக்கிரகத்தைத் துவங்கு வதைத் தவிர, காந்திஜிக்கு வேறு வழி யில்லாதுபோயிற்று. தேசத்தின் சார்பாக எதிர்ப்பைத் தெரிவித்துக்கொள்வ தற்கு அது ஒரு சிறந்த வழியாக இருந்தது. நிகரற்ற சத்யாக்கிரகியான விநோபா பாவே, காந்திஜியால் முதற் சத்யாக்கிரகியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அடுத்த தாக, ஜவாஹர் சத்யாக்கிரகம் செய்வதாக இருந்தது. ஆனல், ஜவாஹர் சத்யாக்கிரகத்தைத் துவக்கும்

முன்னரே, வார்தாவி லிருந்து அலஹாபாத்துக்குத் திரும்பி வந்துகொண் டிருந்தபோது, அரசாங்கம் அவரை வழிமறித்துக் கைதுசெய்து, கோரக்பூருக்குக் கொண்டு போய்விட்டது. அங்கு அவருக்கு நான்கு வருடங்கள் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. இத்தீர்ப்பைக் கண்டு இந்திய மக்கள் ஸ்தம்பித்துப்போயினர்; ஆனால், போராட்டத்தை இறுதி வரை தீவிரமாக நடத்த முன்னிலும் உறுதிகொண்டனர்.

சத்யாக்கிரகம் செய்ய விரும்பியவர்களுக்குள் முதலாமவர் ராஜாதான். ஆனால், இது பற்றிக் காந்திஜி யிடம் அனுமதி கேட்டபோது, நான் இதற்கு ஒப்புக் கொள்கிறேனா என்றும், எக்காரணம் பற்றியாவது நான் ஒப்புக்கொள்ள வில்லை யாயின், ராஜா சிறை செல்வதில் அவருக்கு இஷ்ட மில்லை யென்றும் காந்திஜி ராஜாவுக்குத் தெரிவித்துவிட்டார். எங்களைச் சுற்றி அழிவும், குழப்பமும் வரவரப் பெருகிக்கொண்டுவந்த அந்தச் சந்தர்ப்பத்தில் தன்னால் இயன்றதைச் செய்யாவிடில் ராஜாவுக்கு மகிழ்ச்சி ஏற்படாது என அறிந்த நான், அவர் விருப்பத்திற்கு இணங்கினேன். போராட்டத்தில் கலந்துகொள்ளா திருப்பது மிகவும் கஷ்டமாக விருந்த தால், ராஜா சிறை சென்று ஒரு மாதத்திற்குப் பின், சத்யாக்கிரகம் செய்ய எனக்கு அனுமதி யளிக்கும்படி பாபுவுக்குக் கடிதம் எழுதினேன். ஆனால், என் குழந்தை கள் மிகச் சிறியவர்களாய் இருந்தமையால், அவர்களைக் கவனித்துக்கொள்ளவேண்டிய அவசியத்தை முன்னிட்டு, எனக்கு அனுமதி யளிக்க அவர் மறுத்துவிட்டார். அவர் முடிவிற்குக் கீழ்ப்படிவதைத் தவிர எனக்கு வேறு வழி யில்லாதுபோயிற்று. நானும், ராஜாவும் அதற்கு முன், இரண்டு அல்லது மூன்று வாரங்களுக்கு அதிகமாகப் பிரிந்திருந்தது கிடையாது. எனவே, அவர் பிரிவு எனக்கு மிகுந்த துக்கத்தை விளைத்தது. பதினைந்து நாட்களுக்கு ஒரு முறை பேட்டி காணவும், கடிதங்கள் எழுதிக் கொள்ளவும் எனக்கு அனுமதி கிடைத்தது. எனக்குப் பல அரிய நண்பர்கள் இருந்தார்க ளெனினும், அடிக்கடி, தனிமையில் விடப்பட்டதாக நான் உணர்ந் தேன். என் குழந்தைகளும் ராஜாவைக் காணாது ஏங்கினர்கள்; குழந்தைகளாய் இருந்தபோதிலும்,

அவர்கள் உண்மையை அறிந்துகொண்டு, ராஜாவைப் பற்றிப் பெருமை யடைந்தார்கள். ராஜாவைப் பேட்டி கண்டு திரும்பிய பின், சில சமயங்களில், குழந்தைகள் துக்கம் மிகுதியால் தங்களை மீறிக் கண்ணீர் சிந்தினார்கள். இப்போது ராஜாவைப் பேட்டி காண எங்களுக்கு அனுமதி கிடைக்கவில்லை; சிறு குழந்தைகள் மனத்திற்கூட இது வெறுப்பையும், கோபத்தையும் உண்டாக்கி யிருக்கிறது.

"உலகத்திலே உள்ள ஏகாதிபத்தியங்களின்
சைனியமெல்லாம் ஒன்றாகத் திரண்டாலும்
ஓர் உண்மையான மனிதனுடைய
ஆன்மபலத்தை அழிக்க முடியாது.
அவனே இறுதியில் வெற்றி பெறுவான்."

— டெரென்ஸ் மாக்ஸ்வினி.

எங்கள் பெற்றோருக்கு ஏறக்குறையப் பதினொரு ஆண்டுகள் வரை ஜவாஹர் ஒருவரே பிள்ளையாக இருந்தார்; எனவே, அவர்கள் - சிறப்பாக, எங்கள் அன்னை - அவருக்கு மிகவும் செல்லங் கொடுத்துப் பாராட்டி வந்தார்கள். அவர் பள்ளிக்குச் செல்ல வில்லை. உபாத்தியாயர்களைக்கொண்டு வீட்டிலேயே அவருக்குப் பாடம் கற்பிக்கப்பட்டுவந்தது. தம்பியோ, தங்கையோ யின்றிப் பல வருடங்கள் வரை, அவர் தன்னந்தனியே வளர்ந்து வந்தார். அப்பா, அவரைச் செல்லத்தோடு வளர்த்தாரெனினும், அதிர்ஷ்டவசமாகக் கட்டுப்பாட்டை வற்புறுத்துபவராகவும் இருந்தார். இது ஜவாஹரை, அதிகக் கர்வி யாவதி லின்றும் தடுத்தது.

சின்னஞ்சிறு பையனாய் இருந்தபோதே ஜவாஹருக்கு அப்பா விடத்தில் பெரு மதிப்பு உண்டு. உயர்வு, தைரியம், வலிமை ஆகியவற்றின் உருவமாகத் தந்தை, ஜவாஹருக்குக் காட்சியளித்தார். தாமும், தந்தையைப்போல் ஆக வேண்டும் என்பதே ஜவாஹரின் பேராசையாய் இருந்தது. தந்தையிடத்துப் பெரு மதிப்பும், பேரன்பும் கொண்டிருந்தும், ஜவாஹருக்குத் தந்தையிடம் அதிகப் பயமும் இருந்தது. ஒரு முறை அப்பாவின் கோபத்திற்கு இரையாகி, அதனால், பெரிதும் பயந்துபோன அவர், அந்நினைவை எளிதில் மறக்கவே யில்லை. ஆனால், காரணமின்றி எங்களை அப்பா தண்டிக்கமாட்டார் என்பதை நாங்கள் எல்லோருமே நன்கறிவோம். ஆண்டுகள் செல்லச் செல்ல அப்பா தம் கோபத்தை அடக்கிக் கொள்ளும் ஆற்றலைப் பெற்றார்; கோபம், என்றுமே அவரிட மிருந்துவந்த தெனினும், அவருடைய ஆளுகைக் குட்பட் டிருந்தது.

ஒத்த வயதுடைய தோழர்கள் மிகச் சிலராகவே யிருந்ததால், தம்மிலும் மூத்தவர்களுடனே கூடி, ஜவாஹர்

கூச்சமும் உணர்ச்சியும் மிக்க ஒரு குழந்தையாக வளர்ந்து வந்தார். பதினுன்காம் வயதில் ஹாரோ பள்ளிக் கூடத்திற்குச் சென்று, கேம்ப்ரிட்ஜில் தமது பயிற்சியை முடித்து, 1912-ல் அவர் இந்தியாவுக்குத் திரும்பினுர். 1908-ல் விடுமுறைக்காக வீட்டிற்கு வந்திருந்தபோது அவருக்கு என்னைத் தெரியு மாயினும், நான் அவரை முதன்முறையாக அறியத் தொடங்கியது 1912-ல்தான்.

பல ஆண்டுகள் வரை என் சகோதரர் எனக்கு ஒரு வேற்று மனிதராகவே யிருந்தார். அவரை நான் விரும்பிப் பாராட்டுவதும், வெறுப்பதுமாக இருந்தேன். சில வருஷங்களுக்குப் பிறகு, சத்யாக்கிரக இயக்கம் தொடங்கப்பட்டது; ஜவாஹர் தம்மை அரசியலுக்கு அர்ப்பணம் செய்தார். அப்போது அவரை நான் நன் கறியலானேன். மிகவும் அகந்தை யுள்ளவ ரென ஒரு காலத்தில் நான் தவருக எண்ணிய என் சகோதரரைப் பற்றி மிக நன்ருக அறிந்ததும், அவரைப் பேரளவில் மதிக்கலானேன்.

மூத்த சகோதரர் என்ற முறையில் ஜவாஹர் முற்றும் தகுதியானவர். என் தமக்கைக்கும், எனக்கும் அவர் வயதில் மிகவும் மூத்தவ ரெனினும், அவர், பெரும்பாலான மற்ற அண்ணன்மார்களைப்போல் எங்களுக்குச் சட்டதிட்டங் களை விதிக்கமாட்டார். எங்கள் செயல்களை அவர் விரும் பாத பட்சத்தில், சாந்தமாயும், தந்திரமாயும் அவைகளைப் பற்றி எங்களிடம் பேசி, எங்கள் குற்றத்தை நாங்களே உணர்ந்துகொள்ளுமாறு செய்வார். நாங்கள் அவர் கருத்தை ஏற்றுக்கொள்ளாவிட்டால், மனத்தில் எவ்வளவு வருத்த மிருந்தாலும், அதை எங்களிடம் காண்பித்துக் கொள்ளாமல் இருப்பதோடு, தம் கருத்தை எங்கள்பால் வற்புறுத்தவும் மாட்டார். எனக்கும் சுவரூபுக்கும் அவர் எங்கள் அருமைப் 'பெரியண்ணு'வாக இருப்பது மாத்திர மன்றி, அன்பாலும், நல்லுணர்வாலும் தம்மை ஒப்பற்ற வராய் ஆக்கிக்கொண்ட ஒரு சிறந்த நண்பராகவும், தோழ ராகவும் இருக்கின்ருர். வாழ்க்கையில் ஏற்படக்கூடிய சிறிய இன்னல்கள், இடுக்கண்கள் ஆகியவற்ருல் நாங்கள் தளர்ச்சி யடையும் காலத்தில், சாய்ந் திருந்து களைப் பகற்றிச் சக்தி பெறத் துணைசெய்யும் சக்தித் தூணுகத் தந்தை யிருந்துவந்ததுபோல், ஜவாஹரும் எப்போதும்

இருந்துவருகிறார். தாமாக அவர் ஒருவருக்கும் புத்திமதி கூறமாட்டார்; ஆனால், தம்மை நாடி வருபவர்களுக்கு உதவியும், யோசனையும் கூற எப்பொழுதும் தயாரா யிருப்பார். கண்டிப்பார் என்றும், கேலிசெய்வார் என்றும் கூசாமல் அவரிடத்தில் எத்தகைய மர்மத்தையும் வெளியிடலாம். பூரண மக்கட்பண்பு வாய்ந்த அவர், பிறருடைய குற்றம் குறைகளை அனுதாபத்தோடு உணருவதற்குத் தவறுவ தில்லை.

தந்தையின் மரணத்திற்குப் பின், அன்னையிடத்தும், என்னிடத்தும் அவர் மிகுந்த அக்கறை காட்டினர். சுவரூபுக்கு விவாகமாய்விட்டது; அவளுக்குத் தனிக் குடும்பமும் ஏற்பட்டுவிட்டது. இப்பொழுது ஜவாஹரே எங்கள் சிறிய குடும்பத்தின் தலைவராய்விட்டபடியால், நானாவது, அம்மாவாவது ஏனைய இந்தியக் குடும்பங்களைப் போல், அவர் கையை எதிர்பார்த்துத்தான் ஆகவேண்டும் என்ற நினைப்பு எங்களுக்கு இருக்கக்கூடாது என்று ஜவாஹர் கருதினர். இக்கருத்து எங்களுக்குத் தோன்ற வில்லை; ஆனால், அவருக்குத் தோன்றியது. என் தந்தை மரணசாஸனம் ஒன்றும் எழுதிவைக்க வில்லை; அவர் அவ்வாறு செய்ய வேண்டுமென நாங்கள் எதிர்பார்க்கவு மில்லை; அப்படிச் செய்வது பொருந்தும் செயலு மன்று. எனினும், சில விஷயங்கள் ஜவாஹருக்குக் கவலையை அளித்தன. நான், அப்பா இருந்த காலத்தில் சுயேச்சை யோடு இருந்ததைப்போல் இல்லையென உணரலாமென் றும், பணம் முதலியவற்றை அவரிடம் கேட்க விரும்பாம லிருக்கலாமென்றும் எண்ணியவராய், ஆனந்தபவனத்திற் கும், தந்தையின் இதர பொருள்களுக்கும் என் தாயும், நானுமே உரியவர்களென மதிக்கும்படியும், அவர் எங்கள் விஷயங்களையும், எங்களையும் கவனித்துக்கொள்ளும் மேற் பார்வையாளரே என்றும், இம்முறையிலேயே நாங்கள் அவரை நோக்க வேண்டுமென்றும் ஜவாஹர் எனக்கு ஒரு கடிதம் எழுதினர். தமக்கும், தம் குடும்பத்திற்கும் அதிகப் பொருள் தேவை யில்லையென்றும், ஆகையால், நாங்கள் முன்போல் வாழ்க்கையை நடத்திக்கொள்ளத் தயங்க லாகாதுஎன்றும், அவசியமானபோது உதவி செய்யவும் யோசனை கூறவுமே தாம் இருப்பதாக நாங்கள் கருத வேண்டுமென்றும் அவர் அறிவித்தார். வேறு எந்தச்

சகோதரரும் இவ்வாறு நடந்துகொள்வா ரென நான் நினைக்க வில்லை. தம் கொள்கைப்படியே நடந்துகாட்டும், கொள்கையினின்றும் ஒருபோதும் பிறழாத ஓர் உதாரண புருஷர் ஜவாஹர்.

அப்பாவைப்போல் ஜவாஹருக்கும் முன்கோபம் உண்டு. எனக்குப் பதினொன்கு வயதா யிருந்தபோது, அவர் எனக்குக் கணக்குச் சொல்லித் தருவதாகக் கூறினார்; கணக்குப் பாடம் எனக்குப் பெரிதும் வெருட்சியை அளிக்கக்கூடியதாகும்; எனக்கு அதில் சந்தோஷ மில்லை; எனினும், வேறு வழி யின்றி ஒப்புக்கொண்டேன். ஜவாஹரிடத்தில் அப்போதும் எனக்குப் பய மிருந்து வந்தது. ஆனால், அவர் என்னிடம் கோபம்கொள்வா ரென நான் எதிர்பார்க்க வில்லை. ஆரம்பத்தில் சில பாடங்களில் நல்ல வெற்றியே இருந்தது; ஜவாஹர் சொல்லிக்கொடுத்த முறை கவர்ச்சி யளிப்பதா யிருந்தது. நான் முழு மனத் தோடும் வெறுத்துவந்த பாடம், மிகவும் சுவை யுள்ள பாடமாக ஆனது. ஒவ்வொரு நாளும் ஜவாஹருடன் செலவிடும் அந்த ஒரு மணி நேரத்தை நான் எதிர்பார்த்துக் கொண்டே யிருப்பேன். ஜவாஹரிடத்தில் எனக்கு அதிக நம்பிக்கையும், அச்சக் குறைவும் ஏற்பட ஆரம்பித்த சமயம், என் எண்ணத்திற்கு நேர்மாறாக விஷயங்கள் நடக்க ஆரம்பித்தன. ஒரு நாள் மனத்தை ஒருமைப்படுத்த முடியாமலும், எதையும் நினைவில்கொள்ள முடியாமலும் மந்தமா யிருந்தேன். இது அவருக்குக் கோபத்தை உண்டாக்கியது (அதற்காக நான் அவரைக் குறை கூற வில்லை). அவருக்குக் கோபம் உண்டானதைக் கண்டதும், என் மனத்தில் ஒன்றுமே தங்காமல் முற்றும் சூன்யமாய் விட்டது. சில வாக்கியங்களை அவர் உரக்கக் கத்தினார். நான் நடுநடுங்கிப்போனேன். நிலைகலங்கி மன மூடைந்த வளாய், சாந்தமாக அவரைவிட் டகன்று செல்ல நான் முயன்றேன். ஒரு பாடத்தை மறப்பது எந்தவிதத்தாலும் ஒரு பெரிய குற்ற மல்ல என்று எண்ணினேன். என்மனம் புண்பட்டது; மெதுவாக என் புத்தகங்களை அடுக்கும் பொழுது, மறைக்க முயன்றும் மீறிய கண்ணீர் பெருகியது. என் கண்களி லுள்ள நீரை அவர் கவனித்துவிட்டார். ஒரு கணத்தில் அவர் கோபம் மாறிவிட்டது. தம் செயலுக்காகப் பெரிதும் துக்கித்தார். என்னைத் தழுவிக்

கொண்டு, மன்னிப்புக் கேட்டார். ஆனால், அதன் பின்னர், அவரது இன் சொற்களாலும், நற்செயல்களாலுங்கூடப் பாடத்தைத் தொடர்ந்து பயில என்னைத் தூண்ட முடியவில்லை.

ஜவாஹரை நன்கு அறியாதவர்கள், அரசியலும், படிப்பும், எழுத்துந் தவிர அவருக்கு வாழ்க்கையில் சுவையளிக்கத் தக்க வேறு விஷயங்களொன்றுமில்லை என்று நினைக்கிறார்கள். அவருடைய காலத்தின் பெரும் பகுதி இவ்வகையில் செலவாவது உண்மையே. ஆனால், அவருக்குப் பல விஷயங்களிலும், பொழுதுபோக்குகளிலும் பிரியம் உண்டு. இவ்விஷயங்களில் தாம் விரும்புமளவு காலத்தைக் கழிப்பதற்குப் போதிய அவகாசம் அவருக்குக் கிடைப்பதில்லை. அரசியல் அலுவல் முடிந்த பின்னர், அவருக்குக் கிடைக்கும் நேரத்தைப் பொதுவாகப் படிப்பதிலும், சில வேளைகளில், எழுதுவதிலும் ஈடுபடுத்துகிறார். விசேஷமாய்ச் சிறைச்சாலைகளிலேயே அவர் எழுதுவது வழக்கம். அவருக்குக் குதிரை ஏற்றத்தில் அதிகப் பிரியம் உண்டு; அதில் அவர் நிபுணர். நீந்துவதிலும் அவருக்குப் பிரியமுண்டாயினும், அதற்குரிய சந்தர்ப்பம் வாய்ப்பது அரிது. நாங்கள் வற்புறுத்தினாலன்றி, படக்காட்சிக்கோ, நாடகங்களுக்கோ அவர் போகமாட்டார்; உண்மையில் அவை நன்றாயிருக்குமாயின் மிகவும் ரஸிப்பார். ஜவாஹரை மிகச் சந்தோஷமான நிலையில் காண வேண்டுமாயின், குழந்தைகளோடு அவர் இருக்கும்போதுதான் காண வேண்டும். குழந்தைகள் மீது அவருக்கு அதிக அன்பு உண்டு. குழந்தைகளும் அவரிடத்தில் பிரியமாய் நடந்துகொள்ளும். அவர் எத்தகைய அவசர வேலையில் ஈடுபட்டிருப்பினும், எவ்வளவு களைத்துப்போயிருப்பினும், ஒரு குழந்தை அவரிடம் வந்து, ஏதாவது விஷயங்களைப் பற்றிக் கேட்குமாயின், அவர் அதை ஒதுக்கித் தள்ளாமல், தம் வேலையை நிறுத்திவிட்டுக் குழந்தையின் வினாக்களுக்கு விடையளித்து, அதன் ஆசையைத் திருப்திப்படுத்துவார்.

நாள் முழுதும் வேலைசெய்த பின்னர், ஜவாஹர் தம் சகோதரிகளின் குழந்தைகளோடும், மற்ற குழந்தைகளோடும் விளையாடித் தம் மனத்திற்கு ஓய்வளிக்கும் காட்சி காண்டற்கினியது. அந்தச் சமயத்தில் எல்லாக்

கவலைகளையும் அவர் மறந்துவிடுவார். தாமும் ஒரு குழந்தையைப் போல, அக்குழந்தைகளோடு ஓடுவார்; விளையாடுவார்; குழந்தைகள் கொள்கின்ற அளவு ஆனந்தத்தை அவரும் கொள்வார். வயதுவந்தவர்கள் என்ற உணர்ச்சி நமக்கு இருப்பதால், நம்மில் பலர் அவ்வாறு குழந்தைகளோடு குழந்தைகளாய்ப் பழக முடியாது. ஜவாஹர் மக்கட்பண்பும், எளிமையும் உடையவ ராகலின், அவரால் அது முடியும். அதனுல் தான் தங்கள் மனத்திற் குகந்த தோழராய், குழந்தைகள் அவரை ஏற்றுக்கொள்கின்றன.

ஜவாஹரிடத்தில் தவருத ஒரு குணம் உண்டு. சிறையில் இருப்பினும், வெளியே இருப்பினும், அலுவலில் மூழ்கி யிருப்பினும், களைத்து ஓய்ந்துபோய் இருப்பினும் ஒருவரது பிறந்த நாள், ஆண்டு நிறைவு, மற்றெந்த விசேட நாளையும் அவர் மறப்ப தில்லை. மறவாத இச்சிறிய செயல்கள்தாம், அவரை அறிந்தவர்களை அவரிடத்தில் ஆழ்ந்த அன்புகொள்ளுமாறு செய்கின்றன. இந்தியப் பஞ்சாங்கப்படி, ஒரு முறை என் பிறந்த நாள் 1930, அக்டோபர் 19-ம் நாளன்று வந்தது. அன்று ஜவாஹர் கைதுசெய்யப்பட்டார். கைதானதுமே இதை நினைத்துக் கொண்டார். சில நாட்களுக்குப் பின் ஒரு கடிதத்தில், "144-வது பிரிவின் கீழ் பிரிட்டிஷ் அரசாங்கம் எனக்குத் தடை உத்தரவு பிறப்பித்து, அக்டோபர் 19-ல் என்னைக் கைதுசெய்ததில், அந்நாளில் நடக்கவேண்டிய முக்கியமான நிகழ்ச்சியை மறந்துவிட்டது - என் அருமைத் தங்கைக்கு நான் அளிக்க விருந்த அழகும், கலைநுட்பமு முடைய பரிசைக் கொடுக்கமுடியாதுபோயிற்று - என்னுல் இதைச் செய்ய முடியாமற்போனது வருந்தத் தக்கது. ஆனுல், இதற்கு விரைவில் நான் பரிகாரம் தேடிக்கொள்ள வேண்டும். நீ ஒரு புத்தகக் கடைக்குச் சென்று, பண்டை மக்களின் ஞானம், இடைக்கால மக்களின் நம்பிக்கை, தற்கால மக்களின் அவநம்பிக்கை, பிற்கால மக்களின் சிறப்புக்கள் ஆகிய விஷயங்களைப் பற்றிக் கூறும் நூல் களை விலைக்கு வாங்கிக்கொள். உரிய காலத்தில் வழங்கப்படா தொழிந்ததெனினும், தன் சிறிய தங்கையை அடிக்கடி நினைந்துகொண் டிருக்கும், ஓரளவு மறதியை யுடைய சகோதரனின் அன்பு மிக்க நன்கொடையாக

அவற்றை நீ ஏற்றுக்கொள். இவ்வாறு தேர்ந்தெடுத்துப் பெற்ற புத்தகங்களைப் படித்து, அவைகளிலிருந்து, கனவுகளும், மாட மாளிகைகளும், நந்தவனங்களும், நீர் ஓடைகளும் நிறைந்து, அழகும் இன்பமும் குடிகொண்டதும், நமது இத் துக்க உலகத்தை வருத்தும் இன்னல்களுக்கு இடமளிக்காததுமான ஒரு மந்திர நகரத்தைச் சிருஷ்டி செய்; இம்மந்திர நகரத்தைச் சிருஷ்டிக்கும் இடையரு நன் முயற்சியான நீண்ட இன்பத்தொண்டு, வாழ்க்கையில் பிரதிபலித்து, நம்மைச் சுற்றியிருக்கும் அவலட்சணங்களையும், கவலைகளையும் ஓடச் செய்யும்'' என்று அவர் எழுதியிருந்தார்.

இங்கிலாந்திலிருந்து திரும்பியபோது ஜவாஹர் மிக நாகரிகமும், வசீகரமும் உடைய இளைஞராக இருந்தார். ஆனால், ஒரு பணக்காரரின் மகனிடம் காணக்கூடியது போலவே சிறிது கர்வமுடையவராகவும், அதிகச் செல்வத்தால் கெடுக்கப்பட்டவராகவும் இருந்தார். பிறகு, அவருடைய வாழ்க்கை அனுபவங்கள் துக்கமும், ஏமாற்றமும் நிறைந்தனவாய் இருந்தன. இவ்வனுபவங்களால் அவர் பக்குவமடைந்தார். இன்று அவர் முன்னையிலும் பன்மடங்கு எல்லோராலும் நேசிக்கப்படுதற்குரிய குணங்களோடு திகழ்கின்றார். மேனாட்டுக் கல்வி அவரிடம் அதிகம் படிந்திருக்கிறது. இந்தியர்க்குரிய தன்மைகளைப் பார்க்கிலும் மேனாட்டார்க்குரிய தன்மைகளே அவரிடம் நிறைந்துள்ளன என்று மக்கள் கருதுகிறார்கள். ஆனால், யுத்தமும், பசிப்பிணியும் நிறைந்த இந்தக் காலத்தில், உலகத்தின் ஒழுக்கம், அரசியல் ஆகியவற்றில் ஏற்பட்டுள்ள குழப்பங்களைக் கண்ணுறும்போது, இந்திய, சீன மக்களது பண்பாடுகளின் ஆழ்ந்தகன்ற மூலாதார உண்மைகள் நம்மில் பலரது உள்ளங்களை - சிறப்பாக, ஜவாஹரது உள்ளத்தை ஈர்க்கின்றன. இப்பொழுது ஜவாஹரின் மனப்போக்கு நமது பழமையில் ஆழ வேரூன்றியிருக்கின்றது; மேலும், பண்டைய வளத்திலிருந்தே பெருகிவரும் ஆதாரத்தைப் பெற்றுவருகின்றது. பொய்மை மயக்கங்களற்ற சூழ்நிலைக்கிடையே அவர் கொண்டுள்ள மன அமைதியும், கசப்பின்மையும் உண்மையில் இந்தியர்க்குரியனவே. அவரிடம் கீழ்நாட்டுத் தத்துவங்களும், மேனாட்டுத் தத்துவங்களும் கலந்து

காணப்படுகின்றன. முன்னையது, வாழ்க்கை நெறியை அவருக்குக் காட்டுகிறது; பின்னையது, மக்களின் முன்னேற்ற சக்திகளைப் பற்றிய அறிவை யளிக்கிறது. எனவே, அவருடைய தீவிர தேசியப் பற்று, ஏனைய நாடுகளின் கொடுமைக்கும், அடக்குமுறைக்கும் உள்ளாகியிருக்கும் வரை, நம் மக்களின் விடுதலையும் நிலையுடையதாகாது என்ற உறுதியான நம்பிக்கையாக வளர்ந்திருக்கிறது. இந்தியாவில் போலவே, ஆசியாவின் வேறெந்தப் பாகத்திலாவது அல்லது ஐரோப்பாவிலாவது நடக்கும் எந்த நிகழ்ச்சியும், உணர்ச்சி மிகுந்த அவர் மனத்தை அசைத்துவிடுகின்றது. அவர் ஓர் உண்மையான சுதந்திரப் போர்வீரர். விடுதலைக்கு ஆபத்து எங்கு நேரினும், எப்பொழுது நேரினும், தம் முழு ஆற்றலோடும் அதை எதிர்க்க அவர் எப்போதும் தயாரா யிருக்கிறார்.

ஜவாஹர் அகங்காரம்கொண்டவர் என்றும், பிறரைப் பொருட்படுத்தாதவர் என்றும் சிலர் கருதுகிறார்கள். இக்குணங்களை அவர்கள் வெறுக்கிறார்கள். சில வேளைகளில் அவர் அவ்வாறு நடந்துகொள்ளலாம்; ஆனால், இயற்கையில், அவருக்கு அகம்பாவமோ, பிறரைத் தாழ்த்தும் தன்மையோ அணுவளவும் கிடையாது. பொதுமக்கள் பார்வையி லிருந்தும் விலகிக்கொள்ளவே அவர் விரும்புவார்; உண்மையில் அது அவருக்கு இயலுமாயின், அவர் இன்னும் அதிக அமைதியோடு வாழ்வார் என்பதை நான் நன்கறிவேன்; ஆனால், அது அவ்வாறு நிகழப்போவதில்லை. அவர் ஓரளவு மன உலகத்தில் சஞ்சரிப்பவர்; உழைப்பால் களைப் படைந்த பின்னர், அடிக்கடி அவர் அமைதியோடு தம் பார்வையைத் தூரத்தில் செலுத்துவார்; அப்பொழுது அவர், கனவுகள் காண்பவர் போலவும், வேறுலகில் இருப்பவர் போலவும் தோன்றுவார். சில சமயங்களில் அவர் கண்களில் சொல்லொணாத் துயர் படியும்; ஐம்பத்து மூன்று வயதாகியும் இளமைத் தோற்றத்தை யுடைய அவரது முகம், திடீரென முதிர்ந்து கிழத்தன்மையைக் காட்டும். ஜவாஹருக்கு வாழ்க்கை, சுலபமாக இருக்க வில்லை. இதே துறையில் செல்கின்ற ஏனையோர்களிடம் காணப்படுவது போன்றே அவரிடமும் கஷ்ட நஷ்டம், தியாகம் ஆகியவற்றின் அடையாளங்கள் காணப்படுகின்றன.

சிலர் ஜவாஹர்மீது குறை கூறுகின்றார்கள்; குற்றம் காண்கின்றார்கள்; ஆனால், அவர்கள் ஜவாஹரை நன்கறிய வில்லை; அவருடைய போக்கின் தன்மையைப் பற்றியும் ஆழ்ந்து சிந்திக்க வில்லை. நம்மைப் போல் அவரும் ஒரு மனிதர்தான்; நம்மிடம் காணப்படும் குறைகள் அவரிடமும் இருக்கின்றன. ஆனால், பெரும்பான்மையான மக்கள், தீங்குகள் - குறைகளுக்குக் கீழ்ப்படிந்துவிடுகிறார்கள்; அவர் அப்படியில்லை; இதுவே அவருடைய பெருமைக்குக் காரணம். இன்று இந்தியா அவரை வழிபடுகிறதென்றால், அது, அவருடைய நற்குணங்களுக் காகவும், வலிமைக் காகவும், தீரத்திற் காகவும் மாத்திரம் அன்று; அவரிடம் நிறைந் துள்ள மனிதப்பண்புகளுக் காகவுமே யாகும். அவர், தம்மை ஒரு வீர ராகவோ, பிராணத் தியாகி யாகவோ கருதுவ தில்லை; ஆனால், சேவை தேவைப்படும் காலத்தில் தம் நாட்டிற்குத் தம் உயிருள்ள வரையில் சேவைசெய்யும் பெருமை தமக்குக் கிட்டியதாகவே அவர் கருதுகிறார். தம் வாழ்க்கையிற் பாதியை அவர் சிறையிலே கழித்தவ ராயினும், சிறை செல்வதை ஒரு பெரும் தியாக மாகவும், ஆரவாரத்தை உண்டாக்கும் செயலாகவும் அவர் மதிப்ப தில்லை; அயலார் ஆதிக்கத்தி லிருந்து விடுதலைபெறுவதற்காக நாம் நடத்தும் போராட்டத்தில் ஏற்படக்கூடிய தடுத்தற் கரிய நிகழ்ச்சி யென்றே அதனை எண்ணுகின்றார். ஒரு முறை, சிறையி லிருந்து அவர், "அஸ்திவாரத்திலேயே ஆட்டங்கண் டிருக்கும் இன்றைய உலக நிலையில், சிறை செல்லுதல் ஓர் அற்பமான செயலே. ஒரு காரியத் திட்டம் என்ற முறையில், சிறை யிருப்பதில் ஒருவருக்குப் பயனும், நன்மையும் உண்டாகின்றன. ஆனால், உள்ளுணர்ச்சி அதைச் செய்யுமாறு தூண்டாவிடின், அவ்வாறு செய்வதில் அதிகப் பயனொன்று மில்லை என்றுதான் நான் நினைக்கின்றேன். உள்ளுணர்ச்சியின் தூண்டுதல் இருக்கு மாயின், வேறு எதையும் நாம் பொருட்படுத்த வேண்டிய தில்லை. ஏனெனில், அவ் வுணர்ச்சியே ஒரு சக்தியைக் கொடுக்கிறது" என்று எனக்கு எழுதியுள்ளார்.

எவ்வாறாயினும், திரும்பத் திரும்பச் சிறை செல்லுதல் என்பது எளிய செயல் அன்று. அடிக்கடி சிறை சென்று ஓய்வெடுத்துக்கொள்ளலா மென்று நினைப்பதற்குச் சிறை

வாழ்க்கை சுக வாழ்க்கை யன்று. பல தடவைகள் சிறை சென்றவர்களுக்கு, அது பழக்கமாய்விடுகிற தென்றும், அவ்வாறு செல்பவர்கள் அதைப் பற்றிக் கவலைப்படுவ தில்லை என்றும் சிலர் நினைக்கிறார்கள். சில மாதங்கள் சிறைவாசம் செய்தால் அவர்களுக்கு இத்தவறான கருத்து உண்டாகாது. உடலுக்குத் துன்பம் தரும் பல அசௌகரியங்கள் சிறையில் உண்டு. சிறை செல்பவர்கள் இவற்றை எதிர்பார்த்தே செல்ல வேண்டும். நாடோறும் சிறையில் நடக்கும் கொடுமைகளை எதிர்த்து நிற்பதற்குத் தன் மனத்தைச் சரிப்படுத்திக்கொள்வதுதான் ஒருவருக்குச் சிரமமான காரியம்.

தங்கள் அன்பிற் குரியவர்களைவிட்டுப் பிரிக்கப்படுதலும், அதிகாரிகளின் இஷ்டத்தைப் பொறுத்தே அவர்களைப் பார்க்க முடிவதும், சிறைவாசிகட்கு மனக்கசப்பையும், கோபத்தையும் விளைக்கும். நீடித்த காலம் சிறைவாசம் செய்தும், தம் மனத்தில் கசப் பென்பதையே கொள்ளா திருத்தல், உண்மையில் ஒரு பெரிய வெற்றியே யாகும்; ஜவாஹர் இதை வெற்றிகரமாய்ச் செய்திருக்கிறார்.

ஜவாஹர் எனக்கு எழுதியிருந்தபடி ஒரு செயலை ஆற்ற, உள்ளுணர்ச்சியின் தூண்டுதல் இருந்தால் மட்டுமே, தனது லட்சியத்தை அடைய ஒருவன் எந்த விதமான துன்பத்தையும், இடுக்கணையும் ஏற்றுக்கொள்ள முடியும். ஜவாஹரை அடிக்கடி திரும்பத் திரும்பக் கைது செய்தபோது எங்களுக்குப் பெருங் கவலையா யிருந்தது. ஆனால், தம் நிலைமையை ஜவாஹர் பொருட்படுத்தா திருக்கும் செயல் கண்டு, அவருக்கு என்ன நேர்ந்தாலும் பொறுத்துக்கொள்ளும் தைரியத்தையும், வலிமையையும் நாங்கள் பெறுமாறு அவர் செய்தார்.

1940-ல் ஜவாஹருக்கு நான்கு ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை யளிக்கப்பட்டது. பழிவாங்கும் செயல் போன்ற அக்கொடுமையான தண்டனையைப் பற்றி யறிந்த ஒவ்வொருவரும் ஸ்தம்பித்துப்போனார்கள். எங்களுக்கும் அது ஒரு பேரிடியாய் இருந்தது. நன்கு பழக்கம் பெற்றவர்களா யிருந்தும், எங்களுக்கு எதிர்பாராததும், புதுமையானதுமான அரசாங்கத்தின் இந்தத் தண்டனை, முன் ஜவாஹருக்கு வழங்கப்பட்ட தண்டனைகளால்

பெற்ற வருத்தத்தைவிட அதிக வருத்தத்தை உண்டாக்கிற்று. மிக்க மனம் உடைந்தவளாய், என் மனோ நிலையை ஜவாஹருக்குத் தெரிவித்து, அவரை, ராஜாவும், நானுமாக டேராடூன் சிறையில் பேட்டிகாணலாமா என்று எழுதிக் கேட்டேன். அதற்கு அவர், "ராஜாவும், நீயும் எப்பொழுது வேண்டுமானாலும் வரலாம். இன்னும் சிறிது காலமானால், ராஜாவைப் பார்க்கும் சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்காதாகையால், (சில நாட்களில், ராஜாவும் தனிப்பட்டோர் சத்யாக்கிரகம் செய்வதாய் இருந்தார்) சிறப்பாக, நான் ராஜாவைப் பார்க்க விரும்புகிறேன். அருமைத் தங்கையே, நீயும் ராஜாவும் என் தண்டனையைக் கேட்டுக் கவலையுற்றதை யறிய நான் மனம் வருந்துகின்றேன். இதுகாறும் அடையப் பெறாத மன அமைதியை நான் இப்பொழுது சிறையில் அடைந்துவருகிறேன்; இந்தப் பைத்தியக்கார உலகத்தில் இது ஓர் அற்புதச் செயலே. என் வேலைகள் நிறுத்தப்பட்டுவிட்டனவாதலால், அவைகளிற் கருத்தைச் செலுத்தும் என் புலன்களை அடக்கவும், அவற்றை உள்முகப்படுத்தி ஒருமை நிலையில் நிற்கவும் சில பயிற்சிகளால் நான் கற்றுக்கொண் டிருக்கிறேன். என்னைப் பற்றி அநாவசியமாய் நீங்கள் கவலைப்பட வேண்டாம். நம் எல்லோருக்கும் வாழ்க்கை கஷ்டமாகிக்கொண்டுதான் வருகிறது. சுகமாக வாழ்ந்த தெல்லாம், மறைந்துபோன பழங் காலத்தோடு கழிந்துவிட்டன. மறுபடியும் எப்போது நாம் அவ்வாழ்க்கையை அடைவோம்? அடையவும் முடியுமா? இது ஒருவருக்குந் தெரியாது. வாழ்க்கை எப்படி யிருந்தாலும் அதோடு நாம் ஒத்துப்போக வேண்டும்; இல்லாததற்கு ஏங்குதல் கூடாது. மனத் துன்பங்களையும், குழப்பங்களையும் நோக்க, உடலுக்கு ஏற்படும் ஆபத்தும், கஷ்டமும் அற்பமானவையே. வாழ்க்கை மென்மையாய் இருப்பினும், கடினமாய் இருப்பினும், அதிலிருந்து நாம் ஒரு பயனைப் பெறக்கூடும்; ஆனால், பரிபூரணமான இன்ப வாழ்வடைவதற்கு, நாம் செய்யவேண்டிய தியாகங்களைப் பொருட்படுத்தக் கூடாது" என்று பதில் எழுதினார்.

இளமையிலேயே, ஆபத்துக்களையோ, இடையூறுகளையோ கண்டு அஞ்சா திருக்கும் பழக்கத்தை அப்பா எங்களுக்குக் கற்றுக்கொடுத் திருந்தார். 'முதலில்

உன்னைப் பாதுகாத்துக்கொள்' என்பது என்றும் எங்கள் குறிக்கோளாக இருந்ததில்லை. எங்கள் குழந்தைகளுக்கும் இது குறிக்கோளாக விருக்கமாட்டாது என்று நான் நம்புகிறேன். ஆபத்துக்களும், கஷ்டங்களும் நிறைந்த அலுவல்கள், பிரயாணங்களை எங்களில் ஒவ்வொருவரும் பன்முறை மேற்கொள்ளவேண்டியதா யிருந்திருக்கிறது. ஆனால், எங்கள் நிகழ்ச்சித் திட்டத்தின்படி காரியங்களைச் செய்ய இவை என்றும் எங்களைத் தடைசெய்ததில்லை. ஜவாஹரைப் பொறுத்தமட்டில், ஏதாவது ஒரு செயலில் ஆபத்து இருப்பதாக அவருக்குச் சிறிது சந்தேகமிருந்தால் கூட, அச்செயலை உடனே ஆற்ற அவ்வாபத்தே அவருக்குத் தூண்டுகோலாய் இருக்கும். சிலவேளைகளில் இது, சிறு பிள்ளைத்தனம் என்று தோன்றவும்கூடும்; ஆனால், வாழ்க்கையில் அடியெடுத்து வைக்கும்போதெல்லாம், ஆபத்தை எதிர்பார்த்து நடுநடுங்கிக்கொண்டு கோழைகளாய் இருப்பதைப்பார்க்கிலும், எதற்கும் அஞ்சாத தன்மையைப் பெறுவது நன்மையானது.

ஒருமுறை கல்கத்தாவில் உள்ள அலிப்பூர் சிறையில் ஜவாஹர் இருந்தார். கைதுசெய்யப்பெற்றதி லிருந்து, அவரிடமிருந்து எங்களுக்கு ஒரு தகவலும் கிடைக்காததால், இயற்கையாகவே நாங்கள் சிறிது கவலையோடிருந்தோம். அப்போது, ஜவாஹருக்கே உரிய முறையில் அவரிடமிருந்து ஒரு கடிதம் எனக்கு வந்தது. அதில் அவர், "அருமைத் தங்கையே, என்னைப் பற்றி நீயும், பிறரும் வருந்தமாட்டார்கள் என்று நான் நினைக்கிறேன். நான் சௌகரியமாக இருக்கிறேன்; சுகமாகவும், ஓய்வுடனும் இருக்கிறேன். வேறு வேலை யின்மையால், நிறையப் படிக்க முடியும் - படிப்பதும் சிந்திப்பதுந்தான் நித்திய வேலை. இதன் பயனாய், நான் நீண்ட காலத்திற்குப் பின் வெளிவரும்போது, முன்னையிலும் சிறிது அதிக அறிவுடையவனாக இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். அறிவு ஏமாற்றும் தன்மை யுடைய பொருள்; அதைக் கைப்பற்றுவது கஷ்டம்; எனினும், சில நேரங்களில் திடீரென எதிர்பாராமலே அது நம்மிடம் வருகிறது. அதுவரை, நான் அறிவுத் தெய்வத்தின் பக்தனாய், அவளுடைய அருளை நாடினவனாய் இருக்க விரும்புகிறேன். ஒரு நாள் அவள் எனக்கு அருள்புரியலாம். அவளிடம்

பக்தி செலுத்துவதற்குச் சிறைச்சாலை எவ்வகையிலும் தகுதியான இடமன்று என்று சொல்வதற்கில்லை. இங்கு, வாழ்க்கையின் அமளிகள் தூரத்திலிருக்கின்றன; அவை நம் கவனத்தைக் கலைப்பதில்லை. ஒதுங்கி நின்று, செய்மையிலுள்ள பிறருடைய வாழ்க்கையைப் பார்ப்பதில் நலம் இருக்கின்றது '' என்று எழுதியிருக்கிறார்.

வெளிப்புற வாழ்க்கையில் ஜவாஹருக்கு அதிக விருப்பமுண்டு. மாரிக்கால விளையாட்டுக்களில் அவருக்கு மிக மிகப் பிரியம்; நாங்கள் சுவிட்ஸர்லாண்டில் இருந்த போது, பனிப்பரப்பில் உருளைகளைக்கொண்ட ஜோடுகளை அணிந்து நடமாடுவதிலும், நீண்ட ஜோடுகளை அணிந்து ஓடுவதிலும் அவர் பல மணி நேரத்தைக் கழித்துவந்தார். இயற்கைத் தாயின் தூய்மை மிக்க குழந்தையான அவர், இயற்கையின் புதுமையிலும், சிறிதும் கெடாத அதன் வளப்பிலும் திளைப்பதில் பேரவா வுடையவர்.

வேலையிலும் சரி, விளையாட்டிலும் சரி ஒவ்வொருவரும் நன்றாயும், திறமையுடனும் இருக்க வேண்டும் என அவர் எதிர்பார்க்கிறார். ஒவ்வொருவரிடமும் மிகக் கடுமையாகவே அவர் வேலைவாங்கும் சுபாவம் உடையவர். 1931-ல் ஏறக்குறைய ஆறு மாதங்கள் நான் அவருடைய காரியதரிசியாய் வேலைபார்த்துவந்தேன். அவ்வேலை எனக்குப் பிரியமாய் இருந்ததெனினும், வேலையில் குற்றம் நேரா திருக்க வேண்டுமே என்றும், அவருக்குக் கோபம் விளையாமல் இருக்க வேண்டுமே என்றும் சாசுவதமான அச்சத்துடனேயே இருப்பேன். நல்லவேளையாக அப்படி ஒன்றும் நேராமல் தப்பித்துக்கொண்டேன். இது என் ஆற்றலாலா அல்லது அதிர்ஷ்டவசத்தாலா என்பதை என்னால் தீர்மானிக்கவே முடியவில்லை. மந்தமாயும், திறமை யில்லாமலும், சோம்பேறித்தனமாயும் இருப்பது ஜவாஹரின் கண்களுக்கு மன்னிக்க முடியாத குற்றங்களாகத் தோன்றும். ஒரு முறை, சுவிட்ஸர்லாண்டில், எனக்குப் பனித் தரையில் ஓடுவதற்குச் சொல்லிக் கொடுக்க அவர் முன்வந்தார். முதற் பாடம் கற்பிக்க அவர் குறித்த நாள் நல்ல நாளாக இல்லை; இரண்டு நாட்களாகப் பனி விழவில்லை. அதற்கு முன் பெய்த பனி, வழுக்கக் கூடியதாய் உறைந்துவிட்டது; எனவே, நான் நிற்க முயன்றபோதெல்லாம் திடீர்திடீரென்று

வருத்தத்தோடு வழுக்கியே விழ்ந்தேன். என்னால் என் நிலையைச் சரிப்படுத்திக்கொள்ள முடியவில்லை; ஜவாஹருக்கு அமைதி குலைந்தது. நான் பயந்துவிட்டதாக நினைத்து மனம் நொந்தார்; மிகவும் துணிவோடு சில அடிகள் எடுத்துவைக்க முயன்றேன்; ஆனால், ஒவ்வொரு முறையும் தாறுமாறாகக் கீழே விழ்ந்தேன்; எனவே, ஜவாஹர் தம் அபிப்பிராயத்தைப் பற்றிச் சிறியதொரு பிரசங்கம் புரிந்து, வருடங்கள் பத்து லட்சமானாலும், என்னால் பனியில் ஓடக் கற்றுக்கொள்ள முடியவே முடியாது என்று ஜோஸ்யம் கூறினார். இத்தகைய இழிவால் மனவேதனை யடைந்தவளாய், எங்கள் சுவிஸ் நண்பர் ஒருவரிடம் சென்று, எனக்கு அதைக் கற்றுக் கொடுக்குமாறு கேட்டுக்கொண்டேன்; பின், மூன்றே நாட்களில் நானாகவே பனியில் ஓடக் கற்றுக்கொண்டேன். ஜவாஹரின் ஜோஸ்யம் பலிக்கவில்லை.

நோயாளிகளுக்கு ஜவாஹர் ஒரு நிகரற்ற தாதி போன்று உதவுவார். மிகவும் சோதனைக் காலங்களிற்கூட அவர் எல்லை யில்லாத அமைதியும் உணர்வும் உடையவர். அவரது பொறுமைக்கு அளவு கிடையாது. எப்போதும் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப நடந்துகொள்வதுதான் அவருடைய சிறப்பான தன்மை. தம்மைச் சூழ்ந்துள்ள சிறிய பொருள்களிலும், அவர் அழகையும் இன்பத்தையும் காண்பார்; இது எளிதன்று. டேராடூன் சிறையி லிருந்து ஒருமுறை, "மலைச் சிகரத்தி லுள்ளதைத் தவிர மற்றெங்குமிருந்த பனியைப் பெரும்பாலும் சூரியனின் பிற்பகல் வெப்பம் கரைத்துவிட்டது. வட இந்தியாவில், மழைபெய்த பிறகு, மேகங்கள் கலைந்து, மனத்திற்கு வியப்பையும் கவர்ச்சியையும் அளிக்கும் ஆழ்ந்த நீல நிற வானத்தை வெளிக்காட்டுகின்றன. பம்பாயில் இதை நீ அனுபவிக்கிறாயா? ஒருவேளை நீ அனுபவிக்கலாம்; ஆனால், யாரும் இக்காட்சியைக் கவனிப்பதில்லை. இன்று, மாலை நேரம் என்றும் காணாத அழகோடு இருந்தது. மேகங்கள் விளையாட்டுப் புத்தியோடு இருந்தன; அவை, புன்முறுவல் பூத்த சூரியனின் கிரணங்களைப் பிடித்துச் சிறிதும் சிரத்தையில்லாது, துறவு மனப்பான்மையுடன் எங்கும் சிதறுவனபோற் காணப்பட்டன. அற்புதமான வண்ணங்கள் தோன்றின; மறைந்தன; விபரீத உருவங்கள் எழுந்தன;

அழிந்தன; யாவற்றிற்கும் மேலாக விருந்தது மன வெழுச்சிக் குரிய வண்ணங்கள். மலை உச்சிகள் சிவந்து ஒளிர்ந்தன; அவை கைபர்ப் பிரதேசத்து மலைகளை என் நினைவிற்குக் கொண்டுவந்தன. பனிப் பரப்புக்கள் ஒவ்வொரு சமயம் ஒளி வீசின; பின்னர் மழுங்கி மறைந்தன. இப்பல்வகை யழகுகளோடு, உடனே பூரணச் சந்திரோதயமும் கலந்துகொண்டது" என்று ஜவாஹர் எனக்கு எழுதியிருக்கிறார்.

பார்வைக்கு ஜவாஹர் புன்னகை பூத்தவராய், சந்தோஷ முடையவராய்க் காணப்பெறினும், துக்கத்தை யும், துன்பத்தையும் அளவுக்கு அதிகமாகவே அனுபவித் திருக்கிறார். இளமைப் பருவத்தினளான மனைவியின் அன்பும், துணையும் அதிக அவசியமா யிருந்த காலத்தில், அவர் அவளை இழந்தது மிகக் கொடிய துக்க மாகும். தமது துக்கத்தின் மிகுதியை வெளிக்காட்டாமல் அவர் மறைத்துக்கொண்டார். சில விநாடிகள்தான் ஜவாஹர் தம்முடைய திடத்தை இழந்தவராகக் காணப்படுவார்; உடனே அவர் தமது அமைதியான தோற்றத்தையும், பூர்வ நிலையையும் பெற்றுவிடுவார்.

மிகச் சிறிய வயதிலேயே, ஜவாஹர் அரசியலில் தலையிடலானார்; இது அவருடைய ஆயுட் கால வேலை யாகும் என்று அக்காலத்தில் அவர் அறியார். சிறுகச்சிறுக நிகழ்ச்சிகள் காலப்போக்கிற் கேற்ப அவரை அழைத்துச் சென்றுவிட்டன. ஆனால், சென்ற கால வாழ்க்கையை அவர் திரும்ப வாழ நேர்ந்தால், முன் தாம் வாழ்ந்த தைப் போலவே வாழ்வார்; முறையில்தான் சில மாறுபாடுகள் இருக்கும், அவ்வளவுதான். அவர், சிறிய விஷயங்களைப் பெரிதாகக் கொள்பவ ரென்றும், கனாக் காண்பவ ரென்றும், தம் முன்னிலையில் உள்ள விஷயங் களைக் கவனிக்காமல், வேறு ஏதோ பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசுபவர் என்றும் பலர் குறை கூறுவ துண்டு. இந்தக் குற்றச்சாட்டுக்கள் உண்மையாகவும் இருக்கலாம்; இல்லாமலும் இருக்கலாம். ஆனால், ஒன்று மட்டும் மறுக்க முடியாத உண்மை யாகும். அதாவது, அவர் கனவு காணும் மனிதர் என்பது. எதிர்காலத்தின் பெருமையை அவர் கனவுகாண்கிறார். அக்கனவுகள் அவரால் நிறை

வேற்றப்படாது போயினும், பிறரால் நிறைவேற்றப்படும். தம்மைப் பற்றிய சொந்தக் கனவுகளை அவர் காண்ப தில்லை; பெருமையுடன் விளங்கும் என்பதில் தாம் எள்ளளவும் சந்தேகங் கொள்ளாத இந்தியாவின் எதிர் காலத்தைப் பற்றி, எதன் சேவையில் தம் உயிரை மிக மகிழ்ச்சியோடு அர்ப்பணம் செய்யத் தயாரா யிருக்கின் ருரோ அதன் எதிர்காலத்தைப் பற்றியே அவர் கனவு காண்கின்ருர்.

" குழந்தையாக நான் திரிந்த இடமெலாம்
பேய் போல் இன்று வளைய வருகிறேன்.
பழைய முகங்கள் ஒன்றையும் காணோம்.
அலைந்து தேடி அலமரும் எனக்குப்
பரந்த இவ்வையம் பாலையாய்த் தோன்றும்.
இறந்தனர் சிலர் இவ்வேழையை விட்டே
அகன்றனர் சிலர் என் அருகினி லிருந்து
மறைந்தனர் சிலரிங் கொருவரும் இல்லை.
யாவரும் போயினர் யாவரும் போயினர்
பழைய முகங்கள் ஒன்றையும் காணோம்."

— சார்ளேஸ் லாம்ப்.

ஒரு வருடத்திற்குச் சிறிது முன், ஹர்ஷா, அஜித் என்னும் என் சிறிய ஆண் குழந்தைகளிருவரோடும், நான் அலஹாபாத்திற்குச் சென்றேன். ராஜாவால் எங்களோடு வரமுடியாமற் போயிற்று; ஆனால், பின்னர் வருவதாக இருந்தார். இந்திராவின் திருமணத்திற்காக நாங்கள் சென்றோம். பிரயாணம் செய்த வழி எனக்குப் பழக்க மானதுதான்; அவ்வழியின் ஒவ்வோர் இடத்தையும் நான் நன்கறிவேன். சென்ற ஒன்பதரை ஆண்டுகளாய் அதே வழியில், நான் எண்ணிறந்த தடவைகள் பிரயாணம் செய்துள்ளேன். ஆனால், ஒவ்வொரு முறையும், அலஹாபாத்தை யடைந்ததும் எத்தகைய செய்திகளைக் கேட்க நேரிடுமோ என்று சிறிது மனச் சஞ்சலத்தோடுதான் செல்வது வழக்கம்; ஏனெனில், எதிர்பாராததும், வருத்தந் தரத்தக்கதுமான சம்பவங்கள் ஏதாவது எப்பொழுதும் நிகழ்ந்துகொண்டிருந்திருக்கின்றன. அம்மாவுக்கு இருந்தாற்போல் நோய் வந்துவிட்டது என்றோ, ஜவாஹர் கைதுசெய்யப்பட்டார் என்றோ, மற்ற விதமாகவோ ஏதாவது செய்தியைக் கேள்விப்படுவது வழக்கம். ஆனால், இம்முறை ஓர் இன்ப நிகழ்ச்சியை - எனது அருமை மருமகளின் திருமணத்தைக் காணும்பொருட்டுச் சென்றேனாதலால், சந்தோஷத்தை எதிர்பார்த்தே சென்றேன்.

இரவு மிக நேரஞ் சென்று நாங்கள் அலஹாபாத் ஸ்டேஷனை அடைந்தோம். எங்களை அழைத்துக்கொண்டு

வர அனுப்பப்பெற் றிருந்த மோட்டாரில் ஏறி, வீடு நோக்கிப் புறப்பட்டோம். பதினைந்து நிமிஷங்களில், ஆனந்தபவனம் தூரத்தில் எங்களுக்குத் தெரிந்தது. வழக்கம்போல், எனது பழைய இல்லத்தைக் கண்டு, அன்பால் என் உள்ளம் நிரம்பியது. இரவில் பல ஜாமங்கள் சென்றும்கூட ஆனந்தபவனத்தில் விளக்குகள் ஜோதிமயமாய் எரிந்தன; எங்கும் சுறுசுறுப்புக் காணப் பட்டது; மக்கள், வீட்டுக்குள் போவதும் வருவதுமாய் இருந்தார்கள்; வேலைக்காரர்கள் அங்கு மிங்கும் ஓடி, வேலையில் ஈடுபட் டிருந்தார்கள். ஒவ்வோர் அறையி லிருந்தும், பேசிச் சிரித்துக்கொண் டிருக்கும் சத்தம் கேட்டது. நீண்ட பல ஆண்டுகளுக்குப் பின், ஆனந்த பவனம் மீண்டும் விழாக் கோலத்தோடு விளங்கிற்று.

எங்களுடைய மோட்டார் மெதுவாக ராஜவாசலைக் கடந்து, வீட்டின் முன்மண்டபத்திற்குச் சென்றது. மோட்டார் நின்றதும், என் குழந்தைகளை மறந்து, வெளியிற் குதித்து, அண்ணாவைத் தேடி ஓடினேன். சில அடிகள் கூடச் சென்றிருக்கமாட்டேன், அப்போது ஜவாஹரே தம் அறையைவிட்டு வெளியே வந்து, என்னை யும், என் குழந்தைகளையும் தழுவிக்கொண்டார். அறிந்த வர்கள் நிரம்பிய பழைய இடத்துக்கு வந்து,ஜவாஹரையும், என் தமக்கையையும், மற்று முள்ளோரையும் மீண்டும் கண்டதில் என் மனம் உவகை அடைந்தது. ஆனந்த பவனத்திற்குச் சென்ற ஒவ்வொரு தடவையும் நான் சந்தோஷ மடைந் திருக்கிறேன்; ஆனால், அது சில விநாடி களுக்கே நிலைத் திருந்துவந்திருக்கிறது. ஏனெனில், எங்கள் அருமையான வீடு, முன் னிருந்த நிலையில் இல்லை என்ற எண்ணமும், அன்பிற் குரியவர்கள் பலர் இறந்து விட்டார்கள் என்ற எண்ணமும், புதிய தலைகீழ் மாறுதல் கள் பல நிகழ்ந்தவண்ண முள்ளன என்ற எண்ணமும் உடனே எனக்கு உதயமாகும்; கண்கள் கலங்கும். இம் முறை, எங்களுக் கெல்லாம் அது ஒரு மங்களமான சந்தர்ப்ப மாகையால், துக்கக் குறிகள் தோன்ற நான் இடங்கொடுக்க வில்லை.

இன்பமும், அமைதியும் குடிகொண் டிருந்த வீட்டில், கடந்த ஆண்டுகளில், பல விபரீதங்கள் நேர்ந்த தெனினும், மீண்டும் அங்கு வந்து, சகோதரரின் அன்பையும்,

சகோதரியின் ஆதரவையும் பெற்று, மறுபடியும் பதி னெட்டு வயதுடைய கவலையற்ற ஒரு சிறுமியைப் போன்று உணர்ச்சி கொள்வது, ஆனந்தமாகவே இருந்தது.

திருமண நாள், ஒளியோடும், அழகோடும் உதய மாயிற்று. காலை முதல், மணச் சடங்கிற் குரிய பொருள் கள் எல்லாம் தயாரா யிருக்கின்றனவா என்று மக்கள் மிகச் சுறுசுறுப்போடு கவனித்துவந்தார்கள். சிறையி லிருந்தபொழுது, அவள் தந்தையால் நூற்கப்பெற்ற மிகச் சிறந்த நூல்களால் நெசவு செய்த மெல்லிய கதராடைகளை மணப்பெண்ணுக்கு அவர்கள் அணிவித்தனர். அப்போது பல உறவினர்களும், நண்பர்களும் மணப்பெண்ணின் அறையில் வந்து குழுமி, இளம் பெண்களின் வழக்கம் போல், அவளைக் கேலிசெய்துகொண்டும், அலைக்கழித்துக் கொண்டு மிருந்தார்கள். அவள் அமைதியோடு இருப்ப தாய் நடித்தா ளெனினும், சிறிது உள்ளக் கிளர்ச்சியும், பூரிப்பும் கொண்டவளாகவே உட்கார்ந் திருந்தாள். அவளைச் சுற்றிப் பலர் அமர்ந்திருந்தார்கள். நூற் றுக்கணக்கான திருமணப் பரிசுகள் அறை முற்றும் ஏராளமாக நிரப்பிவைக்கப்பட் டிருந்தன. அழகியான அவள், அந்தச் சந்தர்ப்பத்தில் முன் எப்போதையும்விட விசேஷ அழகுடன் விளங்கினாள். மென்மையும், தேவ லோக மங்கையைப் போன்ற தோற்றமு முடைய அவள், தன்னைச் சுற்றி இருந்தவர்களோடு பேசிக்கொண்டும், சிரித்துக்கொண்டும் இருந்தாள். எனினும், சிலவேளை களில், அவளுடைய பெரிய கரிய விழிகள் எதையோ நோக் கிப் பெரிதும் சஞ்சலம் அடையும். இந்தச் சந்தோஷ தினத்தின் இன்ப ஒளியை எக்கரிய மேகத்தால் மறைக்க முடியும்? இன்றளவும் ஈடுசெய்ய வொண்ணாதபடி இறந்துபோன தன் இளந் தாயை அவள் நினைத்ததன் பயனாய் இருக்குமா? அல்லது, தன் தந்தையின் உயிராய் இருந்த அவள், தன் தந்தையைப் பிரியும் காலத்தை நினைத்ததன் பயனாய் இருக்குமா? முன்னிலும் அதிகமாக அவர் தனித் திருக்க வேண்டிய நிலையில், அவள் அவரைப் பிரிய இருக்கிறாள். பழைய தொடர்பைக் கத்தரித்துக் கொண்டு, புதிய தொரு வாழ்க்கையை மேற்கொள்ளப் போகும் செயல் பற்றி அவள் கண்களில் விசனம் தோன்றி யிருக்கலாமோ? எதிர்காலத்தில் அவளுக்கு எத்தகைய

அனுபவம் வாய்க்கப்போகின்றது - இன்பமா? துன்பமா? நிறைவா? ஏமாற்றமா? - யாரால் சொல்ல முடியும்? அவளுடைய கரிய விழிகள் மேலும் கறுத்தன; ஆனால், ஓர் இமைப்பொழுதுதான்; ஆழங்காண முடியாதவாறு அவை மீண்டும் தம் இயற்கை நிலையை அடைந்துவிட்டன.

மங்கல நேரம் நெருங்கிற்று. ஜவாஹர் அழைத்துவர, இந்திரா மணவறைக்கு வந்தாள். அங்கு மணமகன் அவள் வருகையை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். அநாவசியமான ஆடம்பரங்களின்றி, சுருக்கமான எளிய முறையில், சடங்குகள் நிறைவேறின. மணமக்களிருவரும் அருகருகே அமர்ந்திருந்தார்கள்; மணப்பெண்ணின் தந்தை, மணமக்களின் எதிரே வீற்றிருந்தார். அவருக்கு அருகே ஓர் ஆசனம் இருந்தது. அதில் யாருமில்லை. அவ்வாசனம் அவரது மனைவிக்காகப் போடப்பட்டிருந்தது. இறந்துபோனாளெனினும், அன்று, அவள், அவருடைய நெஞ்சகத்தே குடியிருந்தாள். அவருடைய வாழ்க்கையின் ஒரு பகுதியாகவே அவள் இருந்தாள். துக்கத்தை நினைவூட்டும் வகையில் இருந்த யாருமற்ற அவ் ஆசனத்தைக் கண்டவுடன், எனக்கு அவள் நினைவு பிறந்து, என் தொண்டை அடைத்துக்கொண்டது. திருமணத்தின் போது அவள் இருந்தால், எவ்வளவு ஆனந்தத்தோடு இருப்பாள்! இளமையோடும், புன்சிரிப்போடும், ஆனந்தத்தால் கண்கள் ஒளிவீச, மணப்பெண்ணைவிடச் சிறிது வயது சென்றவள் போன்ற தோற்றத்தோடு, அவளை என் மனக்கண்ணால் நான் பார்க்க முடிந்தது. சென்ற காலத்தை நினைந்து வருத்தப்படாமல், நான் என் எண்ணங்களைத் தடுத்துக்கொண்டேன்; இடங்கொடுத்தால் அவ்வெண்ணங்கள் ஒன்றன் பின் ஒன்றாய் எழுந்து, அந்த நன்னாளில் எழக்கூடிய உற்சாகத்தைக் குலைத்து விடும்.

சில நாட்கள் வரை, வழக்கம்போல் திருமண விருந்துகள் நடைபெற்றன. ஆனந்தபவனம் மீண்டும் புத்துயிர் பெற்று விளங்கிற்று. ஒருவர் பின் ஒருவராய் விருந்தாளிகள் புறப்பட்டனர். சில வாரங்கள் சென்ற பின்னர், நானும் பம்பாய்க்குத் திரும்பினேன்.

ஓராண்டு கழிந்தது. மீண்டும் நான் அலஹாபாத்திற்குச் சென்றேன். இம்முறை, ஒன்பது மாதச் சிறை

வாசத்திற்குப் பின்னர், இரண்டு வாரங்களுக்குமட்டும் வெளியி லிருக்கும் அனுமதியுடன், விடுதலைபெற்று வந்திருந்த என் சகோதரி சுவரூபோடு, ஒரு வாரம் தங்கி இருப்பதற்காகச் சென்றேன். இரவு நெடுநேரம் கழிந்து, முன்னிலும் அதிகமாய்க் கிலமடைந் திருந்ததாகத் தோன்றிய அலஹாபாத் ஸ்டேஷனை அடைந்தேன். சுவரூபுடைய மகளும், ஒரு நண்பரும் என்னை ஸ்டேஷனில் சந்தித்து, வீட்டிற்கு அழைத்துச் சென்றனர். நாங்கள் சென்றது மோட்டாரி லன்று; ஏனெனில், இப்பொழுது மோட்டார் இல்லை. பழமையான ஒரு ஜட்கா வண்டியில் சென்றோம். அது, மோசமான அந்தச் சாலையில் மெது வாக ஊர்ந்துசென்றது.

கடைசியில் ஆனந்தபவனத்தின் வெளி வாயிற் கதவுகளைக் கடந்தோம். சென்ற ஆண்டில் என்னை வரவேற்ற காட்சியினும் பெரிதும் மாறுபட்டதாக விருந்தது அப்போது என்னை வரவேற்ற காட்சி. வீட்டில், நிறைந்த வெளிச்சமுள்ள விளக்குகள் பிரகாசிக்க வில்லை; எப்போதும் அங்கும் இங்கும் ஓடியாடிக்கொண் டிருக்கும் ஊழியர்களையும் காண வில்லை. வீட்டின் வெளி மண்டபத்தில் ஒரு விளக்கு மங்கலாய் எரிந்துகொண் டிருந்தது; மற்றொரு மங்கலான விளக்கின் ஒளி, ஓர் அறையி லிருந்து எட்டிப்பார்த்துக்கொண் டிருந்தது. இவ்வெளிச்சங்களைத் தவிர வேறு வெளிச்ச மின்றி, வீடு இருட்டிக்கிடந்தது. எங்கள் வீடு, ஒளி யிழந்து, பாழடைந்து, கலகலப் பின்றிக் காணப்பட்டது. ஏதோ ஒரு தெரியாத இடத்தில் நடப்பதுபோலவும், மூலை முடுக்குகளில் என்ன இருக்குமோ என்று அறியாததுபோலவும் எனக்கு ஒருவிதப் பயமும், சோர்வும் உள்ள புதுமையான உணர்ச்சி உண்டாயிற்று. மனம் குன்றியவளாய், ஜட்காவைவிட்டுக் கீழிறங்கிச் சுவரூபைத் தேடிச் சென்றேன். அவள் அறைக்குள் நான் நுழைந்ததும், அவள் என்னை வரவேற்றுத் தழுவிக் கொண்டாள். அவளது மாறுபட்ட தோற்றத்தைக் கண்டு எனக்குள் எழுந்த துக்கத்தை, அவள் தெரிந்து கொள்ளாவாறு அடக்கிக்கொண்டு, நானும் என் கரங்களால் அவளை அணைத்துக்கொண்டேன். ஓராண்டுக்கு முன் அவள், தன் வயதினும் பத்து வயது குறைந்தவளைப் போல் இருந்ததை நான் பார்த்திருக்கிறேன். ஒன்பது

மாதங்கள் அவள் சிறையில் இருந்தாள்; இப்பொழுது சில வாரங்கள் வெளியில் இருக்க அனுமதிக்கப்பெற்றிருக்கிருள். என் அன்பிற் குரிய அவளை, மீண்டும், சிறைவாசம் பாதித்து, அதன் அடையாளமாகச் சில மாதங்களில் அவள் முகத்தில் மூப்பை உண்டாக்கிவிட்டது. நான் அங்கு ஒரு வாரம் தங்கி யிருந்த பின், என்னுடைய வீட்டையும், குழந்தைகளையும், அருமை மிக்க உறவினரைப் பிரிந்த வாழ்வையும் அடைந்தேன். இன்பமும், நம்பிக்கையும் இருந்த இடத்தை, கசப்பும், தீமையும் பற்றிக்கொண்டுவிட்ட ஓர் உலகத்தில், தன் மூன்று இளம் பெண்களும் அவர்களுக்குத் தெரிந்த வழிகளில் வாழ விட்டுவிட்டு, மீண்டும் சுவரூப், கால வரையறை யின்றிச் சிறையில் வாழச் செல்லவேண்டிய தாயிற்று.

பம்பாய்க்குத் திரும்புகையில், வண்டியில் உட்கார்ந்து கொண்டே, இனி என்று ஆனந்தபவனத்தைக் காண்பேனே என்றும், அங்கு இன்னும் எத்தகைய மாறுதல்களைக் காண நேருமோ என்றும் எண்ணினேன். முன் போல் சிரிப்பும், ஆனந்தமும் நிறைந்த வீடாக அது ஆகுமா? அல்லது, சந்தோஷத்தை இழந்து அழிந்து போன வீடாகத்தான் இருக்குமா? பின்னர் கூறியதைப் போல் இராமல், அப்பா அதற்குப் பெயர்வைத்த காலத்தில், என்ன பொருளுடன் வைத்தாரோ, அதற் கேற்ப மீண்டும் 'இன்ப மாளிகை'யாக ஆனந்தபவனம் ஆக வேண்டு மென்று நான் மௌனமாகப் பிரார்த்தித்தேன்.

துக்கத்தோடு நான் என் சிறிய வீட்டிற்குத் திரும்பி வந்தேன். எங்கள் வீடு வீடாக இல்லை; ஏனெனில், ராஜா அங்கு இல்லை; ஜவாஹரும், ஆயிரக்கணக்கான மக்களும் சிறைக்குள் அடைபட்டுக்கிடக்கிருர்கள்; வாழ்க்கை இன்பமாகவோ, திருப்தியாகவோ இல்லை. இவர்கள் எல்லோரும் உடனிருக்கவேண்டு மென விருப்பமிருந்தும், எப்படியோ வாழ்க்கை நடைபெற வேண்டிய தாயிற்று. மனித சமுதாயத்தையே விழுங்கிவரும் உலக யுத்தம், நான்கு ஆண்டுகளாய் நடைபெற்றுக்கொண்டு வருகிறது. பெயரளவிற்கூட நமது சம்மதத்தைப் பெருமல், சுதந்திரம் மறுக்கப்பெற்றவர்களாகிய நம்மையும், இப்போர்க் குழப்பத்தில் ஆழ்த்திவிட்டார்கள். எல்லா மக்களுக்கும் அமைதியையும், விடுதலையையும் அளிப்பதற்

காகவே இந்தப் போர் நடைபெறுகிறது என்று சொல்லப் படுகிறது. எனினும், இந்த நான்கு ஆண்டுகளாய், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் நமக்குச் சுதந்திர உரிமை மறுக்கப்பட்டே வருகிறது. நமக்குச் சொந்தமான அளவற்ற சாதனங்களையும், எண்ணிறந்த மக்களையும், நமது தலைவர்களின் கீழ், நாம் திரட்டும் சுதந்திரம்கூட நமக்கு மறுக்கப்பட்டுவருகிறது. ஐக்கிய நாடுகளிடம் உள்ள அனுதாபத்திற்கும், ஏகாதிபத்திய ஆதிக்கத்தின்மீதுள்ள வெறுப்பிற்கும் இடையே நம் மக்கள் திண்டாடினார்கள். எனவே, எல்லா மக்களுக்கும் விடுதலை அளிப்பதே போரின் லட்சியம் என்று தெளிவாக உறுதி கூறுமாறு நாம் கேட்டோம். நமக்குப் பதில்கூட அளிக்கப்படவில்லை. அரசாங்கம் தயங்கித் தயங்கி, 1942-ல், சண்டைக்குப் பிறகு, நமக்குச் சுயேச்சை அளிப்பதாக உறுதி கூறிற்று. அந்தச் சுயேச்சை, இவ்வுலகத்தி லுள்ள எந்தத் தேசத்தாலும் நிறைவேற்ற முடியாத நிபந்தனைகளென்னும் வேலிகளால் நாலா பக்கங்களிலும் அடைக்கப்பட்டதாகும். சென்ற காலத்திலும் இத்தகைய உறுதிகள் பல நமக்குக் கூறப்பெற்று, அவற்றில் ஒன்றுகூடச் சொன்னபடி நிறைவேற்றப்படவில்லை. ஜனநாயகத்தையும், சுயேச்சையையும் காக்க - நமக்கு மறுக்கப்பட்டது - போர் புரிவதாய்க் கூறி, அதற்காக நம்மைப் பட்டினி கிடக்கும்படியும், இரத்தம் சிந்தும்படியும், எல்லாக் கஷ்ட நஷ்டங்களையும் அனுபவிக்கும்படியும் கேட்பது எத்தகைய கேலிக்கூத்து!

இன்று நமது விடுதலைக்காகவும், நமது தலைவிதியின் போக்கை நாமே நிர்ணயித்துக்கொள்வதில் நமக்குள்ள உரிமையை யடைவதற்காகவும் போர் புரிந்து வருகிறோம். ஏகாதிபத்திய ஆதிக்க முறையை நாம் நம்மட்டிலன்றி, உலகத்திலேயே தலைகாட்ட வொட்டாமல் செய்ய நாம் வழிதேடிவருகின்றோம். நமது நாட்டிலிருந்தும், மற்றெல்லா நாடுகளிலிருந்தும், அயல்நாட்டார் ஆதிக்கமும், கொள்ளையும் ஒழியப் பாடுபடும் சக்தியின் - ஆசையின் சின்னமே நமது விடுதலை. 1941-ம் வருடத்தில் நடந்த தனிப்பட்ட சத்தியாக்ரக இயக்கம், பிரிட்டிஷ் அரசாங்கத்தின் யுத்த லட்சியத்தைத் தெளிவுபடுத்துமாறு நாம் விடுத்த கோரிக்கையே யாகும். அது உலக மக்களின்

மனச்சாட்சிக்கு அளித்த விண்ணப்பமும் ஆகும்; ஆனல், அதுவும் வீணுயிற்று. நமது விண்ணப்பம் இன்னும் வலி யுடையதாயும், நமது கஷ்டங்கள் இன்னும் அதிக மானதாயும் இருக்கவேண்டி யிருந்தது. நமது எல்லை யிலேயே பேராபத்துத் தோன்றியபோதிலும், மக்கள் இனத்திற்கே சமாதானத்தையும் விடுதலையையும் அளிக்க வும், முதலாளிகளின் ராணுவ ஆட்சிமுறைத் தத்துவத் தினர்களது ஆதிக்கத்தினின்றும் நமது நாட்டைக் காப் பாற்றிக்கொள்ளவும் அதிகமாய்த் தியாகங்கள் செய்யு மாறு, காங்கிரஸ், மக்களுக்கு விண்ணப்பித்துக் கொண்டது. எனவே, தற்போதைய போராட்டத்தைத் தொடங்கவேண்டி யிருந்தது. உண்மையில் போராட்டம் தொடங்கப்பெரு திருந்தும், அரசாங்கத்தோடு பேச்சு வார்த்தைகள் நடத்தி ஒரு முடிவிற்கு வருமுன்னரே, தலை வர்கள் சிறைப்படுத்தப்பட்டார்கள். இந்தியாவின் விடு தலைக்காக நாம் இன்று நடத்தும் போராட்டம் குறுகிய தேசிய எண்ணத்தோடுமட்டும் கூடிய தன்று; மனித சமுதாயத்திற்கே விரிவான - உண்மையான சுதந்திரத்தை வற்புறுத்துவ தாகும். எப்போதுமே இந்திய மக்கள் பாஸிஸத்தையும், ஏகாதிபத்தியத்தையும் எதிர்த்துவந் திருக்கிருர்கள்; தங்களுடைய ஏழ்மையான நிலைமையிலும், சீனு, ஸ்பெயின், இன்னும் மற்ற நாடுகளுக்கும் தங்களால் இயன்ற உதவிகளைச் செய்துவந்திருக்கிருர்கள். உருப் படியான உதவி எதுவும் செய்ய முடியாதபோது, ஆதிக்க வெறியர்களின் அடியின்கீழ்க் கிடந்து அல்லலுறும் மக் களின் விடுதலை இயக்கங்களில் தங்களுக்குள்ள அனுதா பத்தையும், நம்பிக்கையையும் பன்முறை தெரியப் படுத்திக்கொண் டிருக்கிருர்கள்.

இப்பொழுது நமது லட்சியம் - உண்மையில், உலகத் தின் லட்சியம் - யாதெனில், யுத்த காலத்திலேயே அரசியல், சமூக, பொருளாதாரத் துறைகளில் அடிப்படை யான மாறுதல்கள் ஏற்பட வேண்டும் என்பதுதான். இம் முறையில்தான் நாம், ஜப்பானியர்களுடைய படை யெடுப்பை எதிர்த்துப் போராடும்படி மக்களை ஒன்று திரட்டவும், தேசத்தின் சிதைவைத் தடுத்து முன் னேற்ற வழியில் செலுத்தவும் முடியும். உலகமே மா பெரும் குழப்பத்தில் இருக்கிறது; உலகத்தில் சமாதானத்

றையும் ஒழுங்கையும் நிலைநிறுத்துவது நமது கடமையாகும். இந்தியாவில் உள்ளவர்களால், இதைச் செய்ய முடியாது போயினும், இதையே லட்சியமாக வைத்துக்கொண்டு, இதை அடைவதற்கான வழியைக் காட்டத் தலைப்படுவோமாயின், நம்மால் செய்யமுடியாததைப் பிறரேனும் செய்துமுடிக்கலாம். நம்முடைய பொது லட்சியத்தை அடையும் வழியில் பல படுகுழிகளும், தடைகளும் இருக்கக்கூடும்; ஆனால், நாம் லட்சியத்தையே குறியாக வைத்துக்கொண்டு தளராமல், பிறழாமல் நேரான பாதையிற் செல்லும்போது எது நேர்ந்தால்தான் என்ன?

நம்மைப் போல் உலகிலுள்ள பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு - சிறப்பாக இந்தியாவிலுள்ள நமக்கு - என்ன கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டாலும், விடுதலை அடையும் வரையில் ஓய்வோ சமாதானமோ இருக்க முடியாது; ஆயுட்காலம் முழுதுமே நாம் கஷ்டத்தையும், கொடுமையையும் அனுபவிக்கவேண்டி வந்தாலும், அவற்றைப் பொறுமையோடு ஏற்று, நமக்கு மறுக்கப்பட்டுள்ள இன்பத்தையும், திருப்தியையும் நமது குழந்தைகளாவது பெற்றுச் சந்தோஷமாக வாழ்வதற்குரிய உலகத்தை உண்டாக்குவதில் நாம் தளராது வேலை செய்துவர வேண்டும். ‘அந்த நாளில் மட்டும்’ என்ற தமது புத்தகத்தில் பியர் வான் பாசன் கூறுவதுபோல்,

“தானாகத் தனித்து நடந்து களைப்புற்ற பின்னர், ஒரு மனிதன் நிச்சயமாய் ஒரு நாளில் தன் சகோதரனை நாடுவான். பிறருடைய இன்ப துன்பங்களையும், கஷ்டங்கள், நம்பிக்கைகளையும் நம்முடையனவாக நாம் என்றையத் தினத்தில் உணர்கின்றோமோ, அன்றுதான், இந்தப் பிரபஞ்சம் அவாவோடு விரும்பும் அன்பையும், நீதியையும் அடிப்படையாகக்கொண்ட உலக சமாதானம் - அமைதி மிக்க நள்ளிரவில் துலங்கும் நட்சத்திரங்களைப் போன்ற குற்றமற்ற மிகச் சிறந்த அதனுடைய அறிகுறி - நம்மை அணுகும்.”

நான் பிறந்தது முதல் 1919-ம் ஆண்டு வரையில், வாழ்க்கை கஷ்டமில்லாமலும், ஆனந்தமாகவும், அமைதியாகவும் இருந்தது. என் அமைதியான வாழ்க்கையில் முதன்முதலாகத் தலையிட்ட இடர்ப்பாடு ஜாலியன்வாலாத் தோட்டத்துப் படுகொலையாகும்; அதுகாறும் நான்

எண்ணாத சில விஷயங்களை எல்லாம் அது என்னை எண்ணுமாறு செய்தது. அதுதான் என் முதல் உள்ளக் கிளர்ச்சி; அதன்பின்னர், என் உள்ளத்தில் ஒன்றிலொன்று பெரிதான பல கிளர்ச்சிகள் உண்டாயின. 1920-ம் ஆண்டிலிருந்து, எங்களில் யாருக்கும் வாழ்க்கை சரளமாக நடைபெறவில்லை; எனினும், எங்கள் குடும்பம் சிதையாமல் இருந்தது; அது ஒரு பெரிய விஷயம். 1931-ல் தந்தை இறந்தது எங்கள் வாழ்க்கையில் ஈடுசெய்ய முடியாத ஒரு நஷ்டத்தை விளைத்ததோடல்லாமல், பல துரதிர்ஷ்ட சம்பவங்களுக்குத் தோற்றுவாயாகவுமிருந்தது. 1936-ல் கமலா இறந்தாள். அதன்பிறகு, இரண்டு ஆண்டுகள் கழித்து, என் அன்னையும் காலமானாள். பொருளாதாரத் துறையிலுங்கூட எங்கள் நிலை நன்றாய் இல்லை. இதன் பயனாய் எங்களில் யாருக்கும் வாழ்க்கையில் இன்பமோ அமைதியோ இல்லை; எங்களைப் பார்க்கிலும் எங்கள் குழந்தைகள் அதிகமான கஷ்டங்களை அனுபவித்திருக்கிறார்கள் என நான் எண்ணுகிறேன். அடிக்கடி ஏற்பட்ட பிரிவுகளும், ஏனைய சிறிய பெரிய விபத்துக்களும் எங்களுக்கு அடிக்கடி கடுஞ்சோதனையாக இருந்தன. அவை அநேகமாக என்னைத் தன்னம்பிக்கையை இழக்குமாறு செய்தன. முற்றும் தைரியத்தை இழக்காதவாறும், நம்பிக்கையைக் கைவிட்டுவிடாவாறும் உதவுவது நமது லட்சியத்தின் நேர்மையில் நாங்கள் கொண்ட நம்பிக்கையும், உறுதியுமே யாகும். அது, நமது லட்சிய மட்டுமன்று; உலகத்திலுள்ள எல்லா மனிதருக்கும் பொதுவானது. வாழ்க்கையில் ஏற்படும் துக்கங்களையும், பிரிவுகளையும் மனக்கசப்பின்றி, முணுமுணுக்காமல் சகித்துக்கொள்வதற்கு இந்த எண்ணமே எனக்கு உதவி வருகிறது; இதேமாதிரி, பலருக்கும் உதவுமென்பது ஒருதலை.

நானும், என் குடும்பமும், நம் நாட்டில் உள்ள பல மக்களும் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து அனுபவித்து வருகின்ற, நிலையற்ற வாழ்க்கையானது, பேரிடர் விளைக்கத்தக்க தொன்றாகும். நமது தேசத்தில் சமாதானமும், சுபிட்சமும் ஏற்படுவதையும், மீண்டும் யாவரும் ஒன்றுகூடிச் சந்தோஷமாய் வாழ்வதையும் நான் எதிர்பார்த்துக்கொண்டேயிருக்கிறேன். ஆனால், எதிர்காலம்

அவ்வளவு பிரகாசமானதாகத் தோற்ற மளிக்க வில்லை. ஏற்படக்கூடிய கஷ்டங்களுக்கு அதிகமாகவே கஷ்ட நஷ்டங்கள் எனக்கு ஏற்பட்டிருந்தபோதிலும், இதுகாறும் பல கஷ்டங்களை அனுபவித்து, இன்னும் பல சோதனைகளை எதிர்பார்த்தபோதிலும், என் ஆயுள் முழுதும் குழப்பத்தையே இணைபிரியாத் தோழனாக அடைந்திருந்தபோதிலும் பண்டு நிகழ்ந்த தனைத்தையும் நான் வருத்தமின்றியே நோக்குகிறேன்.

“வெட்கித் தலை குனியாதீர், சோதரரே!
வலிமையும், இறுமாப்பும் கொண்டவர் முன்னே
உங்கள் ஏழ்மையை உடுத்தி நிற்க வெட்கப்படாதீர்.
தாழ்மையே உங்கள் பொன் முடி;
ஆன்ம சுதந்திரமே உங்கள் சுதந்திரம்;
வறுமை யெனும் அகன்ற பெரு வெளியில்
கடவுளுக்குப் பொற் சிங்காதனம் அமையுங்கள்.
பெரியன வெல்லாம் பெருமை உடையன வாகா
இறுமாப் பெல்லாம் என்றும் நிலைத்திரா
இந்த உண்மையை உணருங்கள்
வெட்கப்படாதீர், சோதரரே!

— தாகூர்.

இரு சகோதரிகள், அவர்களைப் பற்றிய நினைவுகள் — இவையே "விதி என்ன செய்யும்?" என்னும் இப்புத்தகமாகப் பெருகிய கருத்து. புத்தகம் இத்துடன் முடிகிறது; ஆனால், கருத்தோ என்றும் நிற்கிறது. அதைத் தருகிறேன்; ஏனெனில், அது என் நெஞ்சைவிட் டகலாமல் நிற்கும் நினைவுக் கதிர்.

# இரண்டு சகோதரிகள்

பத்து வயதுள்ள ஒரு சிறுமி, தன் தாயின் படுக்கையருகில் நின்றுகொண்டு, புதிதாகப் பிறந்துள்ள தங்கையைக் கூர்ந்து நோக்கிக்கொண் டிருந்தாள் — ஒரு சிறிய தங்கை; எவ்வளவு சிறியவள்! எவ்வளவு அழகுள்ளவள்! தன் வயதிற் கதிகமான அறிவை யுடைய அச்சிறுமி, குழந்தை எங்கிருந்து எப்படி வந்தது என்பன போன்ற மதியற்ற கேள்விகளைக் கேட்க வில்லை. அதைப் பற்றி அவள் ஏதோ ஒரு தெளி வில்லாத கருத்தைக்கொண் டிருந்தாள். இயற்கை அன்னையின் கைத்திறனை வியந்து கொண்டும், தான் விளையாடத் தனக்கும் அதைப் போன்ற இனிமையான ஒரு சிறிய குழந்தை ஒரு நாட் கிடைக்கக் கூடுமோ என்று எண்ணிக்கொண்டும் அவள் அங்கே நின்றாள். அச் சிசுவின்மீது அவள் மனம் சென்றது; ஒரு சகோதரியினது அன்போடு மட்டு மல்லாது, அதனினும் மிகுந்த உள்ளக் குழைவோடும், பாதுகாப்பு உணர்ச்சியோடும் இருந்தது அது.

ஆண்டுகள் சென்றன. ஒரு பெரிய மனிதர் வீட்டில் மங்கள விழா ஒன்று நடைபெற்றது. எங்கும் கொண்டாட்டமாய்க் காணப்பட்டது. பழமையான அவ்வீடு நன்கு அலங்கரிக்கப்பெற் றிருந்தது; சங்கீத நாதமும், சிரிப்பின் ஒலியும் அங்கு ஒலித்துக்கொண் டிருந்தன. அக்குடும்பத்தின் கடைசி மகளுக்கு அன்று திருமணம். மங்கைப் பருவத்தினளான அவள், வெளிறின சிவப்புப் புடவையை அணிந்து, உதய சூரியனினும் மிக்க இனிய தோற்றத்துடன் ஓர் அறையில் வீற்றிருந்தாள்.

அந்நாளின் சிறப்பைப் பற்றி அவளுக்கு எதுவும் தெரியாது. இளமையும், பேரழகும் வாய்ந்த அவளது மூத்த சகோதரி, இளமைப் பருவத்திலேயே விதவையாய்விட்டதால், ஆபரணங்கள் ஏதுமின்றி, மாசற்ற ஒரு வெள்ளைப் புடவையை மட்டும் அணிந்தவளாய் அவள் பக்கத்தில் அமர்ந்திருந்தாள். அவளுக்கு விவாகமான காலத்தில் அவளும் மங்கைப் பருவத்தினளாகவே இருந்தாள்; மணமான ஓராண்டிற்குள் அவள், தான் அறியாத தன் கணவனை இழந்தாள்! ஆனால், இன்று அவள் துக்கப் படுவதோ அல்லது தன் நிலையை நினைந்து இரங்குவதோ இல்லை. தானே வளர்த்த தன் சிறிய தங்கைக்குத் திருமணம் நடைபெறும் நாள், அவளுக்கு மிக்க மகிழ்ச்சியை யளிக்கும் நாளாக இருந்தது. அவளுடைய பற்றுதல்க ளெல்லாம் இந்தத் தங்கையின்மீதுதான் இருந்தன. ஏனெனில், அவள் தனக்கென ஒன்றையும் ஆசைப்படவில்லை — நேர்த்தியான உடைகள், அழகிய ஆபரணங்கள், ஏனைய போகப் பொருள்கள் ஒன்றிலும் அவளுக்கு ஆசையில்லை. தன் சிறிய தங்கைக்கு அணுவளவேனும் துன்பமும், துக்கமும் நேரக்கூடாது என்றே அவள் ஒவ்வொரு நாளும்-சிறப்பாகத் திருமணத் தன்றும்-பிரார்த்தனை செய்தாள். சோர்வுடன்கூடிய தனது சிவந்த கண்களால் அச்சிறிய மணப்பெண்ணை அன்புடன் பார்த்துக்கொண்டு, அவள் பக்கத்தில் இருந்தபோது, தன் முன்னுள்ள அவ்வழகிய உருவத்தைக் கண்டு அவள் மனம் பெருமையால் பூரித்தது.

ஆண்டுகள் பல ஆயின. சிறிய தங்கை அழகிய நங்கையானாள்; பல குழந்தைகளுக்குத் தாயானாள்; இன்பமும், செல்வமும் நிறைந்த மனைக்குத் தலைவியானாள். இவ்வாறு அமைதியாயும், திருப்தியாயும் பல ஆண்டுகள் கழிந்தன.

பின்னர், அந்தப் பெரிய வீட்டில் பல மாறுதல்கள் உண்டாயின. வீட்டின் தலைவர் மறைந்தார்; வீடு பொலிவு இழந்தது; தலைவி தனிப்பட்டுத் துக்கத்தில் ஆழ்ந்தாள்; இன்பமும், உவகையும் நிறைந்த வீட்டில், மௌனமும், விசனமும் குடிகொண்டன. அவ்வீட்டின் உயிர்நிலையாய் இருந்த தலைவனோடு ஒளியும் மகிழ்ச்சியும் அகன்றன.

தோட்டத்தின் ஒரு மூலையில் இரண்டு கிழவிகள் உட்கார்ந்துகொண் டிருந்தார்கள் — முதுமை, அவர்களுடைய இளமை யழகை அதிகரிக்கத்தான்செய்து இருந்தது. அவர்களில் மூத்தவள் அப்போதும் நல்ல வலிமை யுள்ளவளாகவே தோன்றினள். அவளுக்கு ஒரு மயிர்கூட நரைக்க வில்லை. விசனத் தோற்றத்தை யுடைய அவளது முகத்தில் வருணிக்க முடியாத, இவ்வுலகிற்கு அப்பாற்பட்ட ஒரு தெய்விகப் பொலிவு குடிகொண்டிருந்தது. இளையவள், அப்போதும் உருவத்தில் சிறியவளாயும், மெலிந்தவளாயும், மதுரமானவளாயும் இருந்தாள். பனி யென வெளுத்த அவளது கூந்தல், துக்கம் கஷ்டம் ஆகியவற்றின் அறிகுறியைக் காட்டும் அவளது முகத்துக்கு ஒளி யளித்தது. தூரத்தி லிருந்து பேரப்பிள்ளைகளின் ஆரவாரத்தை இளங்காற்று ஏந்தி வர, அதனைக் கேட்டுச் சகோதரிகள் இருவரும் அடிக்கடி புன்முறுவல் பூத்தார்கள்.

சாந்தமும், இனிமையும் நிறைந்த தன் தங்கையின் முகத்தைப் பார்த்தவண்ணம் அவள் படுக்கை யருகில் கற்சிலைபோல் நின்றுகொண் டிருந்தாள் தமக்கை. உயிரோ டிருந்தபோது இருந்ததைப் போன்று, மரணத்தின் பின்னரும் அவளது தங்கை அழகுடன் காணப்பட்டாள். வாழ்க்கை லட்சியத்தின் வேலை முடிந்துவிட்ட பின்னரும், பொறுப்புக்களை ஏற்று நடத்துமாறு மூத்தவளை விட்டுவிட்டு, அவள் எப்படி மரண மடையக் கூடும்? அது முடியக்கூடிய தில்லை. பயந்த சுபாவ முள்ள கோழையான அவள், தெரியாத ஓர் இடத்திற்கு நீண்டதொரு பிரயாணத்தை எப்படித் தனிமையாக மேற்கொண்டாள்? அவள் தமக்கை அவளைத் தனியாக விட முடியாது. அவளும் பின்தொடர்ந்து, தங்கையின் கையைப் பற்றித் தங்கைக்குத் தைரிய மளித்து, அவளுடன் இருக்க வேண்டும்...

தங்கை எடுத்துச் செல்லப்பட்டாள். உடைந்து இரத்தம் வடிந்துகொண் டிருந்த மனத்தைத் தவிரத் தமக்கைக்கு இவ்வுலகில் வேறொன்று மில்லை. அவள், மனம் கலங்கி, ஆயாசத்துடன் ஒரு மூலையில் வாய்பேசாமல் படுத்துவிட்டாள். கண்கள் மூடிவிட்டன. தன் மனக் கண்ணால் பல சித்திரங்களைக் கண்டாள் - தாயின் பக்கத்

தில் செயலற்றுக்கிடந்த குழந்தையான தங்கை - அழகும், குழந்தைத் தன்மையும் வாய்ந்த யௌவன மணப்பெண் - தன் குழந்தைகளுடன்கூடிய அழகிய தாய் - வயது முதிர்ந்த, மெல்லிய, பலவீனமான தங்கை - இறுதியாய், தன் அருமைத் தங்கையை ஒத்தும், ஒவ்வாமலும், அசைவற்று, உயிரற்று வெளிறிக்கிடந்த ஓர் உருவம். இல்லை, அவள் இறக்கவில்லை; இறந்துவிட்டாளெனக் கூறுவது தவறு; ஏனெனில், ஓர் ஆற்றைக் கடப்பதற்காகத் துணை நாடி, அதோ தன் அக்காளை அவள் சைகைசெய்து அழைக்கின்றாள். அக்காள் முகத்தில் புன்னகை அரும்பிற்று; மறு உலகப் பிரயாணத்தில் தன் தங்கைக்கு உதவிசெய்யும் பொருட்டு, அவள் கரங்களைப் பற்றத் தன் கரங்களை நீட்டியபோது அரும்பிய அப்புன்முறுவல், நிகரற்ற உள நெகிழ்ச்சியோடு ஒளிர்ந்தது.

தன் முகத்தில் அந்தயில் அமைதி தோன்ற - அதாவது, தன் தங்கையைப் பிரிந்த சில மணி நேரத்தில், இவ்வுலகத்தைக் கடந்து, மறு உலகத்திற்கும் அவளைப் பின்தொடர்ந்து சென்று, அவளுடன் சேர்ந்துகொண்டதால் பெற்ற இன்பமும், அமைதியும் தோன்ற - அவள் கிடந்ததை யாவரும் கண்டனர். தன் தங்கைக்கு, அவள், தன் ஆயுள் முழுதும் சுயநல மற்றுச் சேவை புரிந்து வந்தாள். அவர்களைப் பிரித்துவிடக் கூடிய வல்லமை கூற்றுவனுக்கும் இல்லை.

# நினைவுகள்

"நினைவுகள் டிசம்பர் மாதத்து ரோஜா மலர்களை ஒத்தவை" என்று ஒரு கவிஞர் கூறினார். பிரிவுத் துயருடைய ஓர் ஆன்மாவுக்கு, அழகிய மலர்களின் நறுமணத்தைக் கொண்டுவரும் நினைவுகளை அப்படிக் கூறலாம்; ஆனால், எல்லா நினைவுகளும் அப்படிப்பட்டன அல்ல. சில சோர்விலும், சில வருத்தத்திலும், மற்றவைகள் காலத்தாலும், சூழ்நிலைகளாலுங்கூட மாற்றவோ அன்றிக் குறைக்கவோ முடியாத வேதனையிலும் தோய்ந்திருக்கின்றன. சந்தோஷமும், ஒளியும் நிறைந்த இன்ப நாட்களைப் பற்றிய நினைவுகளும், கரிய மேகங்கள் சூரியனை மறைப்பனபோல் துன்பங்களால் மறைக்கப்பட்டு, வாழ்க்கை சூன்யமாகவும், பயனற்றதாகவும் ஆன துன்ப நாட்களைப் பற்றிய நினைவுகளும் ஒருவருக்கு எழுகின்றன. ஆனால், இந்நினைவுகள் எல்லாம் மறைந்துவிடுகின்றன; அவை மறைந்தே தீரவேண்டும். சில, மிகச் சிலவான அறிகுறிகளை மட்டும் ஏற்படுத்திவிட்டு மறைந்துவிடுகின்றன; மற்றவைகளோ, மறக்க முடியாவாறு செய்துவிட்டு மறைகின்றன.

எனவே, என் பிறந்த வீட்டிற்கு நான் செல்லுந்தோறும், மீண்டும் ஒருவரால் அனுபவிக்கமுடியாத இறந்த காலமான குழந்தைப் பருவத்தில், நான் அடைந்த இன்பங்களைப் பற்றிய நினைவுகளும், பிற்காலத்தில் நான் அடைந்த துன்பங்களைப் பற்றிய நினைவுகளும் என்னைப் பற்றிக்கொள்கின்றன. இந்நினைவுகள் மனத்தைத் துன்புறுத்தி, அநேகமாக, அதை முறிந்துவிடும் நிலைக்குக் கொண்டுவந்துவிடுகின்றன; ஏனெனில், பழமையான எங்கள் இல்லம் முன்னிருந்ததுபோல் இல்லாமலும், நான் அங்கு செல்லும் ஒவ்வொரு முறையும் புதிய மாறுதல்களை அடைந்துகொண்டும் இருக்கின்றது.

மாறிக்கொண்டே இருக்கும் இவ்வுலகத்தில், என்றுமே மாறாது இருக்கின்ற ஒரே இடமான, எனக்குப் பரிச்சயமுள்ள எங்களுடைய பழைய நந்தவனத்தில் நான் அமர்ந்திருந்தேன். அரண்மனை போன்ற எனது வீடு, என் முன்னே இருந்தது; அதனை என் கண்கள் கண்டும்

காண வில்லை; மனம் நெடுந் தூரத்தி லுள்ளவற்றை எண்ணி, அதில் ஆழ்ந் திருந்தது; படிக்க எண்ணி நான் எடுத்துச் சென்ற புத்தகம், கவனிக்கப்படாமலே என் மடியில் கிடந்தது. என் காலடியிலும், என்னைச் சுற்றியும் அழகிய வண்ணாத்திப் பூச்சிகள் பறந்துகொண் டிருந்தன. பசும் புல்லி லிருந்து வந்த புது மணம் இனிமையாய் இருந்தது; இளந்தென்றலுடன் கலந்துவந்தது ரோஜா மலர்களின் வாசனை. நான் பெருமூச்சுடன் சாய்ந்தேன். என்னைச் சுற்றி யுள்ள எல்லாம் அழகுடையனவாயும், அமைதியுடையனவாயும் தோன்றியதெனினும், அறிவதற் கரிய ஏதோ ஒன்றை நினைந்து என் நெஞ்சம் புண்ணாகிக் கொண்டிருந்தது. நான் இழந்துவிட்ட - மறுபடியும் காண முடியாத - ஒன்றை நினைந்து அது வருந்திற்று. இங்ஙனம் என் மனம் சம்பந்தா சம்பந்த மின்றிப் பலவாறு செல்ல, நான் உறங்கிவிட்டேன்; இப்பொழுது நினைவில் இருக்கும் சென்றுபோன நாட்களைப் பற்றிக் கனவுகள் கண்டேன்.

பணமும், நாகரிகமும் அளிக்கக்கூடிய இன்பப் பொருள்கள் எல்லாம் நிறைந்ததும், அங்கு மிங்குமாக உலாவித் திரியும் ஏராளமான மக்களைக்கொண்டதுமான பழமையான வீட்டை நான் கண்டேன். அதன் தலைவர், கம்பீரமும், பெருந் திருவும் பெற்றவர்; மகிழ்ச்சியும், அன்பும் மிக்கவராய்த் தம் குடும்பத்தினர் சூழ அவர் அவ்வீட்டில் எங்கும் நிறைந்து விளங்கினர். தம் அன்புக்குப் பாத்திரமானவர்களுக்கு எத்தகைய இடையூறும் நேராதவண்ணம் காப்பாற்றக்கூடிய ஒரு வலிய கற்கோட்டையாக அவர் இருந்தார். அவ்வீட்டின் தலைவி வருணிக்க முடியாப் பேரழகினள்; மெல்லிய, கருணை நிரம்பிய சிற்றுருவ மங்கைநல்லாள். மென்மையான அவளுக்கு அரிதெனப் பிறர் எண்ணக்கூடிய ஆற்றலோடு அவள் அங்கு மிங்குந் திரிந்து தன் குடும்பத்தைப் பாதுகாத்துவந்தாள். எங்கும் சுறுசுறுப்பும் பரபரப்பும், இன்பமும் திருப்தியும் நிறைந்து காணப்பெற்றன; அத்தகைய வாழ்க்கை நிலையில் மூன்று குழந்தைகள் வளர்ந்தன.

சில ஆண்டுகளுக்குப் பின்னர், அதே வீட்டில், ஆடம்பரம், செல்வச் செழிப்பு யாவும் மறைந்தன. சில

ஆண்டுகளுக்கு முன்வரை இருந்த செல்வச் சிறப்புக்களின் இடத்தில் எளிமை குடிகொண்டது. முன், வீட்டில் வசித்தவர்கள் தான் அப்போதும் வசித்தார்கள். குடும்பத் தலைவரின் உள்ளம் நிறைந்த சிரிப்பு அப்போதும் எங்கும் ஒலித்துக்கொண் டிருந்தது; மனம் குன்றியவர்களுக்கு அது உற்சாக மளித்துவந்தது. அவ்வீட்டில் ஏற்பட்ட மாறுதல், விபரீத சம்பவங்களால் நிகழ்ந்த தன்று; அரசியல் கொள்கைகளாலும், லட்சிய மாற்றத்தாலும் நிகழ்ந்ததே.

மேலும் சில ஆண்டுகள் சென்றன. பழைய வீட்டின் பக்கத்தில் ஒரு புதிய வீடு கட்டப்பெற்றது. அன்புமிக்க தந்தை, தம் அருமைத் தனயனுக்காகக் கட்டிய அவ்வீடு, பிறர் கனவிலேயே காணத்தக்க அத்துணை உயரியது. ஆனல், இந்தப் புதிய வீடு இதில் வாழ்பவர்களுக்குக் குறைந்த இன்பத்தையும் நிறைந்த துன்பத்தையுமே அளித்தது.

விசாலமான அறைகளில் ஒன்றில், நரைத்த தலையை யுடைய, வயது முதிர்ந்த ஒருவர், தலைகுனிந்து ஆழ்ந்து சிந்தித்தவண்ணம் அமர்ந்திருந்தார். கொடிய நோயால் பீடிக்கப்பட் டிருந்த அவர், சில அரசியல் கொள்கைகளுக் காகத் தம் மகன் சிறைப்பட விருப்பதை அறிந்து, மகனைச் சிறைப்பிடித்துச் செல்லு முன், நூற்றுக்கணக்கான மைல்கள் பிரயாணம் செய்து அங்கு வந்திருந்தார். அதே கொள்கைகளுக்காக அந்தக் கிழவரும் சிறைகளில் வாசம் செய்தவர் தான்; மீண்டும் அவற்றிற்காகச் சிறை செல்லத் தயாராகவு மிருந்தார். மகனைச் சிறைச்சாலைக்கு அழைத்துச் செல்வதற்கு முன் சரியான நேரத்தில் வந்து சேர்ந்து, தம் மகனைக் கட்டித்தழுவிக்கொண்டார். அவர் அருகில், அவருடைய வாழ்க்கையின் நன்மை தீமைகளில் தீரத்தோடு பங்கு எடுத்துக்கொண்ட, உருவிற் சிறிய அவரது இல்லக்கிழத்தியும் வீற்றிருந்தாள். அவள், முன்னிலும் அதிகமாய் மெலிந்து காணப்பட்டாள். எனினும், அச்சமும் மெலிவுங் கொண்ட அவள் தான், அஞ்சா நெஞ்சமும், வலிமையும் படைத்த தன் கணவனுக்கு, ஒவ்வொரு தடவையும் புதுப் புதுக் கஷ்டத்தைத் தாங்கிக்கொள்ளத் தைரிய மளித்துவந்தாள் என்பது வியப்புக் குரிய தாகும்.

அவ்வறையின் ஒரு மூலையில், அவர்களது மூத்த மகள் உட்கார்ந்திருந்தாள். அவளுக்குக் கலியாணமாகிக் குழந்தைக ளிருந்தன. தன் பெற்றோரின் துயரத்தை அவள் நன்கறிந் திருந்தாள். மௌனமாக அவர்கள் அனுபவிக்குந் துன்பத்தைப் பார்க்கச் சகியாதவளாயும், அதை நீக்குவதற்கு உதவிசெய்ய முடியாதவளாயும், கவலையால் உள்ளம் வெடித்துவிடக்கூடிய நிலையில், ஆர்வத்தோடு அவர்கள் முகங்களையே அவள் பார்த்துக்கொண் டிருந்தாள். அறையின் பிறிதொரு பகுதியில், மற்றவர்களைப் பாராது, சுவர்மீது சாய்ந்தவண்ணம் இளைய மகள் நின்றுகொண் டிருந்தாள். அவள் மனத்திலும் துக்கம் மேலிட்டது. கண்களில் நீர் நிறைந்தது; புரட்சிகரமான எண்ணங்களால் மனம் கொதித்துக்கொண் டிருந்தது. மற்ற எல்லோரும், ஊழ்வினைப்படி தங்களுக்கு என்னென்ன நடக்கவேண்டுமோ அவை நடக்கட்டும் என்று இருப்பவர்கள்போல் தோன்றினார்கள்; ஆனால், அவள் அவ்வாறு காணப்பட வில்லை. அவர்களுடைய லட்சியத்தைப் போன்ற ஒரு பெரிய லட்சியத்திற்கு அவ்வளவு துன்பங்களையும் அனுபவிக்க வேண்டியது அவசியந்தான் என்று அவள் ஒரு சமயம் எண்ணினாள்; தன் பெற்றோர்கள் கவலையாலும், பிரிவுத் துயராலும் வருந்துவதைக் கண்டு, மற்ற சமயங்களில், அவள் மனத்தில் பல சந்தேகங்களும், அவநம்பிக்கைகளும் எழுந்தன. இவ்வுலகத்தையே தமக்குச் சொந்தமாக்கிக்கொண்டு, கவலைகளும், துன்பங்களும் இல்லாத சௌகரியமான வாழ்க்கையை அவர்கள் வாழ்ந்திருக்க முடியும். எனினும், கடமை என்னும் கஷ்டமான பாதையில் நடக்க அவர்கள் துணிந்தார்கள்; மனித சமூகத்திற்கும், தங்கள் நாட்டிற்கும் தொண்டு செய்வதற்காகத் தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம்செய்தார்கள். ஒன்றோடொன்று முரண்பட்ட பல எண்ணங்கள் தன்னை வருத்த, பெற்றோர்களின் துன்பத்தைக் குறைக்கத் தன்னால் ஒன்றும் செய்ய இயலாத நிலையில், அவர்களைப் பார்க்கவுந் துணியாதவளாய், அவள் நின்றுகொண் டிருந்தாள். அருமை மகன் இல்லாமல் வீட்டில் விபரீதமான மௌனம் குடிகொண் டிருந்தது. எனினும், தன் சுவர்களின் நிழலில் வளர்ந்த அம்மகனை நினைந்து பெரிதும் பெருமைகொண்டதுபோல் அப்பழைய வீடு முன்னி

லும் நிமிர்ந்து நின்றது. சகல சௌகரியங்களையும் வெறுத்தவர்களாய்த் தாங்கள் அரண்மனை போன்ற வீட்டில் இருக்க, தங்கள் மகன் சில மைல்களுக்கு அப்பாலுள்ள சிறையின் ஒரு குளிர்ந்த அறையில் அடைபட்டிருப்பதை நினைந்து, பெற்றோர் இருவரும் ஏங்கியவர்களாய்ப் பொழுது போவதும் தெரியாமல் உட்கார்ந்திருந்தார்கள்.

அதே மனிதரைப் பற்றி ஒவ்வொருவரும் சிந்தனையில் ஆழ்ந்தவண்ணம் சிறிது நேரம் இருந்தார்கள். சிறிது நேரந்தான் - பின்னர் ஒரு பெருமூச்சுக்குப் பின் உறுதியான தீர்மானம் கொண்ட முகத்தோடு தந்தை எழுந்துவிட்டார். இனி சும்மா இருக்கக்கூடாது. மகனைச் செய்யவிடாது தடுத்த வேலைகளை அவர் செய்யவேண்டும்; எனவே, பரந்த தம் புஜங்களை உயர்த்தியவராய் அவர் நடந்தார். அச்சிறிய உருவத்தினள், கீர்த்தி மிக்க மகனின் தாய் - அவளும் புண்பட்ட மனத்தோடும், விரைப் புண்முறுவலோடும், எப்பொழுதும்போல் தன் வேலைகளைக் கவனிக்க எழுந்தாள்.

ஆண்டுகள் சென்றன. பல மைல்கள் வரை, பல்லாயிரக்கணக்கான மக்கள் திரள்திரளாகச் சாலையில் வரிசையாக நின்றுகொண்டிருந்தார்கள். தங்களுக்குச் சொந்தமான ஏதோ ஒன்றை இழந்துவிட்டதுபோல் வருந்தாத நெஞ்சமோ, கண்ணீருகுக்காத கண்ணோ இல்லை. தலைவர் அவர்களைவிட்டுப் பிரிந்துவிட்டார். காலஞ்சென்ற அப்பெரியாருக்கு வணக்கம் செலுத்துவதற்காக அவர்கள் அங்கே கூடியிருந்தார்கள். இயற்கையாகவே போர்வீரரான அவர், தம் உழைப்பின் பலனைக் காண்பதற்கு, மேலும் சில வருடங்களாவது உயிர்வாழ எண்ணி, இரவு பகலாகப் பல நாட்கள் வரை கூற்றுவனோடும் போராடினார்; ஆனால், என்றும்போல் இறுதி வெற்றியைக் கூற்றுவனே பெற்றான்; அவர் மறைந்தார். சந்தோஷம் நிறைந்திருந்த அவ்வீட்டின் ஓர் அறையில், பிரிவால் பேரதிர்ச்சி பெற்று, கண்ணீர்விட்டு அழுவதற்கும் முடியாதவளாய், மீளாப் பிரயாணத்தை மேற்கொண்டவரின் விதவை உட்கார்ந்திருந்தாள். தம் தந்தையிடத்து ஆழ்ந்த அன்புகொண்டிருந்த மகன், கண்களில் நீர் நிரம்பியவராய், தம் அன்னையைத் தழுவிக்கொண்டவாறு அவள் அருகில் இருந்தார். தம் தாயை எப்படித் தேற்றுவ

தென்று அவருக்குத் தெரியவில்லை. வலிமை மிக்க இளை ஞராய மகனது கரத்தைத் தன் மெல்லிய கரத்தால் பற்றி அவள்தான் அவரைத் தேற்றினள்.

காலம் கடந்து சென்றது. பழைய வீடு பல மாறுதல் களைப் பார்த்துவிட்டது; இன்னும் பலவற்றைப் பார்க்க இருக்கிறது. பாதையில் மோட்டார்கள் நின்றன. வெளி முற்றம் நிறையப் போலிசார் நின்றுகொண்டிருந்தார்கள். இரு புதல்விகளையும் கைதுசெய்வதற்காகத்தான் இந்த ஏற்பாடுகளெல்லாம். பல ஆண்டுகளாய், அவர்கள் வீணே காலம் கழிக்காமல், தங்கள் தந்தையின் அடிச் சுவட்டைப் பின்பற்றி வேலைசெய்து, குடும்பத்தின் பெரு மையை நிலைநிறுத்தினர்கள். இதற்காகவே, தங்கள் தந்தையைப்போலவும், சகோதரரைப்போலவும் அவர்க ளும் சிறை செல்லவேண்டியதாயிற்று. அதிகாரிகள் அரசாங்கத்தின் கட்டளையை மிகவும் மரியாதையோடு காண்பித்தார்கள்; பெண்களும் புன்சிரிப்போடு அதை ஏற்றுக்கொண்டார்கள். சில பொருள்களை உடன் கொண்டு செல்ல எண்ணி உள்ளே சென்றார்கள். அந்தச் சமயத்தில் வலிமை குன்றிய தனது கால்களால் எவ்வளவு விரைவில் நடந்து வரமுடியுமோ அவ்வளவு விரைவில் நடந்துவந்தாள் அன்னை. "இவை யெல்லாம் எதற்காக என் இத்தனை கார்களும் மக்களும்?" என்று கேட்டாள். பெரிய மகள் அவளை மெதுவாக அணைத்துக்கொண்டு செய்தியைத் தெரிவித்தாள். ஒரு நிமிஷம் அவளுக்குப் பலவீனம் தோன்றிற்று; கண்களில் நீர் ததும்பிற்று. தன் புதல்விகளைத் தழுவிக்கொண்டு, "உங்களைப் பிரிந்து நான் எவ்வண்ணம் தனித்திருப்பேன்?" என்று மெது வாகச் சொன்னாள். ஆனால், ஒரு நிமிஷத்தில் சிறிய உருவ முள்ள அவள் நிமிர்ந்து, வேடுவரை எதிர்க்கும் பெண் சிங்கத்தின் தைரியத்தைக்கொண்டவளாய், இப்புதிய சோதனையையும் ஏற்றுக்கொண்டாள். "உங்களால் நான் பெருமை யடைகிறேன்; மிகமிகப் பெருமை கொள் கிறேன். நான் அவ்வளவு முதுமை யடைந்துவிட வில்லை; நானும் உங்களைப் பின்பற்றுகிறேன்" என்று கண்களைச் சிமிட்டிக்கொண்டு கூறினள். மீண்டும் தன் புதல்வி களைத் தழுவிக்கொண்டு, தன் கரங்களால் அவர்களை ஆசிர்வதித்தாள். ஆனால், மெல்லிய அவ்வுடம்பு, அளவு

கடந்த துக்கங்களையும், துன்பங்களையும் அனுபவித்த தாகலின், மேலும் அதிகமானவற்றைத் தாங்க முடியவில்லை. கரங்களை நீட்டியபடியே அவள் மூர்ச்சித்து வீழ்ந்தாள். செல்லவேண்டிய இடத்திற்குப் பெண்கள் காரில் அழைத்துச்செல்லப்பட்டார்கள். வாழ்க்கை வழக்கம்போல் நடந்துகொண்டிருந்தது.

பயங்கரமான இருண்ட சுவர்களோடுகூடிய சிறையின் ஓர் அறை, அதில் இரண்டு சகோதரிகள் உட்கார்ந்திருந்தார்கள்; தங்கட்குப் பொதுவான ஒரு கொள்கையால் இவ்விருவரும் முன்னிலும் அதிகமாக ஒன்றுபட்டிருக்கிறார்கள். ஒருவர் மேல் ஒருவர் சாய்ந்தவண்ணம், சிறை மதில்களுக்கு அப்பால்தெரிந்த, ஒளிமிக்க சூரியாஸ்தமனக் காட்சியையும், அழகிய செவ்வானத்தையும் அவ்வறையின் இருப்புக்கம்பிகளின் வழியாகப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்; சிந்தனைகளில் ஆழ்ந்தார்கள். ஒரு சகோதரி, தன் வீட்டையும், கணவனையும், சிறு குழந்தைகளையும் நினைந்து ஏங்கினாள்; மற்றொரு சகோதரி, என்றும் ஊக்கத்தையும், நம்பிக்கையையும் அளித்துவந்த, தன் தந்தையின் சிரிப்பைக் கேட்கவும், பெரிய சந்தோஷமற்ற வீட்டில் துணையின்றி விடப்பட்ட தன் அருமைத் தாயால் தழுவிக் கொள்ளப்படுவதை விரும்பியும் ஏங்கினாள்.

சங்கிலியின் ஓசையும், கதவுகள் திறக்கப்படும் சப்தமும் கேட்டன. இவையெல்லாம் எதற்காக என்று அச்சகோதரிகள் அதிசயித்தார்கள். கையில் ஒரு தந்தியோடு சிறைக் காவற்காரி அறைக்குள் நுழைந்தாள். அச்சத்தோடு அதை அவர்கள் வாங்கினார்கள்; மறு விநாடியில் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகை புரிந்தார்கள். திடமிகுந்த அவர்கள் தாய், சொன்னபடியே செய்துவிட்டாள். நெடுந் தூரத்தில் உள்ள ஒரு சிறைச்சாலையில் அவளும் அடைக்கப்பட்டு இருக்கிறாள். அவளுடைய தைரியந்தான் என்னே? அறுபத்தைந்து வயதுடைய அக்கிழவியைச் சிறைப்படுத்தியவர்களின் ஈரமில்லா நெஞ்சு தான் என்னே!

மேலும் சில ஆண்டுகள் சென்றன. அளவிறந்த இன்பங்களையும், துன்பங்களையும் கண்ட அவ்வீட்டில், மறுபடியும் பெருங் கூட்டம் கூடியிருந்தது. திடீரென்று ஒரு வார்த்தைகூடச் சொல்லாமல், தாய் ஒரு நாள் மாலை

இறந்துவிட்டாள். அவள் பிறருக்காக வாழ்ந்தாள்; பிறருக்குக் கஷ்டம் கொடுக்காது இறந்துபோனுள். அழகோடு, உயிரோ டிருப்பது போன்ற தோற்றத்தையும் உடையவளாய், அரசிபோல் மலர்களால் அலங்கரிக்கப் பெற்று, அதோ அவள் தன் படுக்கையில் கிடக்கிருள் - இறுதி வரையில் அவள் ஓர் அரசியாகவே வாழ்ந்தாள்.

கவலிப்பா ரற்று இருந்த ஒரு நந்தவனத் திடையே, சந்தோஷமும், சிரிப்பும் நிங்கிய நிலையி லிருந்த ஒரு தனி விட்டை நான் கண்டேன். உள்ளே, ஓர் அறையில் தன் மேஜையில் ஓயாது வேலைசெய்துகொண்டு மகன் உட்கார்ந் திருந்தார். சுலபமான வாழ்க்கையை அவர் பெறவில்லை; எதிர்காலத்திலும் அவருக்கு அதிக ஓய்வோ, செளகரியங் களோ இருக்கா. ஏனெனில், அவர் விரிவில்லாத நேரிய பாதையையே தேர்ந்தெடுத்திருக்கின்ருர். அவ்வழியி லிருந்து இனி அவரால் திரும்ப முடியாது. களைத்துப் போன தம் கண்களால் அவர் நிமிர்ந்து பார்க்குங்கால், அடிக்கடி, அவற்றில் சொல்லற்கரிய விசனம் தோன்று வதைக் காணலாம். ஏனெனில், பிரிவுத் துயர் அவரை அவ்வாறு செய்துவிட்டது. ஆனல், பிறர் முன்னிலையில் அவர் தமது பிரிவுத் துயரைக் காட்டாது, புன்முறுவலா லும், எக்காலத்தும் அழியாத வசீகரத் தோற்றத்தாலும் எல்லோருடைய மனத்தையும் தம் வசப்படுத்திக் கொள்வார்.

என் இதயத்தைப் பெரும் சுமை வருத்தத் தாக்கத்தில் நான் அமைதியின்றிப் புரண்டுகொண் டிருந்தேன். என் அன்புக் குரிய இவ்விட்டில், கடந்த ஆண்டுகளில், பல மாறுதல்கள் நிகழ்ந்தன. ஆனல், நான் தேடிவந்த என் அண்ணு, அப்போதும் சிறைக்கு வெளியி லிருப்பதைக் காண உள்ளம் குளிர்ந்தது - அவர் இல்லாத விடு, எனக்கு விடாகத் தோன்றுவ தில்லை. மேல்மாடியில் உள்ள அவர் அறைக்கு ஓடிப்போய். அவரைக் கண்டு பேசும் அவாவோடு நான் கண்விழித்தேன். என் புத்தகத்தை எடுத்துக்கொண்டு, விட்டை நோக்கி விரைந்து ஓடினேன். விட்டிற்குள் நுழைந்ததும், 'டெலிபோன்' மணி அடித்தது; டெலிபோனில் நான் முன் அறியாத யாரோ ஒருவர், "உன் அண்ணனது வழக்கின் விசாரணை நாளை நடைபெறும் என்று உனக்கு அறிவிக்கப்படுகிறது."

என்று சொன்னார். "நாளை விசாரணையா? எந்த வழக்கு?"-எனக்கு ஒன்றும் புரியவில்லை. தூக்கக் கலக்கத்திலிருந்த என் மூளையால், செய்தியைச் சரியாகக் கிரகிக்க முடியவில்லை. பிறகு பளிச்சென்று உண்மை புலனாயிற்று. எனக்காகக் காத்துக்கொண்டு அண்ணா மேல்மாடியில் இல்லை; இரண்டு நாட்களுக்கு முன்புதான் அவர் கைதுசெய்யப்பட்டார். நான் கனவு கண்டுகொண்டிருந்திருக்கிறேன்...

சோர்வுற்று என் அறைக்குச் சென்றேன். அண்ணாவின் துணைக்குப் பதிலாகச் சென்ற நாட்களைப் பற்றிய துன்ப நினைவுகளும், இன்ப நினைவுகளுமே எனக்குத் துணையா யிருந்தன.

## இந்நூலைப்பற்றிய ஜவாஹரின் அபிப்பிராயம் :

"நெடு நாட்களாக எதிர்பார்த்திருந்த உனது புத்தகத்தை ஒருமுறை ஆவலோடு படித்தேன்; அநேக பகுதிகளைத் திரும்பவும் படித்தேன். சில பாகங்களை இன்னும் அநேக தடவைகள் படித்திருப்பேன்; ஆனால், அச்சமயம் மற்றவர்களும் அதைப் படிக்க விரும்பியதால், நான் அதைவிட்டுப் பிரிய நேர்ந்தது. உன்னிடம் பட்சபாதமுள்ள எனக்கு, உணர்ச்சிகளையும், அபிப்பிராயங்களையும் கொண்டு நோக்காமல், உனது புத்தகத்திற்கு விமரிசனம் கொடுப்பது எளிதல்ல. நீ கூறும் சம்பவங்கள் நம்முடைய வாழ்க்கையோடு நெருங்கி இணைக்கப்பட்டிருப்பதால், அவைகளை எட்ட நின்று பார்த்தல் இன்னும் கடினமாகிறது. இந்நிலையிலும், எவ்வளவு தூரம் உண்மையோடு என்னால் அபிப்பிராயம் தெரிவிக்கக்கூடுமோ, அவ்வளவுக்கு என் அபிப்பிராயத்தைத் தெரிவிக்கிறேன்.

"நான் இப்புத்தகத்தை விரும்புகிறேன். இது மிக எளிய நடையில் அமைந்து படிப்பவரைத் தன் வசப்படுத்துகிறது; நடையின் உயர்வுக்கு இதுவே அத்தாட்சி. ஒருவர் தன்னைப் பற்றித் தானே எழுதும்போது, பகட்டும், போலித் தன்மையும் இல்லாதிருப்பது கஷ்டம். நீ அவற்றை விலக்கியிருக்கிறாய். நடையின் இயற்கையான ஓட்டமும், சுயேச்சைத் தோற்றமும் வாசகரைத் தூண்டுகின்றன. எழுத்து, உயர்ந்த முறையைப் பெற்றிருக்கிறது. அநேக பகுதிகள் உருக்கமாகவும், அழகாகவும் எழுதப்பட் டிருக்கின்றன. உருக்கம், அழகு இவைகளின் உச்சியிலிருந்து இறங்கிய பகுதிகளும் வரவேற்கத்தக்கவையாக இருக்கின்றன. ஏனெனில், மென்மதுர வாசகங்களுக்குப் பின்னால், தன்னை மறைக்கமுயலாது, உன் மனத்திலுள்ளதை உள்ளவாறு கூற முற்படும் முயற்சியையும், கபடமற்ற மனத்தையும் அவை வெளிப்படுத்துகின்றன. நீ படம் வரைய எடுத்த திரைச்சீலை சுருக்கமானது; அதற்கேற்ற சட்டத்தைத் தேர்ந்தெடுத்துக்கொண்டாய். வரைய எடுத்துக்கொண்ட பொருளோ, சிறப்பாக ஒரு குடும்ப வரலாறு; அதுவும் தொடர்புள்ள ஒன்றாக இல்லாமல், தனித்தனியான வரலாறுகளைப் பொதுப்படக் கூறப்பட்டிருக்கின்றது. சுயசரிதையிலும், பிற சரிதையிலும் இதயப் பகுதியாக நிற்கும் உணர்ச்சிப் போராட்டங்களை நீ ஆழ்ந்து வரையவில்லை. ஆனால், அவைகளில் ஈடுபடுவது, இப்புத்தகத்தின் நோக்கத்திற்கு அப்பாற்பட்டதாகும். மேலும், அது உன்னை எல்லாவிதமான சங்கடங்களிலும் சிக்கவைத்திருக்கும்.

ஒரு குறிப்பிட்ட உருவத்தையும், குறிப்பிட்ட அமைப்பையும் நீ தேர்ந்தெடுத்துக்கொண்டது மிக நல்லதாயிற்று.

"இந்தப் புத்தகத்தில் திருப்தியடையவும், இதனால் பெருமைகொள்ளவும் உனக்கு உரிமை யிருக்கிறது என்று நான் நினைக்கிறேன். நம்மைத் தீயூழ் துரத்திவருகிறதென்று கூறுவதைப்போன்ற ஒரு துயரச் சாயை, புத்தகம் முழுவதும் படிந்திருக்கிறது; அது, உன்னுடைய மனத்தின் உண்மையான பிரதிபிம்பம்; ஒருக்கால், அநேக மனங்களின் பிரதிபிம்பங்களாக இருக்கவுங்கூடும். சென்ற கால நிகழ்ச்சிகளைத் திரும்பிப் பார்க்கும்போது, இச்சாயை இயற்கையாக ஏற்படுவதே. இப்புத்தகத்தின் தலைப்பு கூறுவதுபோல், அந்த விதிக்கு ஓர் அறைகூவல் ஆங்காங்கு காணப்படுகிறது; அதுதான் சரி. ஏனெனில், இவ்வரலாறு ஏதாவது ஒரு பொருளுடையதா யிருப்பின், அது இதுவே: நாம் தொடர்ந்து விதியை அறைகூவிப் போரிட்டு, அதனுடைய பதிலையும் முணுமுணுக்காமல் ஏற்றிருக்கிறோம். இப்போராட்டத்தைத் துவங்கியது நாமே; விதி யல்ல. வருங்கால நிகழ்ச்சிகளைக் காணும் முன்னறிவு நமக்கு அளிக்கப்படாவிடினும், அவைகளின் முடிவுகளையும், பின்விளைவுகளையும் நாம் உணரத் தவறியதில்லை. வாழ்க்கை ஒவ்வொரு சமயம் கடுமையாகவும், வேதனையாகவும் இருந்திருப்பினும், நம்மை ஆச்சரியத்தில் ஆழ்த்தவோ, வெருட்டவோ முடிந்ததில்லை. இந்த மனப்போக்கில் எவ்வளவு தூரம் வெற்றி கண்டோமென்பது, அதில் பாத்திரங்களாக ஈடுபட்டுள்ள நம்மால் மதிப்பிடுவதோ, சொல்வதோ முடியாது.

"உன்னுடைய புத்தகம் ஆங்காங்கே உயிர்த்துடிப்புள்ளதாக இருக்கிறது. அநேக உருவங்கள் என் மனத்தில் உயிர்பெற்றெழுந்து கண்முன் தோன்றின. சிறிதே குடும்ப பாசமும் என்னை இறுகப்பற்றியது. கிட்டத்தட்ட நமக்கு அயலாராக உள்ளோரிடம் இப்புத்தகம் எத்தகைய உணர்ச்சியை உண்டாக்கும் என்பதை நான் அறியேன். நம்மைப் பற்றிச் சிரத்தைகொண்டு, ஏராளமான மக்கள் நமக்குக் கௌரவத்தை அளிக்கிறார்கள் என்பது மெய். அவர்களுக்கு, நீ எழுதிய வரலாறு சுவையூட்டும். ஓரளவுக்கு இவ்வரலாறு, மற்றோரது வரலாறுகளைக் குறிப்பிடுவதாகவும் இருக்கிறது.

"இந்நூலில் வரும் மனிதர்களோடு, நெடு நாட் தொடர்புகொண்ட ஒருவருக்குள்ள மதிப்போடும், ஆர்வத்

தோடும் மகமது இதைப் படித்தார்; அவர், இதை ஆராய்ச்சிக் கண்ணோடும் படித்தார். வெகுவாக இதை விரும்பினார். இதிலுள்ள சில பகுதிகளை அவரால் மறக்க முடியாது. இனியும், தொடர்ந்து எழுதிவருவா யானால், நீ, விரைவில் சொற்கலைவல்லவளாக வரக்கூடு மென்று அவர் கூறுகிறார். மகிழ்ச்சிச் சம்பவங்களைக்காட்டிலும், துயரச் சம்பவங்களை நீ அழகாக வரைகிறாய். அவருடைய அபிப்பிராயத்தின்படி அத்திறமையே உண்மைக்கலைஞருக்கு அடையாளம். ஒரே இரவில் புத்தகத்தை முடித்துவிட்டு, அவர், கவலை நிறைந்த நெஞ்சும், நீர் நிறைந்த கண்களு மானார். இந்திய மாதர், தமது உற்றார் உறவினர்மீது பொழியும் தன்னலமற்ற அன்பின் உண்மையான அறிகுறியாக இப்புத்தகம் அமைந்துள்ள தென மேலும் அவர் கூறுகிறார்.''